## உள்ளுறை

# இந்நூலின் கட்டுரைகள் வெளிவந்த பத்திரிகைகள் முதலியன

| | |
|---|---|
| தொல்காப்பியர் : | |
| பிறப்பகம் | வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அறுபதாம் ஆண்டுவிழா மலர் |
| சமயம் : 1 | செந்தமிழ் |
| " : 2 | செந்தமிழ் |
| காலம் : 1 | டாக்டர். குஞ்ஞன் ராஜா அன்பளிப்பு மலர் |
| கபிலர் | இலக்கியப் பூந்துணர் |
| திருவள்ளுவர் : | சித்திர வாசகம் |
| திருநாள் | செந்தமிழ் |
| காலம் | அகில இந்திய ரேடியோ, செந்தமிழ் |
| மாணிக்கவாசகரும் மலைநாடும் | திரு. வி. உலகநாதமுதலியார் மணிவிழா மலர் |
| கம்பர் : காலம் | அகில இந்திய ரேடியோ, செந்தமிழ் |
| கம்பர் திருநாள் | செந்தமிழ் |
| புகழேந்தியார் | சித்திரவாசகம் |
| பவணந்தி முனிவர் | கலைமகள் |
| பரிமேலழகர் | அகில இந்திய ரேடியோ, செந்தமிழ் |
| மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை | கலைமகள் |

| | |
|---|---|
| சி. வை. தாமோதரம் பிள்ளை | ஈழகேசரி |
| ஆசிரியர் சுந்தரம்பிள்ளை: | |
| வாழ்க்கை | குமரிமலர் |
| தமிழ்த் தொண்டு | வசந்தம் |
| வி. கனகசபைபபிள்ளை | அகில இந்திய ரேடியோ, செந்தமிழ் |
| டாக்டர் சாமிநாதையா | |
| தொண்டின் பெருமை | செந்தமிழ் |
| மகாவித்வான் | |
| ரா. ராகவையங்கார் | கலைமகள் |
| தேசியகவி சுப்பிரமணிய பாரதி | |
| வாழ்க்கை | சித்திரவாசகம் |

**மற்றவை புதிதாக எழுதப்பட்டன.**

# முன்னுரை

தமிழ் இலக்கிய சரிதத்தில் பெருமதிப்பிற்குரிய சில பெரியோர்களைக் குறித்து, வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பத்திரிகைகளில் நான் எழுதி வெளியிட்ட கட்டுரைகளுள் ஒரு சிலவற்றை இந்நூலில் தொகுத்துள்ளேன். இப்பெரியோர்களில் இருவர் இலக்கண ஆசிரியர்கள்; ஒன்பதின்மர் கவிஞர்கள்; ஒருவர் உரைகாரர்; இருவர் பதிப்பாசிரியர்; ஆராய்ச்சியாளர் இருவர். கவிஞரும் ஆராய்ச்சியாளருமாக விளங்கிய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை ஒருவர். கவிஞரும், உரைகாரரும், ஆராய்ச்சியாளருமாக விளங்கிய ரா. ராகவையங்கார் ஒருவர்.

கவிஞர்களுள் நீதிநூற் கவிஞர், சமயக் கவிஞர், காவியக் கவிஞர், நாடகக் கவிஞர், திணைப்பொருட் கவிஞர் (Lyric poet), தேசிய கவிஞர், பண்பாட்டுக் கவிஞர் என்ற பலவகையினரும் இக் கட்டுரைத் தொகுதியில் இடம் பெற்றுள்ளனர். இனி ஆராய்ச்சியாளரில், இலக்கிய ஆராய்ச்சியாளர், சரித ஆராய்ச்சியாளர் என்ற இருவகையினரும் காணப்படுவர்.

தமிழிலக்கிய சரிதத்தில் பெருமை பெற்று விளங்கும் ஒரு சில ஆசிரியர்கள் இத் தொகுதியில் கொடுக்கப்படவில்லை. உதாரணமாக நக்கீரர், இளங்கோ வடிகள், மூவர் முதலிகள், ஆழ்வாராதியர், திருத்தக்க தேவர், தோலாமொழித் தேவர், செயங்கொண்டார், சேக்கிழார் முதலியோர்களைக் கூறலாம். இவர்களுள் ஒரு சிலரைக் குறித்து ஒரு சில கட்டுரைகள் எழுதி

வெளியிட்டுள்ளேன். இவைகளைத் திரட்டி, மற்றையோர் களையும் பற்றி ஆராய்ந்து எழுதிச் சேர்த்து வேறொரு கட்டுரைத் தொகுதி வெளியிட எண்ணியுள்ளேன்.

தொல்காப்பியர், திருவள்ளுவர் என்ற இருவரையும் பற்றிய கட்டுரைகளில்*, இவர்கள் வாழ்ந்த காலத்தைக் குறித்துச் சற்று விரிவாய் ஆராய்ந்துள்ளேன். இவ் ஆராய்ச்சியின் துணிபுகள் தற்காலத்துப் பலராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட முடிபுகளுக்கு மாறாகவுள்ளவை. இதுவரையும் இவர்களைப் பற்றி எழுந்த ஆராய்ச்சிகள் தக்க முறையைப் பின்பற்றி நிகழ்ந்தன என்று என்னால் கருதக்கூடவில்லை. சான்றுகள் காட்டும் நெறியில் செல்லாது அபிமானம்பற்றி மேற்கொண்ட முடிபுகளே பெரும்பாலும் வெளிவந்துள்ளன.

வள்ளுவர் காலத்தைக் குறித்து நான் எழுதிய கட்டுரையொன்றினை மறுத்து, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய திரு. S. சோமசுந்தர பாரதி அவர்கள் செந்தமிழில் (தொகுதி 45 பகுதி 1, 2) கண்டனம் ஒன்று எழுதியிருக்கிறார்கள். அக்கண்டனத்தில் எனது துணிவினை மாற்றுதற்குரிய சான்று யாதும் தரப்படவில்லை. கம்பர், பவணந்தி முனிவர், பரிமேலழகர் முதலியோரது காலங்களைப்பற்றிய ஆராய்ச்சியும் இத் தொகுதியில் உள்ளன.

---

* 36-ம் பக்கத்தில 4-ம் வரியில் கி. பி. என்பதனை கி. மு. எனவும், 48-ம் பக்கம் இறுதி வரியில் 5-ம் என்பதனை 6-ம் எனவும், 72-ம் பக்கம் 6-ம் வரியில் 1072 என்பதனை 1071 எனவும் திருத்திக் கொள்க. 39-ம் பக்கம் 18-ம் வரியில் '4 அல்லது' என்பதனை நீக்கிவிடுக.

கால ஆராய்ச்சி பயனற்றது என்று கருதுபவர்கள் இன்றும் சிலர் உள்ளார்கள். நூல் தோன்றிய காலத்தை அறிந்தாலன்றி அந்நூலிலுள்ள கருத்துக்களை நாம முறறிலும் அறிந்து கொள்ள முடியாது. இலக்கிய சரிதமும் அமைக்க முடியாது. இலக்கியச் சான்றுகளால் உணரப்படும தேச சரித்திரமும் வரையறை எய்தமாட்டாது. தமிழ்மொழியின் சரித்திரமும் அறிதற்கு இயலாததாகும். தமிழ் நாட்டில் உலவிய கருத்துக்களின் வரலாறும் (History of Tamilian Thought) நாகரிக வரலாறும் மயக்கத்திற்கிடமாகவே இருக்கும். ஆதலால், கால ஆராய்ச்சி மிகவும இன்றியமையாததாகும்.

மேல்நாட்டு ஆசிரியர்களின் முறையைப் பின்பற்றி நல்ல நெறியில் அமைக்கப்பட்ட தமிழிலக்கிய சரிதம் இனிதான் எழுதப்பெற வேண்டும். இன்றுவரை வெளிவந்துள்ளனவற்றில் ஒரு சிலவே ஒருவாறு கொள்ளத்தக்கன. அவைகளிலும் பற்பல குறைகள் உள்ளன. செவ்வையான தமிழிலக்கிய சரிதத்திற்குப பயன் படலாம் என்ற நோக்கத்தோடு இக்கட்டுரைகள எழுதப் பட்டன. அந்நோக்கம சிறிதளவேனும் கைகூடுமாயின், அதுவே எனது முயற்சிக்குப பெரியதொரு கைம்மாறு ஆகும்.

இந்நூலின் கட்டுரைகள் பல வெளிவநத பத்திரிகை முதலியவற்றின் விவரம் தனி இடத்தில் தந்திருக்கிறேன். இவற்றின் தலைவர்களுக்கு எனது நன்றி.

கவிமணியின் நூற்பதிப்புக்கள் சிலவற்றிற்கு நான் எழுதிய முன்னுரைகளின்று ஒரு சில வாக்கியங்கள்

இறுதிக் கட்டுரையில் உரிய இடங்களிற் சேர்க்கப்பட்டுள்ளன.

எனது இலக்கிய முயற்சிகளில் பிரதி செய்தல், ஒப்பு நோக்குதல் முதலிய பல உதவிகள் செய்து வரும் வித்வான் - மு. சண்முகம் பிள்ளை இக்கட்டுரைகளைப் பதிப்பித்தலிலும் ஒத்துழைத்தனர். அவருக்கு என் அன்பு நிறைந்த ஆசி.

வடமொழி விஷயங்களைப் பற்றிய அளவில் எனக்கு உதவி புரிந்தவர்கள் சென்னை ஸர்வ கலாசாலையில் ஸீனியர் லெக்சரராக இருந்து காலஞ் சென்ற டாக்டர் T. R. சிந்தாமணி அவர்களும், இப்பொழுது அப்பதவியில் அமர்ந்திருக்கும் டாக்டர் V. ராகவன் அவர்களும் ஆவர். இவ்விருவருக்கும் எனது மனமார்ந்த நன்றி உரியதாகின்றது.

இந்நூலை அச்சியற்றத் தொடங்கிச் சுமார் இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. பற்பல இடையூறுகளால் காலம் தாழ்க்க நேரிட்டது. எனினும், ஊக்கங் குன்றாது அச்சியற்றி வெளியிட்ட 'குமரிமலர்' காரியாலயத்தாருக்கு எனது நன்றி.

சென்னை
1 - 12 - 1948

**எஸ். வையாபுரிப் பிள்ளை**

# தமிழ்ச் சுடர் மணிகள்

## தொல்காப்பியர்

### பிறப்பகம்

இப்பொழுதுள்ள தமிழ் நூல்கள் அனைத்தினும் மிக்க தொன்மையதாகப் பலரும் கருதுவது தொல்காப்பியம். இதை இயற்றிய ஆசிரியர் எந்தப் பிரதேசத்தைச் சார்ந்தவரென்று தெரியத் தமிழ் மக்கள் பெரிதும் விரும்புவார்கள். இவ்விஷயத்தை ஆராய்ந்து ஐயந்திரிபற்ற முடிவைக் காணுதற்குரிய சான்றுகள் மிகுதியாக இல்லை. ஆனால், கிடைக்கும் சிற்சில சான்றுகளைப் பயன்படுத்துவது ஆராய்ச்சியாளன் கடமை.

தொல்காப்பியரோடு ஒருங்கு கற்ற ஒருசாலை மாணுக்கராகிய பனம்பாரனர் தமிழ்ப் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கு எழுதியுள்ள பாயிரம் தமிழறிஞர்களால் நன்கு ஆராயப்பட்டதே. அப்பாயிரத்திலே,

> நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
> அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
> அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து

என்று காணப்படுகிறது. இங்கே அதங்கோட்டாசான் என்று ஓர் ஆசிரியர் குறிக்கப்படுகிருர். ‘அதங்கோடு’ என்னும் ஊரிலுள்ள ஆசிரியன் என்பது பொருள். ‘அதங்கோடு’ என்பது எங்கே உள்ளது?

இப்போதுள்ள மலையாள ராச்சியத்திற்கு ஆங்கிலத்தில் 'Travancore' என்று பெயர். இது 'திருவாங்கோடு' என்பதன் திரிபு என்பது நன்கறியப் பட்டதொன்றே. 'திருவாங்கோடு' என்பது எதன் திரிபு என்று அறிதல் வேண்டும். ஒருசாரார் இது 'திருவாழுங்கோடு' என்பதன் திரிபாக இருத்தல் வேண்டுமென்பர். இதற்குக் காரணம் இத்தொடர்க்கு உறுப்புப் பொருள் செம்மையாய் அமைந்துள்ள தென்பதும், சுதேசாபிமானமுமேயாகும். 'திருவாழுங் கோடு' என்பதற்குப் பழைய நூல்-வழக்கு இல்லை யென்பது மிக்க வன்மையுள்ள ஒரு தடையாகும். இத்தொடரே ஆதாரமற்றிருப்பதால், இதனை வட மொழி புணர்த்து 'ஸ்ரீ வாழுங்கோடு' எனத் திரித்து வழங்குதல் குறித்து ஆராய்ச்சி செய்யும் அவசியமே இல்லை.

திருவாங்கோடு என்பதனைத் 'திருவிதாங்கோடு' எனச் சிலவிடங்களிலும், 'திருவதாங் கோடு' எனச் சிலவிடங்களிலும் வழங்குகின்றனர். இராச்சியத் திற்குப் பெயராக வழங்குவது மாத்திரமேயன்றி, ஓர் ஊர்க்கும் இது பெயராக வழங்கி வருகிறது. ஊர்ப் பெயரே இராச்சியத்திற்கும் பெயராக இருப் பதை நோக்கினால், இவ்வூர் மிகப் பழமையானது என் பதும், இவ் இராச்சியத்தின் தலைநகராக இருந்த தாகலாம் என்பதும் நாம் ஊகிக்கத் தக்கனவே. இவ்வூகத்திற்கிணங்க இவ்வூர் பண்டைக்காலத்தில் இராச்சியத்தின் தலைநகராக விளங்கியது என்றும், இன்றும் பழைய கோட்டை மதிலின் சின்னங்கள் காணக் கிடக்கின்றன என்றும், ஸ்ரீ நாகமையா அவர்கள் தமது 'Travancore State Manual' என்ற நூலிற் கூறுகிறார்கள். இதனால் திருவிதாங்கோடு

தலைமையான ஒரு தொன்னகரம் என்பது உணரக் கிடக்கின்றது.

'திருவதாங்கோடு' என்பதில் 'திரு' என்ற அடைமொழியை நீக்கினுல்எஞ்சியுள்ள பெயர் 'அதங்கோடு.' இப்பெயருடைய ஓரூர் உளதாகவும் அறிகின்ருேம். ஆகவே, அதங்கோட்டாசான் என்பவர் 'திருவாங்கோடு' அல்லது 'அதங்கோடு' என இன்று வழங்கும் ஊரினர் என்று கொள்ளலாம். தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் 'அதங்கோடு' என்ற பெயருடைய ஊர் வேருென்று இருப்பதாகத் தெரியவில்லை என்பதும் இங்கே குறிக்கத்தக்கது.

இனி இவ் ஆசான் அகத்தியரின் பன்னிரு மாணுக்கருள் ஒருவராகவும், தொல்காப்பியரோடு உடன் கற்றவராகவும் இருந்தனர். இவ்வாறு திராவிடப் பிரகாசிகை கூறுகிறது (இரண்டாம் பதிப்பு பக். 48). இங்ஙனம் கூறுதற்குரிய ஆதாரம் யாதென்று இப்போது விளங்கவில்லை யெனினும், ஐயனுரிதனுரும், இளம்பூரணரும், நச்சினுர்க்கினியரும் அகத்தியர்க்கு மாணுக்கர் பன்னிருவர் எனக் குறித்துள்ளார்கள். நச்சினுர்க்கினியர் எழுதிய பாயிர வுரையிலிருந்து அதங்கோட்டாசான் அகத்தியரது மாணுக்கருள் ஒருவர் என்பதும், தொல்காப்பிய நூலைக் கேட்டற்குரிய கல்வி முதிர்ச்சியும், பிற தகுதிகளும் வாய்ந்தவர் என்பதும், பெரும்பாலும் தொல்காப்பியரோடு உடன் கற்றவராக இருக்கக்கூடும் என்பதும் குறிப்பாக உணர்ந்து கொள்ளலாம்.

அதங்கோட்டாசானைப் போலவே, தொல்காப்பியரும் ஒருகால் திருவதாங்கோட்டுப் பிரதேசத்தினராக இருத்தல் கூடுமா?

இக் கேள்வியின் விடையைத் தெளிதற்கு நூலின்கண் யாதேனும் சான்று உளதோ என்று நோக்கும்பொழுது, ஒரு சில சூத்திரங்கள் நம்முன் எதிர்ப்படுகின்றன. அவையாவன :

பனியென வரூஉங் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை யாகும்.
மழையென் கிளவி வளியியல் நிலையும்.
வெயிலென் கிளவி மழையியல் நிலையும்.

(தொல். எழுத். 241, 287, 378)

இச்சூத்திரங்கள் பனி, மழை, வெயில் என்பன வேற்றுமை முடிபில் முறையே பனியத்து, மழையத்து, வெயிலத்து என அத்துச்சாரியை பெற்று வருதலை உணர்த்துகின்றன. பனியத்துக்கொண்டான், மழையத்துக் கொண்டான், வெயிலத்துக் கொண்டான் : என உதாரணங்களும் காட்டப்பட்டுள்ளன. இச் சொற்கள் இங்ஙனம் வருதல் எங்கே காணப் படுகிறது ?

தமிழ் வழங்கும் நாட்டில் இப்பொழுது ஓரிடத்துப்போலும் இவ் வழக்குக் காணப்படுமாறில்லை. இற்றைக்குச் சுமார் 350 ஆண்டுகட்கு முன்பும் இவ் வழக்கு இல்லை என்பது அக்காலத்துத் தோன்றிய இலக்கண விளக்கத்தில் மேற்காட்டிய விதியமைந்த சூத்திரம் இன்மையால் உணரலாகும். நன்னூலிலும், தொல்காப்பிய நெறியையே போற்றிச் செல்லும் நேமிநாதத்திலும் இவ்விதி காணப்பெறவில்லை. எனவே இவற்றின் காலமாகிய 12-ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் இவ்வழக்கு இல்லையெனல் தெளிவாம். 11-ம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட வீரசோழியத்திலும் இவ்விதி குறிக்கப்படவில்லை. எனவே

அக்காலத்திலும் இவ்வழக்கு இல்லை. 10-ம் நூற்றாண்டிற்கு முன்பு தோன்றிய ஐம்பெருங் காப்பியங்களிலும், தேவாரம், நாலாயிரம் முதலியவற்றிலும் இவ்வழக்குக் காணுமாறில்லை. பதினெண்கீழ்க்கணக்கு நூற்களிலும் அவ்வாறே. முடிவில் தொல்காப்பியர் காலத்துக்கு மிக நெருங்கிய காலத்தவாகிய சங்க இலக்கியங்களிலும் இவ்வழக்கிற்கு ஆதாரமில்லை.

சங்ககாலந் தொட்டு இன்றுவரை தமிழில் காணாத இவ்வழக்கு எந்தப் பிரதேசத்தில் பண்டைக் காலத்தில் பயின்று வந்திருத்தல் கூடும்? தமிழோடு நெருங்கிய தொடர்புள்ள யாதானுமொரு மொழியில் இவ்வழக்கு இப்பொழுது காணப்படுமாயின், அம்மொழி வழங்கும் பிரதேசத்தினை யடுத்துப் பண்டைக்காலத்திலும் இவ்வழக்குப் பயின்றிருந்ததெனல் பொருத்த முடைத்தாகத் தோன்றுகிறது.

அம்மொழி யாது?

மலையாள மொழி ஒன்றிலேயே இவ்வழக்குக் காணப்படுகிறது. 'பனியத்துப்போகருதெ' 'மழையத்துப் போகருதெ' 'வெயிலத்துப் போகருதெ' என்பன போன்ற வழக்குக்கள் இப்பொழுதும் கேட்கப்படுகின்றன. இங்ஙனம் வழங்கும் பிரதேசத்தில் பண்டைக்காலத்தில தமிழ் மொழியே வழங்கி வந்ததென்பதும், மிகப் பிற்பட்ட காலத்தில் இப் பிரதேசத்து மொழி தமிழின் பிராந்திய மொழியாய் மாறி, மலையாள மொழியாகப் பரிணமித்ததென்பதும் சரித்திரம் ஒப்பிய உண்மைகள்.

இப்பிற்கால மலையாளப் பிரதேசத்தை அடுத்து வாழ்ந்து வந்தவரே மேற்காட்டிய இலக்கண விதிகளை அமைத்தனர் என்று கருதுதல் தக்கதேயாகும்.

எனவே தொல்காப்பியர் திருவிதாங்கோட்டுப் பிரதேசத்தைச் சார்ந்தவராக இருக்கலாம் என்ற கருத்துச் சற்றே உறுதியடைகின்றது.

ஆனால், சிறிதும் ஐயப்பாடின்றி இம்முடிவு ஒப்புக் கொள்ளப்பட வேண்டுமாயின், இன்னும் சிறந்த சான்றுகள் வேண்டும்.

தொல்காப்பியரைக் குறித்து நாம் அறிந்தன மிகச் சிலவே. நச்சினார்க்கினியர் புராணக் கதை யொன்று நம்மவர் மகிழ்ச்சிக்கென எழுதிவைத்தனர் நவீன ஆராய்ச்சியாளர் சிலர் 'காப்பியர்' என்ற பெயரைக் கொண்டு சில வரலாறுகளை உய்த் துணர்ந்து எழுதினர். ஆனால் தொல்காப்பிய நூலி னகத்தே பல சான்றுகள் இருத்தல் ஒருதலை. அவற் றைச் சரித்திரக் கண்கொண்டு நோக்குதல் வேண் டும். உரையாளர்களைத் துணையாக மட்டும் கைக் கொள்ளுதல் வேண்டும். இம்முறையிலே ஆராய்வோ மாயின், ஆராய்ச்சி பெரிதும் பயன்படுவதாகும். தொல்காப்பியரைக் குறித்துப் பல அரிய செய்திகள் புலப்படக்கூடும்.

## சமயம் : 1

தமிழ்மொழிக்குரிய பேரிலக்கணம் வகுத்த தொல்காப்பியர் இன்ன சமயத்தைச் சார்ந்தவரென்று அறிதற்கு முயன்றுள்ளார் ஒரு சிலரே ஆவர். 72 ஆண்டுகட்கு முன்னர், 1875-ம் ஆண்டில் டாக்டர் பர்ணல் என்பவர் தாம் எழுதிய 'ஐந்திரம் என்ற வடமொழி வியாகரணம்' என்னும் ஆராய்ச்சி நூலின் கண்ணே தொல்காப்பியர் பௌத்த ராகவேனும், ஜைனராகவேனும் இருத்தல் வேண்டுமெனக் கூறிச் சென்றார். ஆனால் அவ்வாறு துணிதற்குத் தாம் கைக்கொண்ட நியாயங்கள் இன்னவென அவர் சுட்டுதல் தானும் செய்யாதொழிந்தார். 1914-ம் வருடத்தில் வெளிவந்த 'தொல்காப்பியர் சரித வாராய்ச்சி என்ற ஒரு* சிறுநூலில் 'இவரது சமயம் சித்தாந்த சைவமே யாகும்' என்னுமுடிபு காணப்படுகின்றது. இதற்குத் தரப்பட்டுள்ள நியாயங்களை இங்கே நான் விசாரிக்கப் புகவில்லை. சில நூல்களை நோக்கி வரும்போது எனக்குத் தோன்றின ஒரு விஷயத்தை மட்டும் தமிழ்நூற் சரிதம் வல்லார் முன்பு சமர்ப்பிக்க எண்ணுகிறேன்.

தொல்காப்பியரோடு ஒருசாலை மாணாக்கராகிய பனம்பாரனார் தாம் செய்த பாயிரத்துள் அத் தமிழ்ப்

---

1920-ல் செந்தமிழில் (18, 9) இக்கட்டுரை வெளிவந்தது.

*இந்நூல் திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியரா யிருந்து, இப்பொழுது திருவாவடுதுறை ஆதீனத்து மகா வித்துவானாக விளங்கும் ஸ்ரீமத் சிதம்பர ராமலிங்கம் பிள்ளையவர்கள் இயற்றி வெளியிட்டது.

பெருஞ் செல்வரைப் 'பல்புகழ் நிறுத்த படிமை யோன்' என்று சிறப்பித்துக் கூறுகிறார். 'படிமை யோன்' என்னுஞ் சொல்வழக்கு யாண்டு உரியது? இச்சொல்லுக்குத் 'தவவொழுக்கத்தினை யுடையான்' என்று இளம்பூரணவடிகள் பொருள் கொண்டனர். இப்பொருள் எங்கே பெறப்பட்டது?

'படிமை' என்ற சொல் எம்மொழிக்கு உரிய தென வரைந்துணர்ந்து கொண்டாலன்றி மேலே தரப் பட்ட வினாக்களுக்கு முற்றிய விடை தருதல் கூடாது.

இச்சொல் எம்மொழிக்கு உரியதாயிருத்தல் கூடும்? பண்டைக் காலத்தில் தமிழ்மொழியில் வந்து விரவப்பெற்ற பிறசொற்களுள்ளே பெரும் பாலன வடமொழிச் சொற்களாயுள்ளன. ஆதலால் இச் சொல்லும் வடமொழிக்கு உரியதாதல் வேண்டு மென ஊகித்தல் தகும். ஆனல், பிறிதொரு விஷயம் இங்கே சிந்தனை செய்யற்பாலது வடமொழியினின் றும் பழந்தமிழ் நூல்களில் எடுத்து வழங்கப்பட்ட சொற்கள், பெரும்பான்மையும் பிராகிருத (பாகதம்) வழி வந்துள்ளனவாகக் காணப்படுகின்றன. உதாரணமாகப் 'பாசி' 'ஊசி' (புறம்-229) முதலிய சொற்களை நோக்குக. இவை முறையே 'கிழக்கு' 'வடக்கு' என்று பொருள்படும் வடமொழிச் சொற் களின் பாகதச் சிதைவாம். வடமொழியினின்று சொற்களை நேரே எடுத்தாளாது இவ்வாறு பாகதச் சிதைவுகளை யெடுத்துப் பிரயோகித்தற்குத் தக்க காரணமுண்டு. அந்நியமொழிக்குரிய சொல் என்னும் உணர்ச்சி சிறிதும் உண்டாகாவண்ணம் தமிழ்மொழி யின் ஒலியியல்போடு முற்றும் பொருந்துமாறு சொற் களைத் திரித்துக்கோடல் பண்டையோர் வழக்கா யிருந்தது. இதற்குப் பிராகிருதம் அனுகூலமாய் நின்றது. வரவர இந் நியதியை நமது தமிழ் மக்கள்

நெகிழ்ந்து செல்ல விட்டமையால், வடமொழியி னின்று நேரே பெறப்பட்ட சொற்களின் தொகை நாளடைவிற் பெருகிவருவதாயிற்று. தற்காலத்தே வடமொழிச் சொற்களை யெடுத்தாளுதற்கண் நியதி யொன்று வேண்டுமெனை நினைப்பாரும் அரியராயினர்.

ஆகவே, 'படிமை' என்ற சொல்லைப் பிராகிருதத் திற் காணுவோமாயின் அது வியப்பிற்கிடமாகாது. ஆனால் இச்சொல்லினது உருவம் ஈற்றிற் சிறிது மாறு பட்டிருத்தல் வேண்டுமென எளிதின் உணரலாம் பாலை என்பது 'பாலா' என்பதன் தமிழ் உருவம்; மாலை என்பது 'மாலா' என்பதன் தமிழ் உருவம். இவை போன்றே படிமை என்பது 'படிமா' என்பதன் தமிழ் உருவமாதல் வேண்டும்.

பிராகிருதத்தில், 'படிமா' என்ற சொல் உளதா? 'தவவொழுக்கம்' என்ற பொருளைக் குறிக்கவல்லதா?

அகத்திணையிய லுரையிலே (சூத். 30) இளம் பூரணவடிகள் 'படிமை' என்பது 'ப்ரதிமா' என்னும் வடமொழித் திரிபு எனக் கொண்டுள்ளமை அறியத் தக்கது. இவ்வட சொல் 'படிமா' என்றே பிராகிரு தத்தில் வரற்பாலது. ஆகவே, 'படிமா' என்ற சொல் லுளதாக அறிந்தேன். அதற்குத் தவவொழுக்கம் என்ற பொருள் இருப்பதாகத் தெரியவில்லை. இளம் பூரணரும் இங்கே 'படிமை' என்பது 'தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கண் செய்து அமைத்த தேவர் மேல் வந்தது' என்றே விளக்கினர். எனவே 'விக்கிரகம்' என்ற பொருளே இங்கு இவர் கொண் டது. இதற்கும் தவவொழுக்கம் என்பதற்கும் ஓர் இயைபும் இல்லை. நமது வைதிக சமயநூல்களில் 'படிமா' என்ற பிராகிருதமேனும் அல்லது அதற்குச் சமமான வடசொல்லேனும் 'தவவொழுக்கம்' என்ற

தனை உணர்த்துவதாய்ப் பயின்றுவரவில்லை என்பதூஉம் தெளிந்துகொண்டேன்.

இவ்வாறிருக்க, சிலகாலத்திற்கு முன்னர் ஜைன சமயத்தை விளக்கும் ஆங்கில நூலொன்றை (The Heart of Jainism by Mrs. Sinclair Stevenson) யான் படிக்க நேர்ந்தது. அதன்கண் 'படிமா' என்ற பிராகிருதச்சொல் மேற்குறித்த பொருளை உணர்த்துவதாகக் காணப்பட்டது.

மோக்ஷம் எய்துதற்குரிய மார்க்கத்தில், பதினான்கு நிலைகள் உள்ளனவாக ஜைன சமயத்தவர்கள் கருதுகின்றார்கள். இந்நிலைகளைக் குணஸ்தானங்களென்று கூறுவர். இவற்றுள் முதலைந்து நிலைகளும் இல்லறத்தோர் துறவறத்தோர் என்ற இருதிறத்தார்க்கும் பொதுப்பட உரியன. ஆறுமுதல் ஏனைநிலைகள் துறவறத்தோர்க்கு மட்டும் உரியன. இல்லறத்தில் நிற்பார், முதலைந்து நிலைகளும் கைவரப்பெற்ற பின்னர், உண்மைத் தீர்த்தங்கரர்மாட்டும் உண்மை யாச்சாரியர் மாட்டும் உண்மைநூலின் மாட்டும் துளங்காத பக்திவைத்து, பஞ்ச அதிசாரங்களையும் நீத்துப் பன்னிரண்டு விரதங்களையும் அனுஷ்டித்தல் வேண்டும். இங்ஙனம் நின்றோரினும் சிறந்து மேம்பட்டநிலைஎய்த விரும்பும் இல்லறத்தோர் பதினொரு தவவொழுக்கங்களை மேற்கொள்வர். இவ் ஒழுக்கங்கள் 'படிமா' என்று பிராகிருதத்திற் பெயர் பெறும். 'தவம்' என்ற சொல் இல்லறத்தார்க்கும் உரியதாதல் 'நற்றவஞ் செய்வார்க்கிடம் தவஞ்செய்வார்க்கும் அஃதிடம்' (சீவக சிந்-77) என்ற மேற்கோள் நோக்கி உணரலாகும்.

இதனால், 'படிமை' என்பது ஜைனசமய வழக்குச் சொல் என்பதும், அச்சொல் 'தவவொழுக்கம்' என்றதனை உணர்த்துதல் அவ்வொரு சமயநூலின்

கண் அன்றிப் பிற சமயநூல்களில் இல்லை என்பதும் தெளியக்கிடக்கின்றன.

ஆகவே 'பல்புகழ் நிறுத்த படிமையோன்' என்று சிறப்பிக்கப்பெற்ற தொல்காப்பியனார் ஜைனசமயத்தவ ராவரென்பதும், அதன் கண் இல்லறநெறி நின்று சிறந்த தவவொழுக்கங்களை மேற்கொண்டவராவர் என்பதும் உணரலாகும்.

அகத்தியனாரது மாணாக்கருள் ஒருவராகிய அவிநயர் ஜைனர் என்பது மகாமகோபாத்தியாய ஸ்ரீ சாமிநாத ஐயரவர்களால் அவர்களது மயிலைநாதருரைப் பதிப்பிற் காட்டப்பட்டுளது. ஆதலால் தொல்காப்பியரையும் ஜைனரெனக் கொள்வதில் யாதொரு தடுமாற்றமும் உண்டாதற்கில்லை.

இம்முடிபினை வலியுறுத்துதற்குத் தொல்காப்பிய நூலின்கண்ணேயே பிற சான்றுகளும் உள. அவற்றைக் குறித்துப் பின்னர் எழுதுவேன்.

## சமயம் : 2

மேலைஉரையில், தவவொழுக்கம் என்று பொருள் கொள்ளப்பட்ட 'படிமை' என்னுஞ் சொல்லை ஆராய்ந்து தொல்காப்பியர் ஜைனராதல் வேண்டும் எனத் துணிந்தேன். யான் எழுதினவற்றை மறுத்து ஸ்ரீமத்-நவநீதகிருஷ்ணபாரதியவர்களும் செந்தமிழ்ப் பத்திராசிரியரவர்களும் இரண்டு கண்டனவுரைகள் எழுதியுள்ளார்கள். அவைகளைக் குறித்து யான் கூறவேண்டுவனவற்றைப் பின்னர் எழுதுவேன். தொல்காப்பியர் ஜைனராவர் என்பதற்கு அவரது நூலின்கண்ணேயே சான்றுகள் உள என்று எனது உரையின் முடிவிற் சுட்டியிருந்தேன். அச்சான்றுகளில் ஒன்றை இப்பொழுது விவரிக்க எண்ணுகிறேன்.

இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சமயமும் தனக்கே சிறப்பாக உரிய சில மூலதத்துவங்களை வித்தாகக்

கொண்டு முளைத்தெழுந்து தழைத்து நிற்கின்றது. ஒவ்வொரு சமயமும் அதற்கு உரிய தத்துவங்களை, அதன் கொள்கைகளுக்கும் ஆசாரங்களுக்குந் தக்கபடி, பாகுபாடு செய்து வரையறை செய்துகொள்ளும். ஒரு சில தத்துவங்கள் இரண்டு மூன்று சமயங்களுக்குப் பொதுவாய் அமைதலும் ஆகலாம். ஆனால் அவற்றின் உட்பாகுபாடுகள் அங்ஙனம் பொதுவாயிருத்தல் அரிது.

ஜைனர்கள் தமது சமயநூல் மேற்கொண்டுள்ள தத்துவங்களை இரண்டுமுதற் பலவாகப் பிரித்துக் கொள்வார்கள். மிக விரித்துப் பாகுபாடு செய்யுங் கால், தத்துவங்களைப் பத்து என அறுதியிடுவர். அவை யாவன :—

> நந்த நூற்பொருள் தன்மாத்தி காயமும்
> அதன்மாத்தி காயமும் காலா காயமும்
> தீதில் சீவனும் பரமா ணுக்களும்
> நல்வினை யும்தீ வினையும்அவ் வினையாற்
> செய்வுறு பந்தமும் வீடும்இத் திறத்த
>
> (மணிமேகலை XXVII 172-6)

மிகச் சுருங்க உரைக்குமிடத்து, இவையெல்லாம் ஜீவன்' 'அஜீவன்' என்ற இரண்டனுள் அடங்கும். "அத்ர ஸம்க்ஷேபத: தாவத் ஜீவாஜீவாக்யே த்வே தத்வே ஸ்த:" என்று ஸர்வதரிசனஸங்கிரகம் கூறுகின்றது.

இவ்வாறாகவுள்ள தத்துவங்களில், ஜீவன் 'ஸ்தாவரம்' 'திரசம்' என்று இருவகைப்படும். ஸ்தாவரம் - நிலைத்திணைப்பொருள் ; திரசம் - இயங்குதிணைப் பொருள். ஸ்தாவரங்கள் ஐவகைப்படும்: பிருதிவிகாயன், அப்புகாயன், தேயுகாயன், வாயுகாயன், வனஸ்பதி என. வனஸ்பதி என்றது 'மரம் புல் என்பனவற்றை. இந்த ஐவகை ஸ்தாவரங்களும்

ஓரறிவுயிர்களாம்: அஃதாவது இவை பரிசனேந்திரியம் மட்டும் உடையன. 'ஸ்தாவரா: ஸ்பர்சனைகேந்த்ரியா:' என்பது ஸர்வதரிசன ஸங்கிரகம்.

திரசம் ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் எனப் பகுக்கப்படுகின்றது. ஸ்பரிசம், ரஸம் என்ற இரண்டினையும் அறிவன ஈரறிவுயிர்; அவை சங்கு முதலியன. ஸ்பரிசம், ரஸம், கந்தம் என்ற மூன்றினையும் அறிவன மூவறிவுயிர்; அவை எறும்பு முதலியன. ஸ்பரிசம், ரஸம், கந்தம், ரூபமென்ற நான்கினையும் அறிவன நாலறிவுயிர்; அவை வண்டு முதலியன. ஸ்பரிசம், ரஸம், கந்தம், ரூபம், சப்தம் என்ற ஐந்தினையும் அறிவன ஐயறிவுயிர்; அவை விலங்கு முதலியன. இவற்றையெல்லாம் மேருமந்தரபுராணம் தெளிவாய்க் கூறுகிறது:

ஒன்றி ரண்டொரு மூன்று நாலைந்தாய்
நின்ற ஐம்பொறி நெறியின் வாழுயிர்
ஒன்று நீர்மரம் நிலம்நெ ருப்புக்காற்று
என்றிக் காயமைந் தெய்தி வாழுமே

நந்து சிப்பிசங் காதி நாவன;
குந்தெ றும்புகோ பாதி மூன்றன;
அந்து தும்பிவண் டாதி நால; ஐந்து
இந்தி யம்பசு நரகர் தேநரர்

(வச்சிராயுதனனுத்தரம். 10, 11)

கடைசியாய் நிறுவப்பட்ட ஐயறிவுயிர் ஒரு சாரார் கருத்துப்படி இருவகைப்படும்: மனமில்லாதன (அஸம்ஜ்ஞி), மனமுள்ளன (ஸம்ஜ்ஞி) என. விலங்கும் ஒருசார் மக்களும் அஸம்ஜ்ஞியாம். மக்கள் தேவர் நரகர் என்ற இத்திறத்தினர் ஸம்ஜ்ஞியாம். இவற்றையெல்லாம் 'The Heart of Jainism' என்ற நூல் தெளிவாக விளக்குகின்றது.

இதுவரை யான் கூறிய பாகுபாடுகள் அனைத்தையும் அடியிற் காட்டியிருக்கிறேன்.


தத்துவம்
ஜீவன்
அஜீவன்
ஸ்தாவரம்
(ஓரறிவுயிர்)
திரசம்
பிருதிவி காயன்
அப்பு காயன்
தேயு காயன்
வாயு காயன்
வனஸ்பதி
ஈரறி வுயிர்
மூவறி வுயிர்
நாலறி வுயிர்
ஐயறி வுயிர்
அஸம்ஜ்ஞி
ஸம்ஜ்ஞி

இங்ஙனம் உயிர்வகைகளைப் பகுத்துணர்ந்து கோடல் ஜைன சமய ஆசாரத்துக்கு மிக அத்தியாவசியகமாவதாம். கொல்லாவிரதத்தினை இச்சமயத்தினர் பிற அறங்கள் எல்லாவற்றிலும் மிக மேலாக மதித்துள்ளார். ஜைனத் துறவிகளுக்கு விதிக்கப் பட்டுள்ள ஆசாரங்களை நோக்கினால் இதன் உண்மை நன்கு புலப்படும். தாம் நடக்கும்போது தமது கால் பட்டு எறும்பு முதலிய சிற்றுயிர்கள் அழிதல் கூடாதென்று கருதி மயிற்பீலியாற் பூமியிலுள்ளனவற்றை மெல்லென ஒதுக்கிச் செல்லுங் கடப்பாட்டினர் இத்துறவிகள் ; குளிர்ந்த சுத்த ஜலத்தில் உயிரிருப்பதாக எண்ணி அதனை உட்கொள்ளார் ; பேசும்போது காற்றிலுள்ள சிற்றுயிர்கள் வாயிற்பட்டு அழியுமென்று அஞ்சி வாய்மூடி யிட்டுக்கொள்வர். பலபடச் சொல்லியென் ? இவர்களது இறைவராகிய அருகக் கடவுள் தாமும் இக்கொல்லாவிரதம் அநுஷ்டிப்பாராகக் கருதப்படுகின்றார். 'கேள்வியினுங் கொல்லா வதத் தெங்கள்கொற்றவன்' என்பர் அவிரோதியாழ்வார் (திருநூற்றந்தாதி-42). இவ்விரதத்திற் சிறிதும் வழுவாதிருக்கவேண்டுமாயின், எவையெல்லாம் உயிரென்று சொல்லற்குரியன என்பது நன்கு அறியப் படுதல் வேண்டும். ஜீவாஜீவ பேதங்களைத் துறவியாவான் உணர்ந்துகொள்ள வேண்டுவது ஆவசியகம் என உத்தராத்யயனம் கூறுகின்றது. (Sacred Books of the East, Vol XLV. p. 206) இவ்வாறாக, உயிர்வகைகளை ஆராய்தல் ஜிநதர்மத்தின் ஓர் இன்றியமையா நோக்கமாய் முடிந்தது. இதற்கிணங்கவே 'உலகுபுகழ் பெருந்துறவியும் கேவல ஞானப் பெருஞ் செல்வருமாகிய மகாவீரர் ஐம்பெருவிரதங்கள், அவற்றின் உட்பாகுபாடுகள், அறுவகையுயிர்கள் இவைகளைக் குறித்து ஸ்ரமணர்களுக்கும் நிக்கந்

தர் களுக்கும், கௌதமர் முதலாயினோர்க்கும் உபதேசித்தருளினர்' என்று ஆசாராங்க சூத்திரம் கூறுகின்றது. (Sacred Books of the East, Vol. XXII p. 202) திருநூற்றந்தாதியினும் "ஜீவனுள்ளிட்டத்தியைத் தானுள்ளவா றறைந்தாய்" என்று காணப்படுகின்றது. ஈண்டு எழுதியவற்றால் இவ்வகை உயிர்ப்பாகுபாடு ஜிநதர்மம் ஒன்றற்கே பூர்வத்தில் உரியதாயிருந்தமை தெளியலர்கும். பிறசமயங்களுக்கு உரிய பொருட்பாகுபாட்டில் இது காணப்படாமை ஸர்வதரிசன ஸங்கிரகம் நோக்கி அறிந்து கொள்க.

தொல்காப்பியர் தமது பெருநூலின்கண்ணே

ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனொடு நாவே
மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
ஆறறிவதுவே அவற்றொடு மனனே
நேரிதினுணர்ந்தோர் நெறிப்படுத்தினரே
(மரபியல - 27)

புல்லு மரனும் ஓரறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (ஷை 28)

நந்து முரளும் ஈரறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (ஷை 29)

சிதலும் எறும்பும் மூவறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (ஷை 30)

நண்டுந் தும்பியும் நான்கறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (ஷை 31)

மாவும் மாக்களும் ஐயறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (ஷை 32)

*மக்கள் தாமே ஆறறிவுயிரே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே* (மரபி. 33)

என்று கூறுகின்றார்.

இங்கே காட்டப்பட்ட சூத்திரங்களின் பொருள் ஜைன சமயக்கொள்கையோடு முற்றும் பொருந்துவது காணலாம். மக்களை ஆறறிவுயிர் என்பது அந்தச் சமயத்தினருள் ஒருசாரார‌து கொள்கையாதலின் அது பெருவரவிற்றாய்க் காணப்படுதலில்லை. தொல்காப்பியர் தாமாகவே இப்பாகுபாட்டினை அமைத்துக் கொண்டாரெனக் கூறுதலும் தகாது. ஏனெனில், இவ் உயிர்வகையை 'நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே' என அவரே எடுத்து மொழிகின்றார். ஜைன சமயந்தவிரப் பிறசமயங்கட்குரிய பொருட்பாகுபாடுகளில் ஒன்றின்கண்ணும் இவ்வுயிர்வகை தரப்படவில்லை யென்பது மேலே கூறினேன். ஆகவே ஜைன சமயத்திற்கு உரிய தத்துவங்களின் உட்பாகுபாட்டினை எடுத்துத் தொல்காப்பியர் ஆளுதலினாலே, அவர் ஜைனராதல் வேண்டும் என்னுந் துணிபு உறுதியடைகின்றது [1].

## சமயம்: 3

தொல்காப்பியர் ஜைனராவர் என்பதற்கு அவரது பெருநூலின் கண்ணே பலசான்றுகள் உள்ளன. அவற்றுள் மிகச்சிறந்தவொன்றை மேலே கூறினேன்.

---

[1] "இவர் (பவணந்தி) ஜைனமதத்தினர்......உயிர்களை ஓரறிவுயிர்முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக அமைத்திருக்கு முறையும்... இதனைப் புலப்படுத்தும்" என்று ஸ்ரீ சாமிநாதையரவர்கள் எழுதியது இங்கே சிந்திக்கற்பாலது. (மயிலைநாதருரை, முகவுரை, பக். vii.)

இப்பொழுது வேறு சில சான்றுகளைக் குறிக்கின்றேன்.

தற்காலத்தில் மாத்திரைக்குக் கால அளவு கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப்பொழுதும் ஆகும் என்பது அனைவரும் அறிந்தது. இந்த இலக்கணத்தின் வரலாறு யாது? இது முதன் முதலில் எங்கே கூறப்பட்டுள்ளது?

பாணினீய சிக்ஷையை எடுத்துக்கொள்வோம். இங்கே காடை கத்துவது ஒருமாத்திரை என்றும், காக்கை கரைவது இரண்டு மாத்திரை என்றும், மயில் கூவுவது மூன்று மாத்திரை என்றும் கூறப்பட்டிருக்கிறது. பிராதிசாக்கியத்திலே உயிரெழுத்துக்களுள் குறிலை ஒலிக்கும் காலஅளவு ஒரு மாத்திரை என்றும், நெடிலுக்கு இரண்டு மாத்திரை என்றும், புலுதத்திற்கு மூன்று மாத்திரை என்றும் உணர்த்தப்படுகிறது. நிமேஷம் அல்லது இமைத்தல் கால அளவையாகத் தைத்திரீய ஸம்ஹிதையில் காணப்படுகிறது. ஆனால் அது மாத்திரைக்கு அளவாகும் என்பது விஷ்ணுபுராணத்தில்தான் உள்ளதென்று காட்டியுள்ளார் மானியர் வில்லியம்ஸ். எனவே, கண்ணிமைப்பொழுது மாத்திரையாகும் என்பதற்கு வைதிக நூல்களிலே ஒருவாறு ஆதாரம் கிடைத்துவிட்டது. எனினும், இவ்ஆதாரம் மிகப் பிற்பட்டதாயிருத்தலால் பிற மதங்களைத் தழுவியதாயிருத்தல் கூடும்.

“ஒருமுறை நேத்திரத்தை மூடித்திறப்பதற்குள் வலது கையை வலது முழங்காலைச் சுற்றிவரச் செய்யவும்; அவ்வாறு செய்வதற்கு எவ்வளவு நேரம் வேண்டியிருக்கிறதோ அந்நேரம் ஒரு மாத்ராகாலம் என்று வழங்கப்படுகிறது.” (சூத்ர. அத். 22, 32) என வாக்படர் தமது அஷ்டாங்க ஹ்ருதயத்திலே கூறுகிறார்.

இங்ஙனமே, முழங்கால் மண்டலத்தைச் சுடக்கு விட்டுக்கொண்டு (கையாற்) சுற்றுவது ஒருமாத்திரை என்று சாரங்கதர ஸம்ஹிதையில் (உத்தரகாண்டம், அத். 5, 28) காணப்படுகிறது. இது கைந்நொடியைக் கூறினும், இக்கைந்நொடி தனித்து மாத்திரைக்கு அளவாதலைக் குறிக்கவில்லை. கைந்நொடிப் பொழுது தனித்தநிலையில் மாத்திரைக்கு அளவாக எங்கேனும் வந்துள்ளதா?

நிமேஷோன் மேஷ காலேந ஸமம் மாத்ராது
ஸஸம்ருதா :
அங்குலீ ஸ்போடநம் யாவத்காலேமாத்ரேதி ஸோச்யதே

என்ற ஒரு சுலோகம் பட்டாஹளங்கர் எழுதிய கன்னட ஶப்தாநு ஶாஸநத்தில் மேற்கோளாக வந்துள்ளது. இவர் ஒரு ஜைனர். இவர் காட்டும் ஶ்லோகமும் பூர்வஜைன ஆச்சார்யர்களில் ஒருவர் இயற்றியதே யாதல் வேண்டும். இங்கே கண்ணிமையும் கைந்நொடியும் தனித்தனியே மாத்திரைக்கு அளவாகக் கூறப்பட்டிருத்தல் காணலாம். ஆகவே, மாத்திரைக்குரிய இவ் இலக்கணம் ஜைனர்களுக்குரியதாம் என்பது விளங்கும். ஆசிரியர் தொல்காப்பியர்,

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே

என்று மாத்திரையின் இலக்கணம் வகுத்துள்ளார். ஆதலால் இவர் ஜைனராவர் என்பது எளிதில் ஊகிக்கத்தகும். தாமே படைத்துக் கொண்ட இலக்கணம் அன்றென்பது 'நுண்ணிதி னுணர்ந்தோர் கண்டவாறே' என இவர் கூறுதலால் விளங்கும். ஜைன ஆசாரியர்களை 'நேரிதினுணர்ந்தோர்' (மரபியல், 27)

எனக்குறிப்பிட்டது போலவே, ஈண்டும் 'நுண்ணிதி னுணர்ந்தோர்' என்று குறிப்பிடுகின்றார். இவ்அடைமொழி யொற்றுமையும் ஜைன சமயத்தவராகிய ஆசிரியப் பெருமக்களையே உணர்த்துமெனக் கொள்ளலாம்.

பிறிதொரு சான்றிற்குச் செல்கிறேன். தொல்காப்பியர் தமது எழுத்ததிகாரத்தில்,

ஐ, அம், பல்என வரூஉம் இறுதி
அல்பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்

என ஒரு சூத்திரம் வகுத்துள்ளார். ஐ, அம், பல் என வருகின்ற இறுதிகளையுடைய தாமரை, வெள்ளம், ஆம்பல் என்னும் சொற்கள் பொருட்பெயராகவும் எண்ணுப் பெயராகவும் வரும். பொருட்பெயராகவன்றி, எண்ணுப் பெயராகவரும் இவ் இறுதிச் சொற்கள் ஏழ் என்னும் எண்ணின் பின் வந்தால் முற்கூறிய அம்முறையிலே நின்றுமுடியும். அதாவது, எழு என நெடுமுதல் குறுகியும் உகரம் பெறுதலுமின்றி, 'ஏழ்' எனவே நின்று, ஏழ்தாமரை, ஏழ் வெள்ளம், ஏழாம்பல் என முடியும். இதுவே சூத்திரத்தின் கருத்து. 'பல்வெள்ளம் மீக்கூற' என மதுரைக்காஞ்சியிலும் (22), 'வெள்ள வரம்பினூழி' என ஐங்குறு நூற்றிலும் (281), வெள்ளம் என்ற எண் வந்துள்ளது. 'அருவி யாம்பல் ஆயிர வெள்ள வூழி' எனப் பதிற்றுப்பத்தில் (63) ஆம்பல், வெள்ளம் என்ற இரண்டு எண்களும் வந்துள்ளன. இவற்றுள் ஆயிரம் வெள்ளங் கொண்டது ஆம்பலாகும் என்பது உரைகாரர் கூறுவதால் அறியலாம். இந்நூலில் வேறோரிடத்திலும் (21) இவ் எண் வந்துள்ளது. பரிபாடலில் (2),

நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டம் கழிப்பிய வழிமுறை

எனக் காண்கிறது. இங்கே கமலம் (தாமரை), வெள்ளம், ஆம்பல் என்ற மூன்று எண்ணுப் பெயர் களும் காணப்படுகின்றன.

இம்மூன்று எண்களும் தமிழ்நூல்களில் முறைப் பட அமைந்த எண்வரிசையைச் சார்ந்தனவாக அறி யக் கூடவில்லை. திவாகரத்தில் ஒன்று பத்து முதலிய எண்கள் பதின்மடி கொண்டனவாய்த் தரப்பட்டுள் ளன. ஆனால் அது வடமொழிக் குறியீடுகளின் ஆட்சி என்பது,

ஏகம் ஒன்றே தசம்பத் தாகும்
நூறு சதமே சகசிரம் ஆயிரம்
பதினா யிரப்பெயர் அயுத மாகும்

என்று தொடங்கி வரும் சூத்திரங்களால் அறிய லாம். ஆகவே, தாமரை முதலிய குறியீடுகள் வட சொற்களின் மொழி பெயர்ப்புக்கள் என்று ஊகிக்க லாம். பரிபாடலில் தாமரை யெண்ணைக் குறித்தற் குக் 'கமலம்' என்று வருதலும் இதனை உறுதிப் படுத்தும். ஆனால், பெரும்பாலும் 'பத்மம்' என்பதே உரிய பேரெண்ணாக வடமொழி நூல்களிற் படிக்கப் பட்டுள்ளது. எனவே இதுவே தாமரையாகும். வெள்ளம் 'ஸமுத்ரம்' என்னும் எண்ணுதல் வேண் டும்; ஆம்பல் 'குமுதம்' என்பதொரு பேரெண்ணாக இருத்தல் வேண்டும்.

வடமொழியில் பத்மம் என்பதும் ஸமுத்ரம் என்பதும் பேரெண்ணைக் குறித்தற்குச் சாதாரண

மர்க வழங்குகின்றன. பாஸ்கராசாரியர் இயற்றிய லீலாவதியின் தொடக்கத்தில்,

> ஏகதூஶ ஶத ஸகஸ்ராயுத
> லக்ஷப்ரயுத கோடய : க்ரமஶ:
> அர்புத மப்ஜம் கர்வ நிகர்வ
> மஹாபத்ம ஶங்கவஸ் தஸ்மாத்
> ஜலதிஶ் சாந்த்யம் மத்யம்
> பரார்த்தமிதி தசகுணோத்தரா ஸம்ஜ்ஞா:
> ஶங்க்யாயா: ஸ்தாநாநாம்
> வ்யவஹாரார்த்தம் கிருதா: பூர்வை :

என வருகிறது. இதிற்காணும் 'அப்ஜம்' தாமரை என்று பொருள்படும்; நூறுகோடியை (100,0000000) உணர்த்தும். 'ஜலதி' சமுத்திரம் அல்லது வெள்ளம் என்று பொருள்படும்; இது கோடி கோடியை (100,000000000000) உணர்த்தும். குமுதம் என்பது இதிற் காணப்படவில்லை. இம்மூன்று எண்களில் வெள்ளம் என்பதுதான் முதன் முதலில் அளவிடப்படாத ஒருபேரெண்ணின் குறியீடாக நின்று, பின் குறிப்பிட்ட ஒரு பேரெண்ணின் பெயராய் அமைந்துவிட்டதென்று நினைத்தற்கு இடமுண்டு. இங்ஙனமே 'ஸமுத்ரம்' என்பதுதான் முதன் முதலில் அளவிடப்படாத பேரெண்ணுகை வடமொழியிலும் வழங்கியிருத்தல்வேண்டும். இது ஒன்றே பிற எண்களுடன் தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டு இடங்களில் (தைத்திரீய. 4, 4, 11 - 14; 7, 2, 20 - 21) காணப்படுகின்றது. மைத்ராயணீ ஸம்ஹிதையிலும் (2, 8, 14), வாஜஸநேயீ ஸம்ஹிதையிலும் (17, 2) இங்ஙனமே உள்ளது. இவற்றில் ஏகம், தூஶம், ஶதம், ஸஹஸ்ரம், அயுதம், நியுதம், ப்ரயுதம், அர்புதம்,

நயர்புதம், ஸமுத்ரம், மத்யம், அந்தம் என்ற எண்கள் உள்ளன.

இனி, குமுதம்[1] என்ற பேரெண்ணைக் குறித்து ஆராய்வோம். மேலே சுட்டியன வைதிகநூல்கள். இவற்றில் ஒன்றிலேனும் காணப்பெறுமையால் பிற மதச்சார்பான நூல்களில் இது காணப்படுதல் வேண்டும். ஜைனர்களுக்குரிய வேதங்கள் நான்கினுள் ஒன்று 'கணிதாநுயோகம்' என்பது. இதனைக் கரணாநு யோகம் என்றும் வழங்குவர். ஜைன நூல்கள் பெரும்பாலனவற்றில் கணிதப் பொருள்கள் கூறப்படுகின்றன. பகவதீ சூத்திரத்திலும் (90), உத்தராத்யயன சூத்திரத்திலும் (அத். XXV 7, 8, 38), ஒவ்வொரு ஜைன முனிவரும் கணக்கிலும் ஜோதிஷத்திலும் தக்க பயிற்சியுடையவராக இருக்கக் கடவர் என்று கூறப்பட்டுள்ளது. ரிஷபதீர்த்தங்கரர் கணிதம் உள்பட எழுபத்திரண்டு கலைகளையும தமது மூத்த திருக்குமாரரான பரதருக்கு உபதேசித்தனர் என்றும் கூறுவார்கள். இக்கலைகளில் முதலாவதாக எழுத்தும் இரண்டாவதாக எண்ணும் இடம் பெறுகின்றன. அன்றியும் இவர் தமது புத்திரிக்குக் கணிதத்தை உபதேசித்தனர் என்றும் சொல்லப்படுகிறது. 24 ம் தீர்த்தங்கரராகிய மகாவீரர் கணிதத்தில் சிறந்த பயிற்சி பெற்றிருந்தனர் எனக்கொள்வர். இது ரிஷபதத்தரின் மனைவி தேவானந்தை கண்ட பதினான்கு சொப்பனங்களுள் ஒன்றால் வெளியாகின்றது. மகா வீர

---

[1] திவாகரத்தில் 'சேனைமுக மும்மடி தானும் குமுதம்' என ஒரு சூத்திரம் காணப்படுகிறது. இதில் 'குமுதம்' என்பதை உண்மைப் பாடமென்று கொள்ளினும், ஒரு சேனைத் தொகுதியையே குறிக்கவல்லது; பேரெண்ணைக் குறிக்கமாட்டாது. ஆனால் 'குல்மம்' என்பதுதான் உண்மைப் பாடம்.

சுவாமியை ‘ஸங்க்யாஜ்ஞானப்ரதீபன்’ என்று மகா வீராச்சாரியர் வணக்கஞ் செலுத்துகின்றார். பூர்வத்தில் ஜைனர்கள் கணித ஜோதிஷ நூல்கள் பலவும் இயற்றியிருக்கின்றனர். சூர்ய ப்ரஜ்ஞப்தி, சந்த்ர ப்ரஜ்ஞப்தி என்பன இரண்டுபிரசித்தமான நூல்கள். ஜோதிஷ கரண்டகம், க்ஷேத்ர ஸமாஸம், கணித ஸார ஸங்க்ரகம், அங்குல சப்ததி என்ற வடமொழி நூல்களும், ஜாதகதிலகம், வியவகாரகணிதம், க்ஷேத்ர கணிதம், வியவகாரரத்நம், லீலாவதி, ஜைநகணித சூத்ரோதாகரணம் முதலிய கன்னட நூல்களையும் இயற்றியவர்கள் ஜைனர்களே. ஆகவே, ‘குமுதம்’ என்றபேரெண்ணும் அவர்களது நூல்களிலே காணுதற்கு இயைபு உண்டு. இதற்கேற்ப ஜைனர்களுக்குரிய தத்வார்த்தாதிகம சூத்திரத்திற்கு (IV-15) உமாஸ்வாதி இயற்றிய ஸ்வோபஜ்ஞ பாஷ்யத்தில் ‘குமுதம்’ என்ற பெயர் எண்ணுக்குரியதாகக் காணப்படுகிறது[1]. ஆகவே ஜைன சமயத்தினர்கள் வழங்கிவந்த இப்பெயரினையே தொல்காப்பியர் ‘ஆம்பல்’ என மொழிபெயர்த்து ஆண்டிருத்தல் வேண்டும். அவர் ஜைனராவர் என்பது இதனாலும் வெளியாகும்.

மேற்குறித்த சான்றுகளேயன்றி, வேறொரு சான்றும் காணக்கிடக்கின்றது. தொல்காப்பியர்,

> பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
> பாட்டி னியல பண்ணத் திய்யே.
>
> (தொல. செய-180)

என ஒரு சூத்திரம் இயற்றியுள்ளனர். இதில் பண்ணத்தி என்பதன் இலக்கணம் கூறப்படுகிறது.

---

[1]Gaekwad's Oriental Series.
Ganita-tilaka : Introduction. p. XVIII

இச்சொல்வழக்காறு யாண்டுள்ளது? இதன் பொருள் யாது?

தமிழ்நூல்களால் இது புலப்படுமாறில்லை. உரை எழுதியவர்களுள் இளம்பூரணர் 'பண்ணைத் தோற்று வித்தலின் பண்ணத்தியாயிற்று' எனச் சொல்லி விருந்து ஏதோ ஒருபொருளை அமைத்துக் கொண்ட னர். தோற்றுவித்தல் என்பதற்குரிய சொல்லுறுப்பு இதன்கண் இல்லை. பேராசிரியர், 'பாட்டிடைக் கலந்த பொருளவாகி' என்பதனையும் 'பாட்டி னியல' என்பதனையும் கொண்டு உதாரணமாகச் சில பழைய நூல்களைக் காட்டினர். இவரும் 'பண் ணத்தி' என்பதன் வழக்காற்றினைத் தெரிவித்தா ரல்லர்.

ஜைனர்கள் இயற்றிய பூர்விகச் செய்யுள் வகை யொன்றின் பெயராகப் பண்ணத்தி வழங்கி வந்திருக் கிறது. உதாரணமாக 'பகவதீ வ்யாக பண்ணத்தி' 'வியாக பண்ணத்தி', 'சூர்ய பண்ணத்தி', 'சந்த பண் ணத்தி' என்பனவற்றைக் காட்டலாம். ஜைன நூல் களில் தவிர, இவ் அரிய பெயர் வேறோரிடத்தும் காணப்பெறவில்லை. 'விஜ்ஞாபனம்' என்பது விண்ணு ணம் என வரும். 'ஆஜ்ஞப்தி' என்பது ஆணத்தி என வரும். இவைபோல 'ப்ரக்ஞப்தி' என்பது 'பண் ணத்தி' என வந்துள்ளது. இது பாகதச் சிதைவு. பாகத நூல்களில் காணப்படும் செய்யுள் வகையின் இலக்கணத்தைத் தமிழ்ச் செய்யுள் வகைக்குச் சார்த் தித் தொல்காப்பியர் விதித்தனர். இதனாலும் தொல் காப்பியர் ஜைனர் என்பது போதரும்.

இறுதியாக, ஐந்திரவியாகரணம் வைதிக சமயி களால் பூர்வகாலந் தொட்டு மேற்கொள்ளப்படாதது. ஏனெனில், அது புறச்சமயத்தார்களால் பாராட்டப்

பெற்றுவந்த இலக்கண முறையாகும். புறச்சமயி களுள் ஜைனர்கள் இவ்வியாகரண மதத்தைப் பெரி தும் போற்றி வந்தனர். ‘ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியர்’ எனக் கூறப்படுவதனாலே தொல்காப்பி யரும் ஜைன சமயத்தைச் சார்ந்தவர் என உய்த் துணரலாகும். இவ்வூகம் மேற்காட்டிய சான்று களால் உறுதி யடைகின்றது.

காலம் : 1

இப்பொழுதுள்ள இலக்கணங்கள் எல்லாவற்றுள்ளும் தொல்காப்பியந்தான் மிகப்பழமையானது. இதனை இயற்றிய தொல்காப்பியர் வடமொழிப் பேரிலக்கணத்தைச் செய்த பாணினிக்கு முந்தியவர் ஆவர் என்று சில தமிழறிஞர்கள் கூறிவருகின்றார்கள். இக்கொள்கைக்குரிய முக்கிய காரணம் தொல்காப்பியரோடு உடன்கற்ற ஒருசாலைமாணாக்கராகிய பனம்பாரனார் தொல்காப்பியரை 'ஐந்திரத்தில் வல்லவராவர்' எனக் குறித்துள்ளமையே யாகும். 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்பது பனம்பாரனார் இயற்றிய பாயிரத்தில் வரும் ஓர் அடி. ஐந்திர வியாகரணம் பாணினீயத்திற்கு முற்பட்டதென்றும் பாணினீயம் தோன்றியபின் வழக்கொழிந்து விட்டதென்றும் இவர்கள் கருதுகின்றார்கள். தொல்காப்பியனார் காலத்துப் பாணினீயம் உளதாயிருக்குமேல், தொல்காப்பியர் அதனையே கற்று அதில் சிறந்து விளங்கியிருப்பார். 'பாணினீயம் கற்று வல்லவர்' என்று அவரைக் கூறாமையினாலே அவர் பாணினிக்கு முன்பு வாழ்ந்தவர் என்று இந்த அறிஞர்கள் கொள்ளுகின்றார்கள்![1]

இக்காரணத்தை நாம் ஊன்றி நோக்கினால் அது வலிமையுடையதாகாது என்பது விளங்கும். ஏனெனில், ஐந்திரம் பாணினீயத்திற்குப்பின் வழங்கவில்லை என்று ஒருதலையாகத் துணியமுடியாது. மேலும், ஐந்திரம்[2] ஒரு தனிப்பட்ட இலக்கணமாக எப்பொழு

[1] M. Sreenivasa Iyengar, Tamil Studies, p. 17.

[2] பூஜ்யபாதர் இயற்றிய ஜைநேந்த்ர வியாகரணத்தை 'ஐந்திரம்' என்று சிலர் கூறுவர். இது கி. பி. 5-ம் நூற்றாண்டில் தோன்றியது.

தாவது இருந்ததுண்டா என்பதும் ஐயப்பாட்டிற்கு இடமுள்ளதே. பாணினியினுடைய இலக்கண முறை ஸமிஜ்ஞை முதலியவற்றால் நிறைந்து இயற்கையான முறைகளோடு பெரிதும் மாறுபட்டுள்ளது. இதற்கு மாறாக ஓர் எளிய, இயற்கையான - யாவருக்கும் விளங்கும்படியான - வகையில் இலக்கண அமைப்பு-முறை ஒன்று உளதாயிருத்தல் வேண்டும். பிராதிசாக்கியத்தில் இந்த எளியமுறை காணப்படுகிறது. இம்முறையை நமது புராணங்களில் கூறப்படும் இந்திரன் தோற்றுவித்தான் என்று நம்பினர். இவன் இந்த எளிய முறையை அமைத்து இலக்கண நூல் ஒன்று 'செய்தான் என்றும் கற்பித்தனர். எளிதாயிருந்தபடியாலே இம்முறையைப் பலர் கையாண்டார்கள். தனியான ஓர் இலக்கண மதமாகவும் இது கொள்ளப்பட்டது. இந்த மதம்தான் 'ஐந்திரம்' எனப் பெயர் பெறலாயிற்று. பாணினி ஆசிரியர், பதஞ்சலி ஆசிரியர், காசிகாவிருத்தி ஆசிரியர் இவர்களுள் ஒருவரேனும் இம்மதத்தை 'ஐந்திரம்' என்ற பெயரால் அழைத்ததில்லை. வடமொழி இலக்கணங்களை ஆராய்ச்சி செய்த கீல்கார்ண் (Kielhorn), பெல்வெல்க்கர் (Belvalkar) என்ற இரு பேராசிரியரும் ஐந்திரமதத்தில் கூறப்பட்டுள்ள பொருள்கள் பாணினீயத்திற்கு முற்பட்டதாயினும், ஐந்திரமதமும் அதன் பெயரும் ஏற்பட்டமை அதற்குப் பிற்பட்ட காலத்தேதான் என்று கருதுகிறார்கள். ஸர்வவர்மன் சுமார் கி. பி. முதல் நூற்றாண்டில் இயற்றிய 'காதந்த்ரம்' ஐந்திர மதத்தைச் சார்ந்தவற்றுள் சிறந்தது என்பர். இந்த இலக்கணம்

---

[1]Systems of Sanskrit Grammar, p.*11*.

'கௌமாரம்' அல்லது 'காலாபம்' என்றும் வழங்கப் பெறும்.

மேற்கூறியவற்றால் ஐந்திரம் என்னும் பெயர் வழக்கும் மதமும் பாணினீயத்திற்குப் பிற்பட்டனவே என்பது விளங்கும். தற்காலத்துள்ள ஒருவன் வில்லிபாரதத்தில் வல்லவன் என்று கூறப்படுவானாயின் அவன் பெருந்தேவனார் காலத்திற்கு முற்பட்ட காலத்தவன் என்பது அமைதியுடைத்தாகுமா? மேற்குறித்த தமிழறிஞர்களது கொள்கையும் இதுபோன்றதுதான்.

பாணினீயம் முற்பட்டதாயின், அதனை விடுத்து ஐந்திரத்தைத் தொல்காப்பியர் கைக்கொண்டதற்குக் காரணம் என்னவென்று கேட்கலாம். காரணம் மிக வெளிப்படையாக உள்ளதே. பாணினி ஆசிரியர் குறியீடுகளையும் தாமாகப் படைத்துக் கொண்ட சொற்களையும் ஆண்டிருக்கிறார். இவை, பீஜகணிதத்தில் குறியீடுகள்போல, பாணினீய இலக்கணத்திற்கு உதவின. இவற்றைப் பயன்படுத்தித் தெளிவாகவும் மிகச் சுருக்கமாகவும் மொழிபற்றிய பீஜகணிதநூலை இவர் இயற்றினார் என்றுதான் நாம் சொல்லவேண்டும். உதாரணமாக, நிலைமொழியீற்றில், இ, உ, ஞ, ள என்ற இவ் எழுத்துக்கள் குறிலாகவேனும் நெடிலாகவேனும் நின்று வருமொழி முதலில் உயிர்வருமாயின் நிலைமொழியீறு ய், வ், ர், ல் எனமுறையே திரியும். இவ்விதியை, "இகோயணசி" என்ற சூத்திரத்தால் பாணினி குறித்துள்ளார். இங்கே 'இக்' என்பது இ, உ, ஞ, ள என்பவற்றையும் 'யண்' என்பது ய், வ், ர், ல் என்பவற்றையும் அச் என்பது உயிரெழுத்துக்களையும் குறிக்கும். இவர் இலக்கணத்தை உணர்ந்துகொள்வதில் ஞாபக சக்தி பெரிதும் வேண்டப்படும். ஒரு விதியின் பொருளை

உணரவேண்டுமாயின், அவ்விதிக்கு முன்னருள்ள அனைத்து விதிகளையும் ஞாபகத்தில் வைத்தலோடு தாது பாடத்தையும் கணபாடத்தையும் மனனம் பண்ணியிருத்தல் வேண்டும். தாதுபாடம் வினைப் பகுதிகளை யெல்லாம் ஒருசேரத் தொகுத்துக் கூறும். கணபாடம் என்பது சொல்-தொகுதிகளின் இயல். இத்தொகுதி ஒவ்வொன்றிலும் முதலாவது வரும் சொல்லையே ஓர் இலக்கணவிதியில் பாணினியாசிரியர் குறித்திருப்பர். அங்ஙனம் குறித்த அளவில், அச் சொல்லோடு தொடங்கும் அனைத்துச் சொற்களும் அவ்விதியினையே பின்பற்றும் என்பது ஆசிரியரது கருத்தாகும். இவ்வாறாக பிரத்தியாகாரம் முதலிய சுருக்கங்களினாலும், பல்வேறு குறியீடுகளினாலும், பிற குறிப்புக்களாலும் வடமொழி முழுவதையும், அதன் சிதைவு வடிவம் முதலிய அனைத்தையும், ஒரு சிறு நூலாகப் பாணினி ஆசிரியர் மிக்க திறமையோடு அமைத்திருக்கின்றார்[1].

இவ்வகையாய் அமைந்த பாணினீயமுறை வடமொழியோடு யாதொரு தொடர்புமற்ற பிறிதொரு மொழியின் இலக்கணத்தை அமைப்பதற்குச் சிறிதும் பயன்படமாட்டாது என்பது தெளிவு. அன்றியும் வேறொரு காரணமும் உளது. தொல்காப்பியர் ஜைனர் என்பதற்குத் தக்க சான்றுகள் உள்ளன; ஆதலால் அவர் ஓர் புறச்சமயி ஆவர். தம்போன்ற புறச்சமயிகளால் கற்றுப் போற்றப்பட்ட ஓர் இலக்கண முறையையே அவர் பின்பற்றுதல் இயற்கை. ஐந்திரம் அவ்வகை இலக்கண முறையுள் ஒன்று.

தற்காலத்துள்ள ஓர் ஆசிரியர் 'பின்வருமாறு எழுதுகின்றார்: ' சாந்திர வியாகரணம் முதலியன

---

[1]History of Civilization: Ancient India and Indian Civilization, p. 247

பாணினீயத்திற் கூறியுள்ள முறையையே பெரிதும் பின்பற்றின. எனினும், புதுமுறைகளும் தோன்றத் தொடங்கின. இவற்றின் விளைவாகக் 'காதந்த்ரம்' என்னும் பெயருடைய ஓர் இலக்கணத்தை ஸர்வ வர்மன் இயற்றினர். அது அவர் காலத்தில் பெரிதும் பயன்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில், மத்திய ஆசியாவரையிலும் அது வழக்கில் இருந்தது எனத் தெரிகிறது. தென்னிந்தியாவிலும் திராவிடமொழிகளின் இலக்கணங்களுக்கு அது முன்மாதிரியாகவும் பயன்பட்டது.'[1]

முடிவாகப் பாணினியின் பேரிலக்கணத்தைத் தொல்காப்பியர் கையாண்டுள்ளார் என்பதையும் நாம் மறக்கமுடியாது. யாஸ்கரது நிருக்தத்தில்,

*சத்வாரி பதஜாதாநி நாமாக்யா தோபஸர்க்க*
*[நிபாதச்ச*

எனச் சொற்களின் பாகுபாடு வரையறுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. நாமம், ஆக்யாதம், உபஸர்க்கம், நிபாதம் எனச் சொற்கள் நான்கு வகைப்படும் என்பது இதன் கருத்து. ஆனால் பாணினீயத்தில் 'ஸுப்-திங்-அந்தம் பதம்' (1, 4, 14) என்று வருகின்றது. இதனையே தொல்காப்பியர்,

*சொல்லெனப் படுப பெயரே வினையென்று*
*ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே.*
*(தொல, சொல், 158)*

எனச் சூத்திரம் செய்தனர்.

---

[1]History of Civilization: Ancient India and Indian Civilization, p. 248

இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப

என நிருக்தம் கூறியுள்ளதனையும் அவர் அடுத்தபடியாக உடன்பட்டனர். பாணினி முனிவர் இயற்றியதாகக் கூறப்படும் சிக்ஷையுங்கூடத் தொல்காப்பியருக்குப் பயன்பட்டுள்ளது எனத் தோன்றுகிறது. சிக்ஷயில்,

"அஷ்டௌ ஸ்தாநாநி வர்ணாநாம் உர: கண்ட: சிரஸ் [ததா:
ஜிஹ்வாமூலஞ்ச தந்தாஸ்ச நாசி கோஷ்டௌசதாலுச."

என வந்துள்ளது. இதனையே,

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்துஞ் சொல்லுங் காலை
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சி யான.
(தொல. எழு. 83)

என்ற சூத்திரத்தில் குறிப்பிடுகிறார். ஆகவே தொல்காப்பியர் பாணினி முனிவர்க்கு முற்பட்டவர் என்ற கொள்கை சிறிதும் ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. பிற்பட்டவர் என்றே நாம் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு சொல்லிய அளவில், 'தொல்காப்பியரது காலத்தை வரையறை செய்தவர்களாகமாட்டோம். பாணினியின் காலம் இன்னும் அறுதியிடப் படவில்லை. R. G. பண்டர்க்கர் கி. மு. 8-ம் நூற்றாண்

டில அவர் வாழ்ந்தவராதல் வேண்டும் என்பர். கோல்ஸ்டக்கர் என்ற பேராசிரியர் தவிர, மற்றைய மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் கி. மு. 4 அல்லது 5 - ம் நூற்றாண்டினராக அவரைக் கொண்டுள்ளார்கள். வடமொழியிலுள்ள பூர்வ இலக்கியங்களின் காலம் பெரும்பாலும் ஊகமாகவே உள்ளன. மகாபாஷ்யத்தை இயற்றிய பதஞ்சலி யின் காலம் ஒன்றே ஐயத்திற்கிடமின்றித் திட்ட மாக அறியப்படுவது. வடமொழி இலக்கியத்தின் சரித்திரத்திற்கு அது ஒரு முக்கியமான, அறுதியான எல்லைக் கல்லாக உள்ளது. இப்பதஞ்சலி முனிவர் தம்முடைய மகாபாஷ்யத்தை கி. மு. 150-ல் இயற்றி னர். இவருக்கும் தொல்காப்பியருக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்று நாம் நோக்குதல்வேண்டும்.

தொல்காப்பியத்தில் ஒரு சூத்திரம் பதஞ்சலி யின் கூற்றை மொழிபெயர்த்து வைத்திருப்பதுபோல் உள்ளது. அது வருமாறு :

அவைதாம்
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே

(தொல். சொல். 419)

இங்கே தொகைச்சொற்களின் பொருள்-நிலை கூறப்படுகிறது. முன்மொழியிலே பொருள் சிறந்து நிற்றலும், பின்மொழியிலே பொருள் சிறந்து நிற்ற லும், இருமொழிகளிலும் பொருள் ஒருங்கே சிறந்து நிற்றலும், இருமொழிகளிலும் பொருள் நில்லாது வேற்று மொழியிலே பொருள் சிறந்து நிற்றலும் என இங்ஙனம் நான்கு வகை என்று சொல்லுவர்

பொருள் நிற்கும் நிலையின் மரபு என்பது பொருள். இதனை,

இஹகஸ்சித் ஸமாஸா: பூர்வ பதார்த்த ப்ரதாந:
கஸ்சித் உத்தர பதார்த்த ப்ரதாந:
கஸ்சித் அந்ய பதார்த்த ப்ரதாந:
கஸ்சித் உபய பதார்த்த ப்ரதாந:

என்ற பதஞ்சலியின் வாக்கியங்களோடு[1] ஒப்பிட்டு ஒப்புமையை அறிந்து கொள்ளலாம். இரண்டும் பொருளில் சிறிதும் வேறுபடவில்லை என்பது தெளிவு. பாணினியாசிரியரும் காத்தியாயனரும் இவ்வாறு நான்கு கூறுகத் தொகைச்சொற்களைப் பகுத்துக் கூறவில்லை. பதஞ்சலி தாம் தமது மகாபாஷ்யத்தில் இப்பாகுபாட்டை முதன் முதலாக எடுத்துக் கூறுகிறார். ஆகவே, இப்பெருநூலிலிருந்து தொல்காப்பியர் இப்பாகுபாட்டினை எடுத்தாண்டுள்ளார் என்பது மறுக்க முடியாத உண்மை. தொல்காப்பியர் 'அந்நான்கு என்ப' எனத் தமது சூத்திரத்தில் கூறுதலால், அவர் தாமே படைத்துக்கொண்டார் என்று கூறுதற்கும் இடமில்லை. மயிலைநாதர் உரையால் (நன் - 369) அவிநயரும் இப்பொருள்படச் சூத்திரம் ஒன்று இயற்றியிருத்தல் வேண்டும் எனக் கருதலாம். அவிநயர் தொல்காப்பியரோடு ஒருசாலை மாணுக்கர் என இப்பொழுது கூறிவருகின்றனர். இதற்கு ஆதாரம் அறியக்கூடவில்லை. பிற்பட்டவர் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன.

பதஞ்சலி முனிவர்க்குத் தொல்காப்பியர் கடப்பட்டுள்ளார் என்பது வேறொரு சான்றாலும் அறியக் கிடக்கிறது. தொல்காப்பியர் இலக்கணம் என்ற சொல்லை வியாகரணம் என்ற பொருளில் வழங்கியிருக்கின்றனர்.

[1]Kielhorn I, pp 379 - 380, 382, 392.

இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல

எனச் சொல்லதிகாரம் 27-ம் சூத்திரத்தில் வருகிறது. இலக்கணம் என்பது 'லக்ஷண' என்ற வடமொழியின் பிராகிருதத் திரிபு. லக்ஷண என்பதை 'வியாகரணம்' என்ற பொருளில் முதன் முதலாக வழங்கியவர் பதஞ்சலி முனிவரேயாவர். இவருக்கு முற்பட்டு வார்த்திகத்தை இயற்றிய காத்தியாயனர் இப் பொருளை ஒருவாறு குறிப்பித்துள்ளார்.

லக்ஷ்ய லக்ஷணே வியாகரணம்

என்ற வார்த்திகத்தின் கீழ்,

ஸப்தோ லக்ஷ்ய சூத்ரம் லக்ஷணம்

எனப் பதஞ்சலி முனிவர் எழுதினர். வேறோரிடத்தும் லக்ஷணம் என்பதனை இப்பொருள்பட இவர் எழுதி யுள்ளார்.

ந லக்ஷணே பதகாரா அநுவர்த்யா : பதகாரை :
நாம லக்ஷணம் அநுவர்த்தியம்,

எனக் கீல்ஹார்ண் பதிப்பில் இரண்டாவது ஸம்புடத்தில் 85-ம் பக்கத்தில் காணப்படுகின்றது.[1] இதுமட்டும் அன்று. லக்ஷணம் என்பது வடமொழியில் 'குறி' என்றும் பொருள்படும். இக் 'குறி' என்ற சொல்லையே ஆசிரியர் தொல்காப்பியர் இலக்கணம் என்ற பொருளில் வழங்கியுள்ளார்.

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே.
(தொல். பொருள். 50)

என்பது பொருளதிகாரச் சூத்திரம்.

---

[1]P. C. Chakravarthi : Linguistic Speculations of the Hindus, p. 409, 3.

இவ்வாறாக, தொல்காப்பியர் பதஞ்சலி முனிவர்க்குக் கடப்பட்டுள்ளார் என்பது நன்கு தெளிவாகிறது. எனவே, அவர் கி. பி. 150 - க்குப் பின் வாழ்ந்தவர் என்பது அறுதியான முடிபாகும்.

காலம் : 2

தொல்காப்பியர் கி. மு. 150-க்குப் பிற்பட்டவரென்று மேலே துணிந்தோம். இவர் காலத்தை இன்னும் திட்டமாக அறுதியிடுவதற்கு வேறு சான்றுகள் உளவோ என்று நோக்குவோம்.

பூப்பின் புறப்பா டீராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்

(பொருள். 185).

என்ற தொல்காப்பியர் கருத்து மனுதர்ம சாஸ்திரத்தில் (iii, 46, 47) காணப்படுகிறது. இந்த ஸ்மிருதியின் காலத்திற்குப் பின் - எல்லை கி. பி. 200 என்பர் ஆசிரியர் காணே (P. V. Kane). எனவே தொல்காப்பியர் கி. பி. 200க்-குப் பிற்பட்டவர்.

தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் இறுதியில் முப்பத்திரண்டு வகை உத்திகள் சொல்லப்பட்டுள்ளன. இந்த உத்திகள் கௌடில்யரது அர்த்த சாஸ்திரம், சுசுருதம் முதலான நூல்களிலும் உள்ளன. கௌடில்யரது காலம் கி. பி. 3-ம் நூற்றாண்டுக்கு முற்பட்டதன்று என்பர் ஆசிரியர் உவிண்டர் நீட்ஸ்.* எனவே, தொல்காப்பியர் காலமும் கி. பி. 300-க்குப் பிற்பட்டதாகும்.

---

* Winternitz : History of Indian Literature (German Edition) Vol III p. 523

தொல்காப்பியர் எண்வகை மெய்ப்பாடுகளைப் பற்றிக் கூறியுள்ளமை நன்கறியப்பட்டதே.

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப.

என்பது சூத்திரம். இங்கே 'என்ப' என்ற சொல் கவனித்தற் குரியது. தொல்காப்பியர் தாமே வகுத்துக்கொண்ட மெய்ப்பாடுகள் அல்ல இவை. பிறர் கூறியனவற்றையே இவர் எடுத்துச் சொல்லுகிறார். 'என்ப' என்று சூத்திரத்தில் வரும் சொல் இதனை நன்கு புலப்படுத்துகிறது. இப்பிறர் யார்? இளம்பூரணர் 'வியப்பெனினும் அத்புதம் எனினும் ஒக்கும்; காமம் எனினும் சிருங்காரம் எனினும் ஒக்கும்; அவலம் எனினும் கருணை எனினும் ஒக்கும்; உருத்திரம் எனினும் வெகுளி எனினும் ஒக்கும்' என்று எழுதினர். பேராசிரியரும் இங்ஙனமே எட்டு மெய்ப்பாடுகளுக்கும் உரிய வடமொழிப் பெயர்களைக் குறித்தனர். இவ்வாறு வடமொழிப் பெயர்களைத் தருதலினால் இவ் வடமொழிப் பெயர்களே பெருவழக்கென்பதும் இக்கருத்துக்கள் வடமொழியிலுள்ளனவே என்பதும் ஊகிக்கத் தகும். ஆகவே, முன் கூறிய பிறர் ஒரு வடமொழியாசிரியர் என்பது பெறப்படும். வடமொழியில் இப்பொருள்களைக் குறித்து முதன் முதல் நூல் இயற்றியவர் பரத முனிவர்.

ச்ருங்கார ஹாஸ்ய கருணா ரௌத்ர வீர பயாநகா:
பீபத்ஸாத்புத ஸம்ஜ்ஞௌ சேத்ய நாட்யேரஸா:
[ஸ்ம்ருதா:

எனத் தமது நாட்டிய சாஸ்திரத்தில் கூறினர் (VI-15).

தொல்காப்பியர் இவரது நூலினையே பின்பற்றி யுள்ளார் என்பது வெளிப்படை. இம்முனிவருக்குப் பின் வந்த வடமொழி ஆசிரியர்களுள் சிலர், சுவைகள் ஒன்பதென்றும், வேறு சிலர் ஒன்பதுக்கும் மேலாக உள்ளன என்றும், இன்னும் சிலர் சுவைகளை வரையறைப் படுத்தல் இயலாது என்றும் கொண்டனர். முனிவர் மட்டுமே சுவை எட்டு எனக் கொண்டுள்ளார். இவரது மதத்தினையே தொல்காப்பியர் மேற்கொண்டனர்.

பரத முனிவரின் காலம் கி. பி. நான்காம் நூற்றுண்டென்பர்[1]. ஆகவே தொல்காப்பியரின் காலம் நான்காம் நூற்றுண்டிற்குப் பிற்பட்டதாகும்.

தலைவனைக்கண்டு பிரிந்த தலைவிக்குப் பத்து அவத்தைகள் உளவென்த் தொல்காப்பியர் கூறுவர். இது,

வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை யிறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப

(களவியல. 9)

என்ற சூத்திரத்தாலும் அதன் உரையாலும் விளங்கும். 'மொழிப' என்று சூத்திரத்தில் வருவதனால் இவ் அவத்தைகள் தொல்காப்பியர் தாமே படைத்துக் கொண்டன அல்ல என்பது தெளிவு. இவற்றை 'தசாவஸ்தை' என்பர் வட நூலார். இந்த

[1] P. R. Bhandarkar : Indian Antiquary vol. 41 (1912), p. 158. Jacobi : Bhavasatte of Dhanavala : p. 84. Probably 3rd Century A. D.

அவத்தைகள் வாத்ஸ்யாயனரது காமசூத்திரத்தில் ஐந்தாம் அதிகரணத்தில், முதல் அத்தியாயத்தில் காணப்படுகின்றன. இக்காம சூத்திரம் கி. பி. 4-ம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்பது வடமொழியாராய்ச்சியாளர்[1] கருத்து. எனவே, தொல்காப்பியர் காலமாக நாம் மேலே கண்ட முடிபு வலியுறுதல் காணலாம்.

மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை

(களவியல, 45)

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தில் 'ஓரை' என்ற சொல் வந்துள்ளது. இச்சொல் கிரேக்க மொழியிலிருந்து வடமொழியிற் புகுந்ததென்றும், இதனை வழங்கிய தொல்காப்பியம் 4-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்றும் ஆசிரியர் பெரிடேல் கீத் கூறியுள்ளார். இங்ஙனமாக, எவ்வகையால் நோக்கினும், ஆசிரியர் தொல்காப்பியர் கி. பி. 4 அல்லது 5-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனக் கொள்ளுதலே பொருந்துமெனத் தோன்றுகிறது.

---

[1]Winternitz: History of Indian Literature (German Edition) Vol. III p. 540.

# கபிலர்

சங்ககாலத்துப் புலவர்களுள் ஒருவராகிய கபிலர் அப்புலவர்களாலேயே புகழப்பட்ட பெருமையுடையவர். இவரது செய்யுட்களின் அளவை நோக்கினாலும் இவரே முதன்மையாக உள்ளவர். நற்றிணையில் இருபதும், குறுந்தொகையில் இருபத்தொன்பதும், ஐங்குறு நூற்றில் நூறும், பதிற்றுப்பத்தில் பத்தும், அகநானூற்றில் பதினாறும், புறநானூற்றில் முப்பதும், குறிஞ்சிப்பாட்டில் ஒன்றும் ஆக மொத்தம் இரு நூற்ருறு செய்யுட்களை இவர் இயற்றியுள்ளார். இக்கணக்கில், இவர் செய்ததாகக் கூறும் குறிஞ்சிக் கலிச் செய்யுள் இருபத்தொன்பதும் சேர்க்கப்பெற வில்லை. ஏனெனின், கலித்தொகையில் ஒவ்வொரு கலியும் செய்தவர் இன்னார் என்று குறிப்பிடும் வெண்பா தற்காலத்துள்ளவர் ஒருவரால் எழுதிச் சேர்க்கப்பட்டது. ஆதலால், குறிஞ்சிக்கலி இவர் இயற்றியது என்பதற்குத் தக்க ஆதாரமில்லை.

கபிலர் என்ற பெயருடைய புலவர்கள் பலர் முற்காலத்தில் இருந்திருக்கவேண்டும். சங்கப் புலவர்களுள் 'தொல்கபிலர்' என்றொருவர் காணப்படுகிறார். இவர் வேறு, கபிலர் வேறு என்பதைத் 'தொல்' என்ற அடைமொழியே விளக்குகிறது. பதினோராந் திருமுறையில் மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை முதலிய மூன்று பிரபந்தங்களையும் இயற்றியவர் 'கபிலதேவ நாயனார்.' இவரும் கடைச்சங்கப் புலவராகிய கபிலரும் வேறுவர் என்பது அப்பெயர்க்குப் பிற்படச் சேர்த்துள்ள

உபசாரத் தொடராலும், சங்க இலக்கிய நடைக்கும் திருவிரட்டைமணிமாலை முதலிய பிரபந்தங்களின் நடைக்கும் உள்ள வேறுபாட்டினாலும் அறியலாகும். பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றாகிய 'இன்னா நாற்பது' கபிலரால் இயற்றப்பட்ட தென்பது பெரும்பாலார் கொள்கை. ஆனால் ஏட்டுப் பிரதிகள் சிலவற்றில் ஆசிரியர் பெயர் 'கபில தேவர்' எனக் காணப்படுகிறது. மேலும் இக்கீழ்க் கணக்கு நூல்களை இயற்றினாருள் பெரும்பாலார் சங்க காலத் தவரல்லர். எனவே, இன்னா நாற்பதும், பன்னிரு பாட்டியல் என்ற நூலில் கபிலர் பெயரால் வழங்கும் சூத்திரங்களும் சங்ககாலப் புலவரின் வேறான ஒருவரால் இயற்றப்பட்டன என்று கொள்ளுவதே நேரிது.

சங்ககாலத்துக் கபிலர் கவித்திறமையில் சிறந்து விளங்கியவர். இவர் காலத்திலே பிரகத்தன் என்ற பெயருடைய ஆரிய அரசனொருவன் இருந்தான். அவனுக்குத் தமிழின் சுவையையும், தமிழ்ப் புலவர் கள் பெரிதும் போற்றிவந்த அகவொழுக்கத்தின் சிறப்பையும் உணர்த்தும் தருவாயொன்று கபிலர்க் குக் கிடைத்தது. குறிஞ்சிப் பாட்டு என்னும் அழகிய செய்யுளை இயற்றி அவ் விரண்டினையும் உணர்த்தி னர். இப்பாட்டின்கண் வரும்,

பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய,
மான் கணம் மரமுதல் தெவிட்ட, ஆன்கணம்
கன்று பயிர் குரல மன்றுநிறை புகுதர,
ஏங்கு வயிர் இசைய கொடுவாய் அன்றில்
ஓங்(கு) இரும் பெண்ணை அகமடல் அகவ,
பாம்புமணி உமிழ, பல்வயின் கோவலர்
ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற,
ஆம்பல் ஆயிதழ் கூம்புவிட, வளமனைப்

பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
அந்தி அந்தணர் அயர, கானவர்
விண்தோய் பணவை மிசைஞெகிழி பொத்த,
வான மாமலை வாய்சூழ்பு கறுப்ப, கானம்
கல்லென்(று) இரட்ட, புள்ளினம் ஒலிப்ப,
சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்பத்
துணைஇய மாலை (216 - 230)

என்ற மாலைக்கால வருணனை படித்து இன்புறுதற் குரியது.

கபிலர் இயற்கையழகில் ஈடுபட்டவர்; பூக்களின் மீது அளவிலா அன்புகொண்டவர். குறிஞ்சித் திணையைப் பாடுதலில் இவர் ஒப்பற்றவர் எனக் கருதப்பட்டனர். தமது புலமைத் திறத்துக்கு சம்மானமாகப் பல ஊர்களை இவர் பெற்றுள்ளார்.

கபிலர் கவித்துவத்திற் சிறந்து விளங்கியது போலவே, மக்கட் பண்பிலும் சிறந்து விளங்கினர். 'புலன் அழுக்கற்ற அந்தணாளன்' (புறம். 126) என்று இவர் குறிப்பிடப்படுகிறார். மனமொழி மெய்களில் தூயவர். எப்பொழுதும் உண்மையே பேசும் நல்லியல்புடையவர்.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

என்ற பொதுமறையின் இலட்சியமே இவரது இலட்சியமும்.

உலகுடன் திரிதரும பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் (அகம். 78)

எனவும்,

பொய்யா நாவிற் கபிலன் (புறம். 174)

எனவும்,

செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்

(புறம். 53)

எனவும்,

வயங்கு செந்நாவின்......கபிலன் (பதிற்று. 85)

எனவும் புலவர்கள் இவரைப் புகழ்ந்துள்ளார்கள்.

இவர் திருவாதவூரில் அந்தண வகுப்பில் பிறந்தவர் என்பர். இவர்க்கும் பாரி என்ற சிற்றரசனுக்கும் இருந்த பெருநட்பின் சரித்திரம் தமிழுள்ளளவும் நிலைத்து நிற்பதாகும். பாரியின் நண்பரும், பாரியின் அமைச்சரும், பாரியின் ஆசிரியரும் கபிலரே. தமிழ்நாட்டு மூவேந்தரும் பாரியின் பறம்பை முற்றுகையிட்டனர். பறம்பு நாட்டிலுள்ளார் உணவின்றி வருந்தினர் கிளிக்கூட்டங்களைப் பழக்கி நெற்கதிர் கொண்டுவரும்படி செய்து பஞ்சத்தைக் கபிலர் தீர்த்தனர். போர்செய்து நின்ற பகையரசர்களைச் சிறிதும் பொருட்படுத்தாது பாரியின் அரும்பெருங் குணங்களைப் புகழ்ந்து பாடினர்.

'பாரி', பாரி' என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர் ;
பாரி ஒருவனும் அல்லன் ;
மாரியும் உண்(டு) ஈண்டு உலகு புரப்பதுவே.

என்பது இவர் பாடிய பாட்டுக்களுள் ஒன்று.

இப்பகையின் விளைவாகப் பாரி வஞ்சித்துக் கொல்லப்பட்டான். அவனது மகளிர் இருவரும் ஆதரவின்றி வருந்தினார்கள். அவர்களுக்குக் கபிலர் மணமுடிவித்து, பின் பாரியின் பிரிவாற்றாது தீப் பாய்ந்து மரண மெய்தினர்.

# திருவள்ளுவர்

தமிழ் இலக்கிய உலகில் ஒப்பின்றிச் சிறந்து விளங்குபவர் திருவள்ளுவர். இவர் இயற்றிய பெரு நூல் திருக்குறள் என்பது. இந்த நூலினாலே ஆசிரியரது பெருமை நன்கு விளங்கக் கூடியது. தெய்வப் புலமைத் திருவள்ளுவர் என்று நமது முன்னோர்களும் இவரைக் கூறுவார்கள். பெரும்புலவர்கள் எனக் கருதத்தகும் ஆசிரியர்கள் பலரும் இந்நூலை எடுத்து ஆண்டிருக்கிறார்கள்.

*தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளை*

என்ற சிலப்பதிகார அடியும்,

*தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்*
*பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்*

என்ற மணிமேகலை யடிகளும் குறளினையும், அதன் ஆசிரியரையும் தக்கவாறு போற்றிப் பாராட்டு கின்றன.

சூளாமணியை இயற்றிய தோலாமொழித் தேவரும், சீவகசிந்தாமணியை இயற்றிய திருத்தக்க தேவரும் சில குறள்களை எடுத்தாண் டிருக்கிறார்கள்.

*கொடுப்பது விலக்கு கொடியோர் தமதுசுற்றம்*
*உடுப்பதுவும் உண்பதுவு மின்றி யொழியும்காண்*

என்று கம்பர் தமது இராமாவதாரத்திற் கூறியது,

*கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்*
*உண்பதூஉம் இன்றிக் கெடும்.*

என்று வள்ளுவரது பொய்யா மொழியை மேற் கொண்டது. இவற்ருல் இந்நூல் தோன்றிய காலந் தொட்டுப் பெரும் புகழ்பெற்று நிலவி வருகின்றமை தெளிவாகின்றது. மேலும், பல ஐரோப்பிய மொழி களில் இத் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டிருக் கின்றது. இவ்வளவு சிறப்புப் பொருந்திய ஆசிரிய ரைப்பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா?

இவர் வள்ளுவர் குடியிற் பிறந்தவர். இதனு லேயே இவர் வள்ளுவர் என வழங்கப்படுகிருர். வள்ளுவர்களுடைய சாதித் தொழில் அரசனுடைய ஆணையை யானைமேற் பறைசாற்றி ஊராருக்குத் தெரிவிப்பதாகும். இத் தொழிலையுடைய பழைய குடி யொன்று முற்காலத்தில் உண்டு. இதன் உண்மையை,

முரசுகடிப்பு இடூஉம் முதுகுடிப் பிறந்தோன்

என்ற மணிமேகலையும்,

திருநாள் படைநாள் கடிநாள் என்றுஇப்
பெருநாட்கு அல்லது பிறநாட்கு அறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்
* * * *
மாலை மன்னவன் மணமகன் ஆகுங்
காலை இதுவெனக் கதிர்மணிக் கடிப்பிற்
கண்ணதிர்ந்து இயம்ப இன்மொழி பயிற்றிக்
கல்லெனா அறையும் ஒல்லென் கம்பலை

எனப் பெருங்கதையும் உணர்த்துகின்றன.

இக்குலத்திற் பிறந்த ஒருவருக்கு இவ்வளவு கல்வியும் அறிவும் எவ்வாறு உண்டாகக் கூடும் என்று ஐயப்பாடு கொண்டார்கள். அதனுலே வள் ளுவருடைய பிறப்பைக் குறித்துப் பலவேறு கதை களும் தோன்றின. அவற்றுள் ஒரு கதை சுமார் 500 வருடங்களுக்கு முற்பட்ட ஞானமிர்தம் என்ற

நூலிலே காணப்படுகிறது. யாளிதத்தன் என்ற ஓர் அந்தணனுக்கு ஒரு புலைச்சியினிடத்தில் வள்ளுவர் பிறந்தார் என்று இந்நூல் கூறுகிறது. இக் கதையையே சிறிது மாற்றி ஆதி என்ற புலைச்சிக்கும் பகவன் என்ற அந்தணனுக்கும் பிறந்தவரென்று திருவள்ளுவர் சரித்திரம் என்ற வசன நூலும் கூறுகிறது.

தம்முடைய கல்வியினாலும் அறிவினாலும் ஒழுக்கத்தாலும் வள்ளுவர் மிகச்சிறந்து விளங்கினார். இதுபற்றி ஓர் அழகிய கதை வழங்கி வருகிறது. திருக்குறளை இயற்றிய பின்பு அந்நூலை அரங்கேற்றுவதற்காக மதுரையிலிருந்த கடைச் சங்கத்திற்கு வள்ளுவர் சென்றார். சங்கத்திலிருந்த புலவர்கள் இந்நூலை அங்கீகரியாமல் பல தடைகள் கூறிவந்தனர். முடிவில், 'நாங்கள் வீற்றிருக்கும் இந்தச் சங்கப்பலகை எந்த நூலுக்கு இடம் கொடுக்குமோ அந்த நூலினையே நாங்கள் அங்கீகரிப்போம். நீர் இந்த நிபந்தனைக்கு இணங்குவீரா?' என்று வள்ளுவரை அவர்கள் கேட்டார்கள். வள்ளுவர் இணங்கவே, திருக்குறள் சங்கப்பலகையின்மீது வைக்கப்பட்டது. வைத்தவுடன், தன்மீதிருந்த புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் இருக்க இடங் கொடாது சுருங்கி, திருக்குறள் மாத்திரம் இருக்கத் தக்க அளவாக அப்பலகை அமைந்தது. சங்கப் புலவர்கள் அனைவரும் அப்பலகையிட்டிருந்த பொற்றாமரைத் தடாகத்தில் வீழ்ந்தனர். பின்னர் அப் புலவர்கள் திருக்குறளின் பெருமையையும், அதன் ஆசிரியரது கல்வி நலம், அறிவுநலம் முதலியவற்றையும் உணர்ந்து அதனை அங்கீகரித்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வெண்பாக் கூறி நூலைப் புகழ்ந்த

னர். இப்புகழ்ச்சிக் கவிகளின் தொகுதியே இப்போது திருவள்ளுவமாலை என்று கூறப்படுகிறது.

இவ்வாறு கடைச் சங்கப் புலவர்களை வள்ளுவர் வென்று உயர்ந்தார் என்று கூறியதனோடு நமது முன்னோருடைய மனோபாவம் அமைந்துவிடவில்லை. அவரைத் தெய்வப் பிறப்பென்றே கருதினர். பிரமாவே வள்ளுவராக அவதரித்தனர் என்ற நம்பிக்கையும் எழுந்தது.

ஐயாறு நூறும் அதிகார மூன்றுமாய்
மெய்யாய வேதப் பொருள்விளங்கப் - பொய்யாது
தந்தான் உலகிற்குத் தான் வள்ளுவனாகி
அந்தா மரைமேல் அயன்

என்ற செய்யுள் இந்நம்பிக்கையை உட்கொண்டது. இதன் மூலமாகப் பல கதைகளும் கிளைத்துவிட்டன.

இவருடைய மதம் இன்னது எனபதைப்பற்றிப் பலரும் பலவிதமான கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள். சிலர் சைவசமயத்தவர் என்கின்றனர். சிலர் வைஷ்ணவ சமயத்தினர் என்கின்றனர். ஒருவர் வேத வழக்கொடுபட்ட கொள்கையினர் என்று கூறுகிறார். சிலர் சமயங்களைக் கடந்த நிலைமையில் உள்ளவர் என்று கூறுகிறார்கள். ஆனால், கடவுள் வாழ்த்திலே வருகின்ற 'மலர்மிசை யேகினான்' முதலிய தெய்வப் பெயர்களை நோக்கும்போது, வள்ளுவரைச் சைன மதத்தைச் சார்ந்தவர் என்று சொல்லுவதுதான் பொருத்தமாகும்.

இவர் பிறந்த ஊர் மயிலாப்பூர் என்பது கர்ண பரம்பரைச் செய்தி. மயிலாப்பூர் மிகப் புராதன நகரம். சம்பந்தர் இவ்வூரிலுள்ள கபாலீசுவரரைப் பாடுதலால் இதை அறியலாகும். இங்கே ஒருகாலத்தில் சைனர்கள் மிகுதியாக இருந்தார்கள் என்பது

சரித்திர வாயிலாக நாம் அறிந்ததேயாகும். மயிலை யில் ஒரு ஜினாலயமும் இருந்தது. இதிலெழுந்தருளி யிருந்த சுவாமிக்கு மயிலைநாதர் என்பது பெயர். இந்த ஆலயம் சில நூற்றாண்டுகட்கு முன்பு கடல் கொள்ளப்பட்டு மறைந்துபோயிற்று.

இவர் வாழ்ந்த காலத்தைக் குறித்து நாம் அறிய விரும்புவது இயல்பே. கடைச் சங்கத்தில் திருக்குறள் அரங்கேற்றப்பட்டது என்ற கதையை வைத்து இந்நூல் கடைச் சங்க காலமாகிய கி. பி. 2-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்று சிலர் கூறுவார்கள். ஆனால், இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கில் அடங்கியது. இது,

நாலடி நான்மணி நால்நாற்பது ஐந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவே
கைந்நிலையும் ஆம்கீழ்க் கணக்கு.

என்ற வெண்பாவினால் அறியப்படும்.

இந்நூல்கள் சங்கத்துச் சான்றோராலன்றிப் பின் காலத்துச் சான்றோர்களால் இயற்றப்பட்டன என்று தொல்காப்பியத்திற்கு உரையிட்ட பேராசிரியர் கூறுகிறார். சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் வள்ளுவரையும் அவரது பெருநூலையும் பற்றிக் கூறப்பட்டிருப்பது மேலே காட்டப்பட்டது. ஆனால் இந்த இரண்டு நூல்களும் சங்க நூல்கள் அல்ல என்பதும், கி. பி 6 அல்லது 7-ம் நூற்றாண்டில் தோன்றினவாதல் வேண்டும் என்பதும் சரித்திர ஆராய்ச்சியாற் புலனாகின்றன. இந்நூல்களின் காலத்திற்கும் சங்க காலத்திற்கும் இடைப்பட்டதாகிய கி. பி. 5-ம் நூற்றாண்டில் வள்ளுவர்

வாழ்ந்தார் என்றும் திருக்குறளை இயற்றினார் என்றும் கொள்வது நேரிதாகும்.

வள்ளுவரது காலத்தைக் குறித்து அபிப்பிராயங்கள் வேறுபடினும், அவருடைய வாழ்க்கையானது உத்தம வாழ்க்கையாக இருந்த தென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. கர்ணபரம்பரை வரலாறுகளெல்லாம் இதை ஆதரிக்கின்றன. எளிய வாழ்க்கையும், உயர்ந்த மனப்பான்மையும் இவர் உடையரா யிருந்தார். திருக்குறளில் காணும் கருத்துக்களே இதற்குத் தக்க சான்றும்.

திருக்குறள் நூலுக்கு ஒன்பது பெயர்களும், திருவள்ளுவருக்கு ஒன்பது பெயர்களும் வழங்குகின்றன. அவற்றைப் பின்வரும் செய்யுட்களால் அறியலாம்.

சீரார் திருக்குறள் உத்தர
வேதம் திருவள்ளுவர்
பேரார் பொய்யா மொழி
வாயுறைவாழ்த்துப் பெருந்தெய்வ நூல்
ஊரார் பொதுமறை முப்பால்
தமிழ்மறை யொன்பதும் நம்
காராளர் கற்றுணர் செய்யுட்கு
நாமங்கள் கார்க்குழலே.

திருவள்ளுவர் பெருநாவலர்
தேவர்செந் நாப்புலவர்
மருமுநற் பாவலர் தெய்வப்
புலவர்மா தானுபங்கி
உருவெழில் நான்முகனார் நாயனார் என்ற ஒன்பதும்நம்
குருவுரு வாய்வந்த மூர்த்திக்கு
நாமங்கள் கூறுமினே.

## திருநாள்

தமிழ் நாடும் தமிழ் மொழியும் முயன்ற அருந் தவப்பயன் காரணமாக, பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் நமது நாட்டில் திருவவதாரம் செய்தருளிய வள்ளுவர் என்னும் புண்ணிய மூர்த்தியை நினைவு கூரும்பொருட்டு நாம் இன்று கூடியிருக்கின்றோம். இவரது அவதார நிகழ்ச்சியைப் போன்று அத்துணைச் சிறப்புடையதாகப் பிறிதொரு நிகழ்ச்சி தமிழ் மொழிச் சரிதத்தில் உளதென்று கருதுவார் பெரும் பாலும் இல்லை. தமிழணங்கு தலையெடுத்து அவளது புதல்வர்களாகிய நமக்கு இன்முகங் காட்டி நிற்பது இத் திருவவதாரத்தின் பயன் கொண்டே யாகும். தமிழ்நாடு புண்ணிய பூமியாகக் கொள்ளப்படும் பெருமை வாய்ந்தது இவ் அவதாரத்தின் பெருமை பற்றியே யாகும். தமிழ்மக்களாகிய நாம் கௌரவம் உடையதோர் சமுதாயத்தைச் சார்ந்தவர்களென்று எண்ணிடப்பெற்று வருவதற்கும் இவ் அவதாரமே காரணமாகும். இங்ஙனமாகத் திருவவதாரம் செய் தருளிய மஹாபுருஷனை அடிக்கடி ஞாபகத்தில் வைத்துப் போற்றிப் பாராட்ட வேண்டுவது தமிழ் மக்களாகிய நமக்கு உரிமையும் கடமையும் ஆகின்றது. தமிழ்மொழியோடு பிறந்த நமக்கன்றிப் பிற மொழி களைப் பயிலும் அந்நியர்க்கு இப் பேருரிமை இல் லாது போயிற்று. இவ்வுரிமை ஒன்றினாலேயே நாம் இறுமாந்து தலைநிமிர்ந்து நடப்பதற்குத் தகுதி உடையராயினோம். நமது தமிழ்மக்கள் மீதும் நம் தமிழ் மொழி மீதும் பிறர் அழுக்காறு கொள்ளும்படி அத்துணைப் பெருமை அளித்தது இப் பேருரிமை

* 1915-ம் ஆண்டு வள்ளுவர் திருநாளன்று நெல்லை மாண வர் சங்கத்திற் செய்த பிரசங்கத்தின் குறிப்பினின்றும் எழுதியது

யென்றே கருதுகிறேன். இங்ஙனம் சிறப்பும் பெருமையும் நமக்கு அருள் செய்த புண்ணிய மூர்த்திக்கு நாம் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடு உடையராயிருக்கின்றோம்.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்பதன்றோ தமிழ் வேத விதி ?

ஆனல், நமது உரிமையைப் பாராட்டி மகிழ்தற்கும் நமது நன்றியறிதலை வெளிக்காட்டிக் கொள்ளுதற்கும் மாத்திரமன்று நாம் இன்றைக்குக் கூடியிருப்பது. பூர்வத்தில் நாமிருந்த உன்னத நிலைமையினின்றும் தவறிவிட்டோம். நமது பண்டைப் பெருமை நம்மினின்றும் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டது. நாம் அதோகதியில் வீழ்ந்து கிடக்கின்றோம். இப்போது முழுவதும் அடிமைகளாகி விட்டோம். அறிவிலும் ஆண்மையிலும் அன்பிலும் நாம் அடிமைகளாய் உழலுகின்றோம். அன்பிற்கும் அடைக்குந்தாழ் உண்டென்பது இப்போது அறியலானோம். 'கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும் ஆற்றல்' உடையராயிருந்தோம் என்பது பண்டைப் பழங்கதையாய்ப் போயிற்று. ஒரு காலத்தே நமது தமிழ் மக்கள் எங்கணும் சென்றுலவி வாணிகம் செய்து தமிழ் நாட்டுப் பொருள்களை உலகிற்கெல்லாம் உதவி வந்தனர். நுகர்ச்சிக்குரிய பொருள்களே யன்றி அறிவுப் பொருளும் உலகமனைத்திற்கும் கொடுத்துதவும் அத்துணையளவாக நம்மிடம் இருந்தது. அவ் அறிவுப் பொருளை மேன்மேலும் விருத்தி செய்யாது வறிதே வாழ்ந்து எல்லாவற்றையும் இழந்தோம்.

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்

என்ற உண்மையை மறந்துவிட்டோம். பிற நாடுகளில் அறிவு நாடோறும் பெருகிவளர, நம் நாட்டில் அறிவு - வறுமை குடிகொண்டுவிட்டது. மேலை நாடுகளினின்றும் அறிவுப்பொருள் பெற வேண்டி நாம் இரந்து நிற்கின்றோம். தமிழ் நாட்டில் அஞ்ஞான இருள் பரந்து நிலைத்திருக்கின்றது. இவ் அஞ்ஞான இருளில் உழன்று தத்தளிக்கும் நமக்கும் உய்தி யுண்டென்று உணர்த்தி நம்மை நன்னெறியுய்க்கும். ஒரு தெய்வ ஒளியை நாம் அடிக்கடி நோக்கி நெறிப்படுதல் வேண்டுமன்றோ? இவ் இயல்புடைய தெய்வ ஒளி யொன்றை நோக்கி நெறிப்படுதற்கே நாம் இன்று ஒருங்குகூடி யிருக்கின்றோம். தமிழ் நாடனைத்தும் இத் தெய்வ ஒளியை இன்று தரிசித்து உய்தி கூடும்படி இறைவன் அருள் புரிவாராக.

இத் தெய்வப் பேரொளியானது தோன்றிய காலம் இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னென்று கூறுவர். தமிழ் இலக்கிய சரித்திர ஆராய்ச்சியாளரில் ஒரு சிலர் இதனை ஒப்புக் கொள்ளாமலிருத்தல் கூடும். ஆனால், சில நூறு வருஷங்கள் முன் பின்னாகக் கூறிக் கொள்வதில் எனது நோக்கம் பழுது படுவதில்லை. எனது கருத்தெல்லாம் பெருமக்களது அருந் தோற்றத்தால் விசேஷித்து விளங்கும் பிரகாச மின்றித் தமிழ்ச் சரித்திர மண்டலம் வறிதே யிருந்த காலத்து ‘ வள்ளுவர் ’ என்று நாம் கொண்டாடும் இத் தெய்வ ஒளி தோன்றியது என்பதே. அங்கங்கே சிறு சிறு நக்ஷத்திரங்கள் ஒன்று சேர்ந்து கூட்டமாக விளங்கி யிருந்தன. சங்கப் புலவர்கள் என்று நாம் கருதும் நக்கீரர், கபிலர், மாங்குடிமருதனார் முதலானோர் ஒருங்கு கூடிச் சிற்றொளி நல்கித் திகழ்ந்து வந்தனர்.

சிலப்பதிகாரம் இயற்றிய சேரர் பெருமானாகிய பெரு நக்ஷத்திரம் இன்னும் விண்ணில் ஒளிரவில்லை. தண்ணிய அருளொடு மிளிரும் தேவார ஆசிரியர்களும் ஆழ்வாராதியர்களும் இன்னும் இன்னொளி நல்கவில்லை. சிந்தாமணியை உதவியருளிய திருத்தக்க தேவர் என்னும் செவ்விய நல்லொளி இன்னும் முகஞ் செய்து திகழவில்லை. திருத்தொண்டர் புராணம் என்னும் சைவ மெய்ந்நூல் அருளிய சேக்கிழார் எனப்படும் விடிவெள்ளி விண்ணில் இன்னும் அரும்பவில்லை. விண்ணையும் மண்ணையும் தன்னிடமாகக் கொண்டு தனது பேரொளிப் பெருவெள்ளத்தால் இரு பேருலகையும் ஜோதி ஸ்வரூப மாக்கிய கம்பர் என்னும் கவிகுலபாஸ்கரன் இன்னும் உதயம் செய்யவில்லை. பேரொளி மண்டிலங்கள் ஒன்று மின்றிச் சிறு வெள்ளிகள் சிற்றொளி செய்து விளங்கிய தமிழ்ச் சரித்திர மண்டலத்தே நாம் இன்று போற்றித் தொழுகின்ற தெய்வ ஒளியாகிய திங்கள் உதயமாயிற்று.

> திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
> கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடை
> அங்கண் உலகளித்த லான் [போற்றிவ்
>
> (சிலப்பதிகாரம்)

என இயற்கைத் திங்களை வணங்கும் மரபுடைய நாம் அறிவு, நலந் திகழ்ந் தொளிரும் வள்ளுவரென்னும் செயற்கைத் திங்களையும் வணங்கி வாழ்த்துவோமாக!

இப்பூவுலகில் உள்ளவர்க்கு நிலவும் மகிழ்ச்சியும் ஒருங்கு தந்து விளங்கும் இயற்கைத் திங்கள் பூமியினின்றும் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ளது. எவ்வாறு, எப்பொழுது அது தோன்றியது? அதன் சரித்திரம் யாது? இவைபோன்ற

கேள்விகளுக் கெல்லாம் நமக்கு விடை கிடைப்பதரிது. திங்களின் தண்ணிய ஒளி மண்டலத்தின் அழகிலே இன்புறுவதோடு நமது மனம அமைதியுறுகின்றது. அதன் சரித்திரம் பற்றிய கேள்விகள் யாவும் நமது அகங்காரத்தாலும் ஆசைப் பரபரப்பினாலும் எழுகின்றன. சிலசில விடைகளை அநுமானிக்கின்றோம். சிலசில விஷயங்களை நமது மனோபாவனையால் பாவனை செய்கின்றோம். சிறு குழந்தைகள் கூனற்கிழவி அதில் வசித்து வருவதாகப் பாவிக்கின்றார்கள். வயது முதிர்ந்துவிடின் குழந்தைமதியும் நம்மைவிட்டு அறவே யொழிந்து விடுதலுண்டோ? கவிதா கற்பனை யென்பது இக் குழந்தைமதியோடு ஏகதேச ஒற்றுமை யுடையதென்பது பெரியதோர் உண்மையே யன்றோ? ஆகவே, நாமும் பாற்கடலில் அம்புலி தோன்றியதாகப் பாட்டிசைக்கின்றோம்; அதன்கண் முயல் இருப்பதாக வியந்துரைக்கின்றோம்; அதனை ராகு கேதுக்கள் விழுங்கி யுமிழ்வதாகக் கதை விளம்புகின்றோம். இங்ஙனமாகப் புனைந்துரைத்துக் கொள்வதன்றி உண்மை யுணர்ந்து கொள்ளுதல் கஷ்ட சாத்திய மாகின்றது. இதுபோலவே, இன்று நாம் தொழுது போற்றும் ' வள்ளுவர் ' என்னும் தெய்வ ஒளி வீசும் திங்களின் சரித்திரமும் நம்மால் அறிதற்கரிதாய் இருக்கின்றது. எத்தனையோ கட்டுக் கதைகள் புனையப்பட்டுள்ளன! ' வள்ளுவர் ' என்ற பெயரால் அவர் புலைச்சி மகன் என்ற கதை பிறந்தது. புலைக் குலத்தானுக்கு இத்துணைப் பேரறிவும் பெருங்கல்வியும் இருத்தல் அசம்பாவிதம் என்றெண்ணிப் புலைச்சிக்கும் பிராமண னொருவனுக்கும் அவர் பிறந்துள்ளதாகக் கதை யெழுந்தது. சிலர் ' வள்ளுவர் ' என்ற சொல்லுக்கு ' வண்மையுடையார் ' என்று பொருள் கூறி இவ் இடர்க் கடலைக் கடக்கத் தலைப்பட்டனர்.

சீத்தலைச் சாத்தனூர்க்குத் திருவள்ளுவரது திருக்குறளால் தலைக்குத்துத் தீர்ந்த கதை பன்முறையும் கேள்விப்பட்டிருக்கின்றோம். இக்கதை முழுவதும் தலைக்குத்து என்னுந் தொடருக்கு இரண்டு பொருள் இருப்பதாலும் சீத்தலை என்பது ஓரூர் என அறியாமற் போனமையினாலும் ஏற்பட்டதாகும்.

சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—சாந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு

இச்செய்யுளில் தலையிடிமருந்து கூறப்பட்டிருக்கின்றது. இம்மருந்தினை மோந்த மாத்திரையில் தலையிடி தீர்ந்துவிடும். குற்றம் நிரம்பிய நூல்களைத் தினந்தோறும் செவி மடுத்து என்றும் தீராத தலையிடியுடையரா யிருந்த சாத்தற்கு வள்ளுவரது முப்பாலால் அந்நோய் தீர்வெய்திற்று என்பதே இதன் கருத்து. இச்செய்யுளகத்துத் 'தலைக்குத்து' என்ற சொல் பயின்று வந்திருத்தலால், குற்றமுள்ள நூல்களைத் தாம் கேட்குந்தோறும் கேட்குந்தோறும் சாத்தர் ஓர் எழுத்தாணியைக் கொண்டு தம் தலையிற் குத்தித் தமது விதியை நொந்து கொள்வாரென்றும், சீத்தலைச் சாத்தர் என்ற பெயர் வழக்குண்மையால் எழுத்தாணியாற் குத்துண்ட அவர் தலையிற சீழ் எப்போதும் வடிந்து கொண்டிருந்ததென்றும், இச் சீழ்வடிதலும் எழுத்தாணிக் குத்தும் வள்ளுவரது முப்பால் மருந்தினால் அறவே இல்லாது போயின என்றும் கட்டுக்கதைகள் கிளைக்கத் தலைப்பட்டன. இதுபோன்றதொரு தப்பு உணர்ச்சியின் காரணமாக, வள்ளுவர்க்குக் கற்பிற் சிறந்த இல்லறத் தலைவி

யொருத்தியை அடையும் பாக்கியமும் கிடைத்திருக்கின்றது.

அடியிற் கினியாளை அன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை - அடிவருடிப்
பின் தூங்கி முன்னுணரும் பேதையை யான் பிரிந்தால்
என் தூங்கும் என்கண் எனக்கு

என்ற செய்யுள் வள்ளுவர் தமது பத்தினியாரைக் குறித்துப் பாடியதாகக் கருதப்பட்டது. இதனினின்றும் கற்புமாட்சி தெரிக்கவல்ல அழகிய பலகதைகள் புறப்பட்டு விட்டன! ஆனால், இச்செய்யுள் வள்ளுவர் வாக்கு அன்று என்பதற்கு இச்செய்யுளகத்தே பொய்யாத ஓர் சான்று நிலைபெற்றிருக்கின்றது. தூங்குதல் என்ற சொல்லுக்கு உறங்குதல் என்றபொருள் வள்ளுவர் காலத்தில் இல்லை. சங்க நூல்களில் ஓரிடத்தேனும் இப்பொருளில் இச்சொல்லைக் காணுதல் கூடாது. வள்ளுவர் தாமும் இச்சொல்லைப் பலமுறை பிரயோகித்திருக்கின்றார்; பொருள் இதுவன்று. தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றுச் சோம்பியிருந்த பிற்காலத்தே புகுந்த வழக்காகும் இது. பிற்காலத்துப் பிறந்த செய்யுளை வள்ளுவர்பால் ஏற்றி, அவர்க்குத் திருமணம் நிகழ்த்தப் பட்டிருக்கின்றது.

மேற்குறித்தன போன்ற கட்டுக் கதைகளால் ஓருண்மையை நாம் உணர்கிறோம். வள்ளுவரது திருமேனிக்குத் தமிழ்மக்கள் பண்டு தொட்டு இன்று வரை இடையறாத அன்பு பூண்டு வந்திருக்கிறார்கள் என்பதுவே அது. அநேக நூற்றாண்டுகளாகத் தமிழ் மக்கள் தம் உள்ளத்தை வள்ளுவர் கொள்ளை கொண்டு உலவி வருகின்றார். நம்மோடொப்ப, நம் மூதாதையர்களுக்கும் அவரது திருநாமம் சிந்தைக்கும் செவிக்கும் இனிதாயுள்ளது. அவரது சரிதம் எனப்

பெயரிட் டெழுந்தன எல்லாம் புண்ணியம் பயப்பன வாக நம்மவராற் கருதப்பட்டுள்ளன. கரையில்லாது பொங்கி யெழுந்த அன்பின் பெருக்கத்தால் முற்கூறி யன போன்ற கதைகள் முளைத்துச் செழித்து வளர்ந் தன என்று நாம் உணர்ந்த அளவில், நமது மனம் பக்தியாற் கனிவு எய்துகின்றதே அன்றி, அவற்றின் பொய்ம்மை மெய்ம்மைகளைத் தெரிதற்கு ஒருப்படுவ தில்லை. அன்றியும், அழகுள்ள கதைகளில் யார்தாம் ஈடுபடமாட்டார்கள்! யார் தாம் மயங்கிவிட மாட் டார்கள்! குணத்தாலும் செயலாலும் பெரியரா யுள்ளவர்களைப் பற்றிய அழகிய கதைகள் நம்மை வசீகரித்து விட்டன என்று நாம் ஒப்புக் கொள்ளு தலிற் குற்றம் சிறிதேனும் உண்டோ? இல்லை. எனி னும் ஒரு விஷயத்தை நாம் மறந்து விடலாகாது. சந்திரனது ஒளி மண்டலத்தைக் கடந்து அதன் இயற் கையைக் கண்டறிவதற்குக் கண் கூசி வலியற்று நிற்பது போல, திருவள்ளுவரது புகழ் மண்ட லத்தைக் கடந்து அவரது உண்மைச் சரித்திரத்தை யுணர்தற்கு நமது அறிவு வலியற்று நிற்கின்றது. இதனை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் பெரிதும் அவசியமாகும்.

வள்ளுவரது சரித்திரத்தில் ஓர் உண்மை மாத்தி ரம் நம் அறிவை விட்டு எவ்வகையானும் தப்பிச் செல்ல முடியாதபடி அகப்பட்டுக்கொண்டது. அறி வில் அகப்பட்டது என்றுகூடச் சொல்லுதல் தவறு. நமது பார்வையிலேயே மிக எளிதில் அது சிக்கிக் கொண்டது. அவ்வுண்மை யாது எனின், திருவள்ளு வனார் திருக்குறள் செய்தருளினார் என்பதே யாகும். இதனை அறியாதார் இல்லை. ஆனால் இதன் பொருண் மையும் பயனும் உணர்ந்தோர் மிகச் சிலரே யாவர். ஒருநூல் சிறப்பு வாய்ந்ததெனின், அதன் ஆசிரியனது

இதயத்தினின்றும் - அறிவினின்றும் - அது பிறந்திருத்தல் வேண்டும். ஆசிரியன் தன்னையே தனது நூலில் அமைத்து விடுகின்றான். ஆசிரியனது ஜீவநாடி அவனது நூலிலேயே துடிதுடித்துக் கொண்டிருப்பதாகும். ஆசிரியனுக்குரிய விசேஷ ஆத்ம குணமெல்லாம் நூலினகத்துக் காணப்படுதல் நிச்சயம். நூலிற் கூறுகின்ற வாழ்க்கை நிலையில், ஆசிரியன் தானே வாழ்கின்றான். தனது கூரிய கட்புலன் கொண்டு அந்நிலைகளை நோக்குகின்றான். தனது நுண்மாண் நுழைபுலங் கொண்டு விஷயங்களின் உண்மையை நுனித்து உணருகின்றான். தனது பேராற்றலால் அவ்விஷயங்களின் பொருளைக் கூர்ந்துணர்ந்து தனது அரிய புலமைத் திறத்தால் அவற்றைப் பிறரும் கூர்ந்துணரச் செய்கின்றான். சுருங்கக்கூறின், ஆசிரியனது உயிர்வாழ்வின் சாராம்சமே அவன் இயற்றிய பெருநூல் எனத்தகும். இக்காரணம் பற்றியே, மில்டன் என்னும் ஆங்கில மகாகவி, 'அறிவிற் சிறந்த பெரியோனொருவன், அநித்திய மாகிய தனது பூதவுடம்பு நீங்கியபின் என்றும் அழியாத புகழுடம்போடு நித்தியவாழ்வு எய்துதற் பொருட்டு, தனது இனிய ஆருயிரை வாசனை யூட்டித் தைலத் தோணியில் வளர்த்திட்டு வைப்பது போன்றதாகும் அப்பெரியோன் இயற்றிய பெருநூல்' என்னுங் கருத்துப்பட வரைந்திருக்கின்றார். இதன் உண்மை அருஞ்சிறப்பு வாய்ந்த பெருநூல்களோடு மாத்திரமே பொருந்துவதாகும். ஓர் உயரிய நூல் எல்லா வகையானும் உயர்ந்தோனொருவனது உள்ளத்தினின்றே தோன்றுதல் கூடும். நூலை நன்கு உணர்வதன் மூலமாகத் தான் ஆசிரியனை நாம் அறிதல் இயலும். தினந்தோறும் நம்முடன் பழகி வருபவரது குணகுணங்களும், நோக்க முறையும், பெருமையும், சிறு

மையும், அவர்கள் பேசும் குரலும் நமக்குத் தெரிவது போலவே, சிறந்த ஓர் நூலாசிரியனது நூலை நாம் கற்கக் கற்க, அவ்வாசிரியனது குணப் பெருமை, அவன் உலகினை நோக்கும் முறை, அவனது குறை குற்றங்கள், அவன் சொல்லாடும் முறை - இவை யெல்லாம் நமக்குப் புலப்படுகின்றன இவ்வண்ண மாகத் தமிழ்மக்கள் வள்ளுவரை நனகு அறிந்து கொள்ளுதல் ஏலும். அவரது ஜீவிய சரித்திரம் அவர் இயற்றியுள்ள ஒப்பற்ற திருக்குறள் நூலில் விரிவாய் அமைந்திருக்கின்றது. திங்கள் வேறு அதன் ஒளி மண்டிலம் வேறு என்று நாம் கருதுவதில்லை. இங்ஙனமே, வள்ளுவர் வேறு, அவரது தெய்வத் திருக்குறள் வேறு என்பது இல்லை. திருக்குறள் என்பதுதான் வள்ளுவர். ஆகவே, விரிவான சரித் திரம் ஒன்று வேண்டும் என்னும் அவசியமே இல தாய் ஒழிகின்றது. வள்ளுவரது வாழ்க்கையில் பிற மக்களோடொப்ப அவர் செய்திருக்கக்கூடும் சிறு செயல்களால் நமது மனம் அலைப்புண்டு உழலாதபடி அவரது வாழ்வின் தனிப்பெரு நோக்கமாகக்கொண்டு இயற்றிய நூலின்கண் மாத்திரம் நம் அறிவைச் செலுத்திப் பயன்பெறுமாறு ஆணையிடுவித்த ஊழ் விதிக்கு ஒருமுறையில் நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றோம்.

இவ்வாறாகத் தம்மை வேறென்று கொள்ளாது தமது ஆருயிர் நிலைத்து வாழ்வதற்கென்றே அரிதின் அமைத்து வைத்த உடல் போன்று உள்ளதாகும் வள்ளுவர் என்னும் தண்மதி அருளிய அருமைத் திருக்குறள். அழகிய இப்பெருநூலின் இயல்பினை ஒருவாறு சுட்டிக் கூறுவதோடு இப்போது அமைகின் றேன். அங்கண் விசும்பில் ஒளிரும் திங்களின் நிலவினை இன்னார்தாம் நுகர்தற்கு உரியார் என்ப

தில்லை. எளியார்க்கும் வலியார்க்கும், செல்வர்க்கும் வறிஞர்க்கும், சந்திரன் ஒன்று போல ஒளி நல்குகின்றது. பகை நண்பு என்பதும், இனத்தவர் அன்னியர் என்பதும் நிலவுக்கில்லை. இதுபோன்றே இன்று நாம் போற்றுதற்கமைந்த வள்ளுவரென்னும் தெய்வ ஒளியானது யாவர்க்கும் வேறுபாடின்றி ஒன்று போல நெறிகாட்டி உதவும் தகைமையது. வள்ளுவர் தாமே ஓர் அழகிய செய்யுளில் தம் கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

> ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
> பேரறி வாளன் திரு

என்பது அச் செய்யுள். நீர் நிறைந்த ஊருணி தன்னையடைந்தார்க் கெல்லாம் வேற்றுமையின்றி நீரையுதவி இன்பம் அளிக்கின்றது; இவ்வண்ணமே பேரறிவாளனது பெருஞ் செல்வமும் நெடிது நின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவி இன்பம் அளிக்கின்றது என்பது செய்யுளின் கருத்து. உலகத்திற் பேரறிவாளன் என்றழைப்பதற்கு வள்ளுவரைக் காட்டிலும் சிறந்த உரிமையுடையார் அரியர். இவர் தந்தருளிய ‘ திருக்குறள் ’ நூலைக் காட்டினும் பெரியதோர் செல்வம் உளதெனல் அரிதாம். செல்வத்துட் செல்வமாகிய இந்தத் திருக்குறள் நீர்நிறைந்த ஊருணியை ஒத்து நலம் பயக்கின்றது. அறிவுத் தாகத்தால் வருந்துவோர் அனைவரும் திருக்குறள் நூலால் அறிவு உதவப் பெற்று இன்பம் எய்துதல் கூடும். இல்லற நெறியில் நிற்குமவர்கள், துறவிகள், அரசர்கள், குடிகள், பகைவர்கள், நண்பர்கள் இவ் அனைவர்க்கும் அறிவுப் பொருளை இப் பெருநூல் உதவுகின்றது. சுருங்க உரைக்குமிடத்து, பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கை நிலையிலுள்ளவர்களுக்கும்

சிறந்த அறிவுரைக் களஞ்சியமாக விளங்குவது நமது தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் அருளிய தெய்விகப்பெருநூல்.

வள்ளுவரை வானில் நிலவுவிட்டொளிரும் தண் மதியத்திற்கு ஒப்பாகக் கூறிவந்தேன். எல்லார்க்கும் ஒப்ப உதவி உய்ந்நெறி காட்டுதலில் இது பொருந்தும். ஆனால், நமது முதற்பாவலர்க்கே தனித்து உரிய வேறொரு பெருமையும் இருக்கின்றது. நிலவுப் பயன்கொள்ளுதல் வெளிமுற்றத்தும் மேல்மாடத்தும் தான் இயலும். பலகணி யில்லாத வீட்டினுள்ளே நிலவொளி பரவுவதில்லை. வள்ளுவரது தெய்வ ஒளியோ பரவிச் செல்லக் கூடாத இடமே யில்லை. விண்மதியம் போலக் காலத்தால் அதிதூரத்தில் ஒளி விட்டுத் திகழ்ந்த போதிலும், யாவரும் எவ்விடத்தும் கொண்டுசெல்லத் தகும் கைவிளக்குப் போல அடுத்து நின்றுதவும் தன்மை நாம் இன்று தொழுது வணங்கும் தெய்வ ஒளிக்கு உளதாகின்றது. இத் தெய்வ ஒளியால் தமிழ் மக்களாகிய நாம் இருள் நீங்கி உய்தி பெறுவோமாக!

*நின்று சுடர்எறித்து நெஞ்சத் திருள்அகற்றி*
*இன்றுபோல் என்றும் இலங்கிடுக - துன்றுபுகழ்த்*
*தெய்வப் புலமைத் திருவள்ளுவர் என்னும்*
*மெய்வைத்த வேத விளக்கு.*

காலம்

சாதி மத பேதங்களை மறந்து உண்மையாக ஒன்றை மதிப்பிடக் காண்பது மிகவும் அருமை. அங்ஙனம் மதிப்பிட வல்லவர்கள் தமிழர்கள் என்பதற்கு அழியாத ஒரு சான்று உண்டு. அது தான் திருக்குறளைப்பற்றியது. திருக்குறளாசிரியர் இழிவாகக் கருதப்பட்ட வள்ளுவர் குலத்தை சார்ந்தவர். அவரது மதம் ஜைனமதம். ஆனால், தமிழ்மக்கள் இவ்விரண்டையும் சிறிதும் கருதாதபடி அவரது பெரும்புலமையொன்றையே கருதி அவரை உலகத்துப் பேரறிஞர்களுள் ஒருவர் என்று பாராட்டிவருகிறார்கள். சீரிய இலட்சியங்களைச் சுருங்கிய சொற்களால், எளிமையாய், இனிமையாய்க் கூறுதலில் வள்ளுவரோடு ஒத்த சிறப்புடையவர்களைக் காணுதல்அரிது. அவருடைய இனியதிருக்குறளைக்குறித்து,

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து

என்று ஒரு பண்டைப் புலவர் அனுபவித்துப் புகழ்ந்திருக்கிறார். வள்ளுவர் தாமே உயர்ந்த நூல்களின் இயல்பைக் குறித்து 'நவில் தொறும் நூல்-நயம் போலும்' என்கிறார். இச்சிறந்த இயல்பு அவருடைய நூலில் தானே அமைந்துள்ளமை தமிழ்மக்கள் நன்கு அறிந்ததே.

இவரைப்பற்றிப் பற்பல கதைகள் உள்ளனவேயன்றி, உண்மை வரலாறு யாதும் காணப்படவில்லை. எக்காலத்தில் இவர் வாழ்ந்தார் எனபதுகூட

---

* இது 8-10-45-ல் சென்னை ரேடியோ நிலயத்திற் பேசியது.

விவாத விஷயமாயுள்ளது. இதற்குரிய சான்றுகளும் மிகமிகச் சிலவாக உள்ளன. ஒருசிலர் வள்ளுவரது நண்பர் ஏலேலசிங்கர் என்ற கதையை ஆதாரமாகக் கொண்டு, இவ் ஏலேலசிங்கர் மகாவம்சத்திற் கூறப் படும் ஏலாரா என்பவரே எனக் கருதினர். ஏலாரா வின் காலம் கி. மு. 2-ம் நூற்றாண்டின் பிற்பகுதி யென இலங்கைச் சரித்திரங்கள் கூறுதலால், வள்ளு வரும் இக்காலத்தினரே என்று கொண்டனர். மனு நீதிகண்டசோழன் தன்மகன்மீது தேரூர்ந்த கதை ஏலாராவிற்கு ஏற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. பின்னர், இது கதைபற்றிய சான்று என ஒதுக்கி விட்டு, நூற்சான்று கொண்டு காலந்துணிய முற்பட் டனர். சிலப்பதிகாரத்தில்,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளை
(கட்டுரைகாதை - வெண்பா)

என்று ஒரு குறளின் பகுதி எடுத்தாளப்படுகிறது மணிமேகலையில்,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற அப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய் (22,59-61

என வள்ளுவர் குறிப்பிடப்படுகிறார். சிலப்பதிகாரத் தில் கயவாகு என்ற இலங்கை யரசன் கூறப்படு கின்றான். இவன் காலமாகிய (கி. பி. 173 - 195) கி. பி. 2-ம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியே சிலப்பதிகார காலமாகும். எனவே, 2-ம் நூற் றாண்டின் கடைசிப் பகுதிக்கு முன்பாகத் திரு வள்ளுவர் வாழ்ந்தவராதல் வேண்டும். சிலப்பதி காரத்தோடு சமகாலத்தில் இயற்றப்பட்ட மணி மேகலை கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் என்ற

கடைச்சங்கப் புலவரால் இயற்றப்பட்டது. எனவே, கடைச்சங்க காலமாகிய 2-ம் நூற்றாண்டிற்கு முற்பட்டவராவர் வள்ளுவர். ஆதலால், வள்ளுவரை கி. பி முதல்நூற்றாண்டினர் என்று கொள்வதே பொருத்தம்: என்று பலரும் கருதிவந்தனர். ஆனால், சிலப்பதிகாரம் மணிமேகலை இவற்றின் காலம் கி. பி. 6 அல்லது 7-ம் நூற்றாண்டாக இருக்க வேண்டும் என்ற கொள்கை இப்போது வலியுற்றுவருகின்றது. இதனை முன்னரே (பக். 48) குறித்துள்ளேன். இதற்குரிய சான்றுகளும் மிகப் பலவாய்த் தமிழ் நாட்டுச் சரிதத்தோடும் இலக்கிய வரலாற்றோடும் ஒத்தனவா யுள்ளன. எனவே, இக் காப்பியங்களை அடிப்படையாகக்கொண்டு துணிந்த கால வரையறை ஒப்புக்கொள்ளத் தக்கதன்று.

அங்ஙனமாயின் காலவரையறை செய்வதற்கு வேறு சான்றுகள் உண்டா ?

திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கைச் சார்ந்தது. இக் கீழ்க்கணக்கு நூல்கள் இவை என்பது, முன்னரே (பக். 48) 'நாலடி நான்மணி' என்ற செய்யுளால் உணர்த்தப்பட்டது. இதில், திருக்குறள் என்ற பெயர் காணப்படவில்லையே என்று சிலர் ஐயுறலாம், 'முப்பால்' என்று இதில் வருவது திருக்குறள் நூலைக் குறித்ததேயாகும். திருக்குறளுக்கு 'முப்பால்' என்பது ஒரு பெயர். திருவள்ளுவமாலை இயற்றியவர்களுள் பதினொன்கு புலவர்கள் 'முப்பால்' என்றே திருக்குறளை வழங்கியுள்ளார்கள். இலக்கண விளக்கப் பாட்டியலின் உரையில் 'வள்ளுவர் முப்பால்' (சூ 57-உரை) என வருகின்றது. திருக்குறளுக்கு ஒன்பது பெயர்கள் படிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று 'முப்பால்' என்பதாகும். இவற்

ருல், திருக்குறளையே 'முப்பால்' என நம் முன்னோர்கள் வழங்கினார்கள் என்பது வெளிப்படை.

திருக்குறள் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று என்பதற்கு மேற்காட்டிய சான்றுகளேயன்றி வேறு சான்றுகளும் சில உள்ளன. தொல்காப்பியத்திற்கு உரையிட்ட பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் (செய்யுள். 235, உரை) கீழ்க்கணக்கில் இரண்டடிச் செய்யுள் உள்ளது என்று குறிப்பிட்டுத் திருக்குறளிலிருந்து உதாரணமுங் காட்டினர். யாப்பருங்கலக் காரிகையின் பழைய உரைகாரர் 'திருவள்ளுவப்பயன் நாலடிநானூறு முதலாய கீழ்க்கணக்குள்ளும்' என்று தெளிவாக எழுதியிருக்கிறார் (மாஞ்சீர். 40). எனவே, திருக்குறள் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று என்பது ஐயுற முடியாத ஓர் உண்மையாகும்.

கீழ்க்கணக்கு நூல்கள் முற்சங்க நூல்களுக்கு மிகவும் பிற்பட்டவை. இக்கொள்கைதான் தொன்று தொட்டு வழங்கிவருவது. நக்கீரர் இயற்றிய களவியலுரையில் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் பாடிய நூல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள், கீழ்க்கணக்கு நூல்கள் காணப்படவில்லை. நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் கீழ்க்கணக்கு நூல்கள் முதலியன இயற்றியவர்களைப் 'பிற்சான்றோர்' என்று குறிப்பிடுகின்றனர் (செய். 158). இதுவும், மேற்குறித்துள்ளபடி (பக். 48) இவர்கள் முற்சங்கச் சான்றோருக்குப் பிற்பட்டவர்கள் என்பதை வலியுறுத்துகிறது.

அன்றியும், சங்கப்புலவர்கள் வரிசையில் கீழ்க்கணக்கு நூல்களின் ஆசிரியர் பெயர்கள் காணப்படவில்லை. கபிலர், பொய்கையார் என்ற பெயர்கள் மாத்திரம் விலக்காகத் தோன்றலாம். ஆனால், இப்பெயர்கள் ஒவ்வொன்றும் இரு வேறு ஆசிரியர்களைக்

குறிப்பது* என்று கொள்ளுதலே தகுதியாகும். முடிவாக, சங்ககாலச் செய்திகள் சில, கீழ்க்கணக்கு நூல்களில் பண்டைக்காலத்தே நிகழ்ந்தனவாகக் குறிப்பிடப்படுகின்றன. உதாரணமாக, பாரி முல்லைக்குத் தேர் அளித்ததும், பேகன் மயிலுக்குப் போர்வை அளித்ததும் சங்ககாலச் செய்திகள். இவை,

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும் (361)

என்று பழமொழி என்னும் கீழ்க்கணக்கு நூலில் வருகின்றன. பழைய உரைகாரர் 'தொல்லை அளித்தாரை' என்பதற்குப் 'பண்டு கொடுத்தாரை' என்று உரையெழுதினர். மேலும், சங்ககாலத்து இன்றிப் பிற்பட்ட சரித்திரச் செய்தியுங் கூட மிக முற்பட்ட காலத்துச் செய்தியாக ஒரு பழமொழி (சாலமறைத். 93) கூறும்; இச்செய்தி மனுநீதிகண்ட சோழனைப் பற்றியது. எனவே, பழமொழிமுதலிய கீழ்க்கணக்கு நூல்கள் மிகமிகப் பிற்பட்ட காலத்துத் தோன்றியன என்பது உறுதி. ஆதலால், முற்சங்க இலக்கிய காலத்திற்கும் கீழ்க்கணக்கு நூல்களின் காலத்திற்கும் இடையே சில நூற்றாண்டுகளேனும் சென்றிருத்தல்வேண்டுமென ஒருவாறு ஊகிக்கலாம்.

இவ்வூகத்தைக் கீழ்க்கணக்கு நூல்களைச் சார்ந்த நாலடியிலுள்ள இரண்டு செய்யுட்கள் நன்றாக வலியுறுத்துகின்றன.

பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்
கருனைச்சோ றார்வர் கயவர்-கருனையைப்

---

* திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும்: சென்னை ஸர்வகலாசாலைத் தமிழ் வெளியீடு - 15: முன்னுரை (பக். 9 - 11) பார்க்க.

*பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை*
*நீரும் அமிழ்தாய் விடும்* (200)

*மல்லன்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்*
*செல்வ ரெனினுங் கொடாதவர் நல்கூர்ந்தார்*
*நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே*
*செல்வரைச் சென்றிரவா தார்* (296)

இச் செய்யுட்களிற் குறிப்பிடப்பட்ட 'முத்தரையர்' எனபவர் கொடையிற் சிறந்தவர். முற்காலத்தில் 'முத்தரையர்' என்ற ஒரு சிற்றரசர் பரம்பரையார் இருந்தனர். இவர்கள் தங்கள் போர்த்திறமையாலும் கொடை மேம்பாட்டினாலும் கி. பி. 7-ம் நூற்றாண்டிலே பிரபல மடைந்திருந்தார்கள். இந்நூற்றாண்டின் இடைப்பகுதியில் அரசுபுரிந்த முதற் பரமேசுவர வர்ம பல்லவனுக்குப் 'பெரும் பிடுகு' என்று சிறப்புப் பெயர் வழங்கிவந்தது. இப்பல்லவன்கீழ்க் குறுநிலமன்னனா யிருந்த முத்தரையனும் இப்பெயரே சிறப்புப் பெயராகப் 'பெரும்பிடுகு முத்தரையன்' என்று வழங்கப்பட்டான். நாலடியாரின் பழையவுரை 'பெருமுத்தரையர் என்னும் சிறப்புப் பெயர்பெற்ற செல்வர்' என்று கூறுகிறது. நாலடியாரிற் குறிக்கப் பட்ட பெருமுத்தரையன் பெரும்பிடுகு முத்தரையனே எனக் கொள்ளலாம். இவன் காலம் 7-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகவே, நாலடியாரும் சுமார் கி. பி. 650-ல் இயற்றப்பட்டிருக்க வேண்டும்.

முற்சங்ககாலம் கி. பி. 2 - ம் நூற்றாண்டின் இறுதியென்றால், அதற்கும் இக்காலத்திற்கும் சுமார் 4 நூற்றாண்டுகள் இடைப்பட்டிருத்தல் காணலாம். நாலடியாரை ஒழிந்த ஏனைய கீழ்க்கணக்கு நூல்கள் கி. பி. 650-ஐ ஒட்டி முன்பின்னாகத்தோன்றியிருத்தல் வேண்டும் என்றும் கொள்ளலாம். அதாவது, சில

கீழ்க்கணக்கு நூல்கள் கி. பி. 650-க்கு முற்பட்ட காலத்தும், சில அதற்குப் பிற்பட்ட காலத்தும் தோன்றின.

பெரும்பாலும், நாலடியாருக்குத் திருக்குறள் சிறிதளவே முற்பட்டதாகலாம். ஏனெனில், திருக்குறளிலுள்ள கருத்துக்களும் தொடர்களும் நாலடியாரிலும் காணப்படுகின்றன. உதாரணம் :—

*தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்*
*கொள்வர் பயன்தெரி வார்* (104)

என்ற திருக்குறளின் சொல்லும் பொருளும்,

*தினையனைத்தே யாயினும் செய்தநன் றுண்டால்*
*பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்* (344)

என்ற நாலடிச் செய்யுளிற் காணலாம்.

*நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்*
*பின்னீர பேதையார் நட்பு* (782)

என்ற திருக்குறளின் கருத்து,

*பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்*
*வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்*
*வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே*
*தானே சிறியார் தொடர்பு* (125)

என்ற நாலடிச்செய்யுளில் வந்துள்ளது. இங்ஙனமே,

*குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே*
*உடம்போ டுயிரிடை நட்பு* (338)

என்ற திருக்குறளின் பொருள்,

*சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல*
*யாக்கை தமர்க்கொழிய நீத்து* (30)

என்று நாலடியிற் காணலாம்.

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வியர்ப்பக்
கூடலிற் றோன்றிய உப்பு (1328)

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின் (1330)

என்றவற்றின் கருத்துக்கள்,

ஊடி, உயங்காக்கால் உப்பின்றாம் காமம் (391)

என்று நாலடியில் அமைந்துள்ளன. இங்ஙனமே,

கொன்றன்ன இன்னா செயினும் (குறள், 109)

என்றதொடர் நாலடியிலும் (186) வருகின்றது. இவற்றையெல்லாம் நோக்குமிடத்து, திருக்குறளும் நாலடியாரும் சற்று முன்பின்னாகத் தோன்றியன என்பது தெளிவாகும். எனவே, சுமார் கி. பி. 600-ல் வள்ளுவர் வாழ்ந்தனர் என நாம் கொள்ளலாம்.

இத் துணிபு வேறு சில காரணங்களாலும் உறுதியாகின்றது. தொல்காப்பியனுருக்குப் பிற்பட்டவர் வள்ளுவர் என்பதும் நாம் ஊகிக்கத் தக்கதே. தொல்காப்பியத்தில்,

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப (செய்யுள். 178)

என வருகின்றது. இக்கருத்தும் தொடரும்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் (28)

என்ற குறளிற் காணலாம். அன்றியும், தொல்காப்பியர் காலத்தில் 'கள்' என்ற பன்மை விகுதி அஃறிணைக்கு மட்டும் உரியதாயிருந்தது. உயர்திணைப்

பெயர்களுக்கு இவ்விகுதி வருதல் இல்லை. தற்காலத்தில் 'அவர்கள்' 'மறவர்கள்' 'மன்னர்கள்' என்று சாதாரணமாக வழங்குவோம். இந்த வழக்குத் தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தோன்றியதாகும். இப் பிற்பட்ட வழக்கைத் திருவள்ளுவர் இரண்டு இடங்களில் எடுத்தாளுகின்றார். 'பூரியர்கள் ஆழும் அளறு' (919) என்றும் 'மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம்' (263) என்றும் அவர் திருக்குறளில் வந்துள்ளன. இவ்வாறே எதிர்காலத்துத் தன்மையொருமையில் 'அல்' என்ற விகுதிமாத்திரம் வரும் என்று தொல்காப்பியர் கூறினர். உதாரணம்: வருவல், உண்பல் என்பனவாம். வள்ளுவர் 'அன்' என்ற விகுதியையும் வழங்குகிறார்.

இரப்பன் இரப்பாரை யெல்லாம் (1067)

என்ற திருக்குறள் உதாரணம். அன் - ஈறுபற்றி இளம்பூரணர் கூறுவது (தொல். சொல். 200) கவனிக்கத்தக்கது. 'இப்பொழுது இதனை உண்பன், தின்பன் என அன் ஈறாக வழங்குப' என்று எழுதினர். இதனால், அன் - ஈற்றை வழங்கும் திருக்குறள் தொல்காப்பியத்திற்கு மிகப் பிற்பட்டதென்பது எளிதில் உணரலாகும். தொல்காப்பியரது காலம் பல காரணங்களால் கி. பி. 4 அல்லது 5-ஆம் நூற்றாண்டு என்று கொள்ளத் தக்கது (பக். 39); பெரும்பாலும் 5-ம் நூற்றாண்டாகவே இருத்தல் கூடும். ஆகவே, வள்ளுவரது காலம் கி. பி. 5-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்பது தெளிவு.

கி. பி. 5-ஆம் நூற்றாண்டிற்கு எவ்வளவு காலம் பிற்பட்டுத் திருக்குறள் தோன்றியிருத்தல்வேண்டும்?

இவ்வினாவிற்கு விடைவேண்டுமாயின், தமிழ் மொழியின் வரலாற்றை நாம் நோக்குதல்வேண்டும்.

முன்னமே 'கள்' 'அன்' என்ற விகுதிகளைக் கூறினேம். இவைகளை யொப்பப் பல புது விகுதிகளும் சொல்வடிவங்களும் வள்ளுவர் காலத்தில் தமிழிற் புகுந்துவிட்டன. 'அல்லால்' என்றவடிவம்,

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது (377)

என்பது முதலாக 12 இடங்களில் வந்துள்ளது. 'சூழாமல்' (1024), 'செய்யாமல்' (101, 313) என்ற 'மல்' விகுதியும் புதுவழக்கே. அல்லனேல் (386), இன்றேல் (556), உண்டேல் (368), செய்வானேல் (655), வல்லையேல்(1118)என்பவற்றிற் காணப்படும் 'ஏல்' விகுதியும் புதியதொன்றே. இவைகளே யன்றி, 'இல்லதென் இல்லவள் மாண்பானல்' (53) என்றவிடத்து 'ஆனல்' என்ற சொல் வருகின்றது.

பநிமருண்டு பைதல் உழக்கும் மநிமருண்டு
மாலை படர்தரும் போழ்து (1229)

என்ற இடத்திற்போல, 'பொழுது' என்பதன் பிறபட்ட வடிவமாகிய 'போழ்து' என்பது ஐந்து இடங்களில் (412, 539, 569, 930, 1229) வழங்கியுள்ளது. இவற்றுள் 'ஆனல்' என்பதன் சொல்லமைதியை நோக்குவோம். 'ஆயினல்' என்பதுதான் அதன் மூல வடிவம். இவ்வடிவத்தில் 'ஆ' என்பது முதனிலை; 'இன்' என்பது ஓர் எச்ச விகுதி; 'ஆல்' என்பது பிறிதோர் எச்ச விகுதி; 'ஆயின்' என்பதே 'ஆயினல்' என்பதன் பொருளை உணர்த்தவல்லது. இவ்வாருகவும், விகுதிமேல் விகுதி சேர்ந்து அமைந்தது இம் மூலவடிவம். பின்னர் 'போயினன் - போனன்', 'ஆயினன் - ஆனன்' என வருதல்போல, 'இன்' மறைந்து 'ஆனல்' என நின்றது. இவ்வளவு

அமைதி வேறுபாடு இச்சொல்லில் இருப்பதால் இது மிகமிகப் பிற்பட்ட வழக்கென்பது எளிதில் அறியலாகும்.

இவையேயன்றி, முற்சங்க காலத்தில்லாப் புதுச் சொற்களும் குறளில் உள்ளன : ஒப்பாரி (1072 : அப்பர். 5, 3, 1), பட்டி (1074 : அப்பர். 5, 5 - 1) என்பன காண்க.

இங்கே, காட்டிய புதுவழக்குக்களெல்லாம் மிகுதியாய் வழங்கியமை நாயன்மார் ஆழ்வார்கள் காலத்தேயாகும். இக்காலம் சுமார் கி.பி. 600-ல் தொடங்குகிறதென்று பொதுவாகக்கொள்ளலாம். இப்புது வழக்குக்களும் இக்காலத்தில் புகத் தொடங்கின. எனவே, வள்ளுவர் வாழ்ந்தது இக்காலமெனத் துணிதல் பெரிதும் பொருந்தும்.

இனி, பிறிதொருவகைச் சான்றினை நோக்குவோம். வள்ளுவரது நூலில் பாக்கியம் (1141), பூசனை (18), மந்திரி (639), ஆசாரம் (1075) முதலிய வடசொற்கள் எடுத்தாளப்படுகின்றன. 125 வடசொற்களுக்கு மேல்* திருக்குறளிற் காணப்படுகின்

---

*அகரம (1), அஙகணம் (720), அச்சு (475), அதி (636), அநதம (563), அமா (814), அமரர் (121), அமிழ்தம் (11), அமைச்சு (381), அரங்கு (401), அரசா (381), அரண் (381), அவம (266), அவலம் (1072), அவி (259), அவை (332), ஆகுலம் (34), ஆசாரம் (1075), ஆசை (266), ஆணி (667), ஆதி (1), ஆயிரம் (259), இசை (231), இந்திரன் (25), இமை (775), இரா (1168), இலக்கம் (627), உரு (261), உருவு (667), உலகம (11), உலகு (1), உல்கு (756), உவமை (7), உறு (498), எமம் (306), ஏர் (14), கஞ்சு (1037), கணம் (29), கணிச்சி (1251), கதம் (130), கநது (507), கலுழும் (1173), கவரி (969), கவுள் (678), கழகம் (935),

றன. இத் தனி மொழிகளேயன்றி, 'ஆதிபகவன்' என்ற இருமொழித் தொடரும் அந்நூலில் வந்துள்ளமை அனைவரும் அறிவர். அன்றியும், 'ஒருவந்தம்' என்ற சொல் இரண்டு குறள்களில் (563, 593) வந்துள்ளன. இச் சொல்லில் 'ஒரு' என்பது தமிழ்; 'அந்தம்' என்பது வடசொல். 'ஏகாந்தம்' என்

---

களம் (1224), களன் (730), கனம் (1081), காமம் (360), காமன் (1197), காரணம் (270), காரிகை (571), காலம் (102), கானம் (772), குடங்கர் (890), குடி (171), குடும்பம் (1029), குணம் (29), குலம (956), குவளை (1114), கூர் (599), கொக்கு (490), கோடி (337), கோட்டம் (119), கோட்டி (401), சமன் (118), சலம (660), சிவிகை (37), சுவை (714), சூதர் (932), சூது (931), தகர (486), தவம் (19), தாமரை (1103), திண்மை (54), திரு (168), துகில் (1087), துலை (986), தூது (681), தெய்வம் (43), தேயம் (753), தேவர் (1073), தொடி (911), தோட்டி (24), தோணி (1068), தோள (149), நத்தம் (235), நயம் (860), நாகம் (763), நாகரிகம் (580), நாமம (360), நாவாய் (496), நிச்சம (532), நீர (13), நுதுபபேம் (1148), பக்கம் (620), பகுதி (111), படாம் (1087), படிவததர் (586), பண்டம் (475), பதம் (548), பயன் (2), பாததன (1311), பளிங்கு (706), பள்ளி (840), பாகம (1092), பாக்கியம் (1141), பாவம (146), பீழிக்கும (843), பீழை (658), புருவம் (1086), பூசனை (18), பூதங்கள (271), பேடி (614), பேய் (565), மங்கலம் (60), மடமை (89), மதலை (449), மதி (636), மந்திரி (639), மயிர (964), மயில் (1081), மனம் (7), மணி (1273), மா (68), மாடு (400), மானம (384), மீன் (931), முகம் (90), யாமம் (1136), வஞ்சம் (271), வண்ணம் (561), வளை (1157), வள்ளி (1304), வித்தகர் (235), வேலை (1221).

பதற்குரிய கலவைச் சொல்லாக (hybrid) இது அமைந்துள்ளது. இங்குக் காட்டியவை யெல்லாம் வடசொற்களை யெடுத்தாளுதலில் வள்ளுவர் விரிந்த மனப்பான்மை யுடையவர் என்பதை விளக்கும்.

இம்மனப்பான்மை முற்சங்க காலத்திற் சுருங்க அமைந்து நாயன்மார் காலத்திற் பரந்துவிட்டது. சுமார் கி. பி. 600-ல் திருக்குறள் தோன்றியது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

மேலும், வடமொழிச் சொற்களையேயன்றி, வடமொழிக் கருத்துக்களையும் வள்ளுவர் எடுத்தாண்டுள்ளார். 'ஸம்ஸார ஸாகரம்' என்பதனைப் 'பிறவிப் பெருங்கடல்' (10) என்றனர். ஆஶ்ரயாஶ: என்பதைச் 'சேர்ந்தாரைக் கொல்லி' (306) என்றனர். நால்வகை ஆச்சிரமங்களையும்,

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றில் நின்ற துணை* (41)

என்ற குறளிற் கூறினர். பஞ்ச மகாயக்ஞங்களை,

*தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்*
*கைம்புலத்தா றோம்பல் தலை* (43)

என்ற குறளிற் குறித்தனர். சாங்கியநூற் கருத்துக்களை,

*சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்*
*வகைதெரிவான் கட்டே உலகு* (27)

என்ற குறளில் அமைத்தனர். அவித்தை பிறப்பிற்குக் காரணம் என்பதனை,

*பிறப்பென்னும் பேதைமை* (358)

என்ற தொடராற் சுட்டினர். அகங்கார மமகாரங்களை,

*யான் எனதென்னும் செருக்கு* (346)

என்று மொழிபெயர்த்தனர். இவ்வாறாக வடநூற் சாஸ்திரக் கருத்துக்களை ஆண்டுள்ளமையும் இவர் காலம் சுமார் கி.பி. 600 என்பதை வற்புறுத்துகிறது. அன்றியும, வடமொழியிலுள்ள சில ஸ்மிருதிகளையும் இவர் அறத்துப்பாலிற் பின்பற்றிச் செல்லுகின்றனர். மனு ஸ்மிருதியில்,

*இல்லறத்தில் நிற்பவன் ஏனைமூன்று நிலைகளிலும் உள்ளவர்களுக்கு உணவு ஈந்தும், வேதஞானம் உதவியும் அவர்களை ஓம்புதலால், அவனே நால் வகை நிலையினருள்ளும் தலைமை பெறுகின்றான்*

(மனு. III, 78)

என்று வரும் கருத்து, திருக்குறளில்

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றில் நின்ற துணை* (41)

எனவும்,

*இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை* (47)

எனவும் வருவனவற்றில் அமைந்துள்ளமை காணலாம். அன்றியும் இம் மனு ஸ்மிருதியில் அங்கங்கே காணப்படும் உவமைகளும் திருக்குறளில் காணப்படுகின்றன. உதாரணமாக,

*உவர் நிலத்தில் இட்ட வித்தானது பயன்படாதவாறு போல*

என மனுவில் (III, 142) வரும் உவமை

*உளர் என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்*
*களரனையர் கல்லா தவர்* (406)

என வந்துள்ளது. இதே ஸ்மிருதியில்,

> தொடுகருவிகொண்டு பூமியைத் தோண்டுதலால்
> ஒருவன் நீர்பெறுதலபோலக் குருவினிடத்துள்ள
> வித்தையை அவர்க்குச் சேவைபுரிந்து மாணவகன்
> பெறுகிறான் (II, 218)

என்று வரும் கருத்து,

> தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறும் அறிவு (396)

என்ற குறளில் மிக்க நயம்பட எடுத்துரைக்கப்படு கின்றது. இங்ஙனம் பல. திருவள்ளுவமாலையில் ஒரு செய்யுளில்,

> ... ... மனு, பண்டைமறை
> நேர்வன மற்றில்லை நிகர்

என்று கூறியது, இங்குக் காட்டியவைபோன்ற கருத் தொற்றுமைகளை நோக்கியே யாகும்.

அறத்துப்பாலில் மனுமுதலிய ஸ்மிருதிகளைப் பின்பற்றியது போல, பொருட்பாலிலும் சாணக்கி யரது அர்த்தசாஸ்திரம், காமந்தகம் முதலிய நீதி நூல்களை வள்ளுவர் பின்பற்றினர் என்பர். அரசர்க் குரிய அங்கங்கள் ஏழு என்ற அர்த்தசாஸ்திரக் கொள்கையை (காமந்தகம் IV, 1) உட்கொண்டு,

> படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு (381)

என்று கூறினர். அரசனுக்குரிய பொருள்கள் இன்ன என்பதை,

> உறுபொருளும் உல்கு பொருளும் தன் ஒன்னார்த்
> தெறுபொருளும் வேந்தன் பொருள் (756)

என்ற குறள் தெரிவிக்கின்றது. இதுவும் வடநூற் கருத்தே. இங்கு வந்துள்ள 'உல்கு' என்பது 'சுல்கம்' என்ற வடமொழியின் திரிபே யாகும். இவ்வாறே, அரண்களின் இயல்பும், ஒற்றரியல்பும், தூதரியல்பும் வடமொழி நீதிநூற் கருத்துக்களையே பின்பற்றியன. அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையை,

*அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்*
*திறம் தெரிந்து தேறப் படும்* (501)

என்று குறள் கூறுகிறது. இதனைச் சாணக்கியர் தமது அர்த்த சாஸ்திரத்தில் (அதிகரணம் 1, அத்தியாயம் 10) உபதை என்றபெயரால் விரிவாகக் கூறியுள்ளார். பரிமேலழகர் உரை இதனை நன்கு தெளிவிக்கின்றது. அரசனுக்குரிய அறுவகைக் குற்றங்களையும்,

*செருக்குஞ் சினமுஞ் சிறுமையும் இல்லாப்*
*பெருக்கம் பெருமித நீர்த்து* (431)

*இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா*
*உவகையும் ஏதம் இறைக்கு* (432)

என்ற இரண்டு குறள்களிற் காணலாம் இவற்றை வடநூலார், காமம், குரோதம், லோபம், மானம், மதம், ஹர்ஷம் என்று பெயரிட்டு அரிஷட்வர்க்கம் என வழங்குவர். கௌடில்யரது அர்த்த சாஸ்திரத்திலும் (I, 6 இந்திரிய ஜயப்பிரகரணம்), காமந்தகம் (I, 57) முதலியவற்றிலும் இவ்வாறு வந்துள்ளது. பொருட் பாலில் அங்கவியலின் இறுதியிலுள்ள 'மருந்து' என்னும் அதிகாரம் வடமொழியிலுள்ள ஆயுர்வேத நூல்களைப் பின்பற்றியதாகும். இது, 'வளிமுதலா எண்ணிய மூன்று' (941) என வருதலால் அறியப்படும். அன்றியும்,

*உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று*
*அப்பால் நாற் கூற்றே மருந்து* (950

என்ற குறளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையினுல் மேற்கூறியது உண்மை என்பது நன்ருகப் புலப்படும்.

இங்ஙனமே, காமத்துப்பால் வாத்ஸ்யாயனரது காமசூத்திரத்தைப் பின்பற்றியதென்று பரிமேலழகர் கூறினர்.

*கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்*
*ஒண்டொடி கண்ணே உள* (1101)

என்ற குறள் காமசூத்திரத்தில் வரும் ஒரு கருத்தை (I, 2, 11) அருமையாய் அமைத்துக் கூறுகிறது.

இங்ஙனமே,

*ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாம்தம்மை*
*நீடு வாழ் கென்பாக் கறிந்து* (1312)

என்று வரும் குறள் காமசூத்திரத்தில் உள்ள (VI, 2, 15) வேருெரு கருத்தை உட்கொண்டது.

மேற்காட்டிய வடமொழி நூல்களுள் சாணக்கியர் அர்த்த சாஸ்திரத்தின் காலம்* சுமார் கி. பி. 300 என்றும், வாத்ஸ்யாயனர் காமசூத்திரத்தின் காலம் சுமார் கி. பி. 400 என்றும் ஆசிரியர் பேரிடேல் கீத் (A History of Sanskrit Literature p. 461) கூறினர். எனவே, திருக்குறளை இயற்றிய வள்ளுவர் கி. பி. 6-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர்

---

*சந்திரகுப்த மௌரியன் காலத்தில் சாணக்கியர் தம் நூலை யியற்றினுர் எனப் பலரும் கொள்வர். இக்கொள்கை ஒப்புக்கொள்ளத்தக்கதன்றெனத் தக்க காரணங்கள் காட்டி மறுக்கப் பட்டுள்ளது. சேரன் செங்குட்டுவன் காலத்தில் சிலப்பதிகாரம் தோன்றியது என்ற பழங்கொள்கையை ஒத்ததே இதுவும்.

என்று கொள்வது மிகப் பொருத்தமாதல் காணலாம்.

இனி, வள்ளுவரது காலத்தின் சிறப்பியல்புகளைச் சிறிது நோக்குதல்வேண்டும். தமிழ் மொழியின் நிலையை எடுத்துக்கொண்டால், சங்க காலத்துத் தமிழினின்றும் சிறிதளவு வேறுபட்டு நாயன்மார், ஆழ்வாராதியர்களுடைய தமிழோடு ஓரளவு ஒத்ததாக வள்ளுவர் தமிழ் உள்ளது. இடைக்காலத் தமிழின் முதற்படி என்று நாம் இவர் தமிழைக் குறிக்கலாம். இதற்குரிய பல இயல்புகளும் வள்ளுவர் நூலிற் காணக்கிடக்கின்றன.

ஒலிபற்றிய ஓர் இயல்பை இங்கே காட்டுதல் மிகையாகாது. தொல்காப்பியர் காலத்திலே சார்பெழுத்தாகிய ஆய்தம் அதனை அடுத்துள்ள மெய்யெழுத்தோடு ஒத்த ஒலியியல்பை யுடையதாயிருந்தது.

சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே
(தொல. நூலமரபு. 1)

என்று கூறி, பின்,

சார்ந்து வரின் அல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியில் தம்மியல்பு இயலும்
(தொல. பிறப்பு. 19)

என ஆய்த ஒலி பிறக்கும் வகையை உணர்த்துவதனால் மேற் கூறியது விளங்கும். உதாரணமாக, அவ்-சிறிய என்பதில் வகர ஒற்று ஆய்தமாகத் திரிந்து பின்னர் அஃசிறிய என்று ஒலிக்கப் பெறும். இது,

வேற்றுமை அல்வழி ஆய்த மாகும் (84)

என்ற புள்ளிமயங்கியற் சூத்திரத்தால் புலனும். ஆனால், தொல்காப்பியர் காலத்திற்குப் பிற்பட்ட

காலத்திலே அகரத்திற்குப் பின்னாகவரும் ஆய்தம் ஐகாரம்போல ஒலிக்கப்பெற்று வந்தது. இவ்வாறு வருதற்கு,

ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தோடு மெய்பெறத் தோன்றும்

என்ற அவிநயச் சூத்திரத்தை யாப்பருங்கல விருத்தியுரைகாரர் காட்டினர் (பக். 30). உதாரணமாக, கஃசு, கைசு எனக் கல்வெட்டுக்களில் வருவதைக் காட்டலாம். அகரக் குறிலைத் தவிர, ஏனைய குற்றெழுத்துக்களுக்குப் பின்வரும் ஆய்தம் யகர மெய்யின் ஒலியையே பெற்று வந்தது. ஆனால், இவ்வாறு ஒலிக்கும் என்பதை இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடவில்லை. இலக்கியங்களில் உதாரணங்கள் மலிந்து வந்துள்ளன.

செய்க பொருள் யாரும் செறுவாரைச் செறுகிற்கும்
எஃகு பிறிதில்லை

என்று வரும் சிந்தாமணிச் செய்யுளை (497) இங்கே காட்டலாம். இச்செய்யுள் ஒரு திருக்குறளை அடியொற்றி வந்ததென்பது வெளிப்படை. அத் திருக்குறள் வருமாறு :

செய்க பொருளைச் செறுநர் செருக்கு அறுக்கும்
எஃகுஅதனில் கூரியது இல் (759)

இச்செய்யுளில் வரும் எஃகு அதனில் என்பதனை வள்ளுவர் காலத்தில் எய்கதனில் என்று உச்சரித்திருத்தல் வேண்டும். இதனாலும் தொல்காப்பியருக்குப் பிற்பட்டவர் வள்ளுவர் என்பது வெளியாகின்றது. இவ்வாறு யகரமாய் ஆய்தத்தை ஒலித்ததோடு நின்று விடவில்லை. அகரத்தை அடுத்து வந்த ஆய்தத்தை நிரையசையாகவும் ஒலித்து வந்திருக்கின்

னர். இந்த ஒலி வேறுபாடும் திருக்குறளில் காணப் டுகிறது.

*அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்கு மாறு* (943)

ன்ற குறளால் இது புலப்படும். ஆகவே, அஃ என் தனை அயி என்று வள்ளுவர் காலத்தில் உச்சரித்தன ாதல் வேண்டும். இடைக்காலத் தமிழில் ஆய்தம் ங்ஙனம் வேறுபட்டு ஒலிக்கப் பெறலாயிற்று. இத றல், திருக்குறள் சங்ககாலத்திற்குப் பின் இடைக் ாலத் தமிழில் அமைந்தது என்பது நன்கு உணரப் டும்.* கம்பர் காலந்தொட்டு, 'அஃ' என்பதை 'அகு' ன்று வழங்கினர் (பால-திருவவ. 136).

வள்ளுவர் காலத்துத் தமிழ்நாடு சிறந்த லட்சி ங்களையுடையதாய் விளங்கியமை புலனாகும். ஒழுக்க நெறியானது இவரால் வற்புறுத்தப்படுகிறது. இவர் ாலத்திற்கு முன்புள்ள சங்ககாலத்தில் மக்கள் லௌகிகத்தில் ஈடுபட்டவர்களாய்ச் சாமானிய அறங் ளைக் கைக்கொண்டவர்களாய் இருந்தனர். போர் செய்து புகழ் வளர்ப்பதே தமது வாழ்வின் பெரு நோக்கமாகக் கொண்டனர். இந்நோக்கத்திற்கு அக் ாலத்துப் பரவத்தொடங்கிய வைதிக சமயமும் டன்பட்டிருந்தது ; இராசசூய யாகம், அசுவமேத ாகம் முதலியவற்றைப் புரிவதில் அரசர்களுக்கு ஊக்கம் அளித்து வந்தது. ஆனால் ஜைனசமயம் கொலையை அக்காலத்தே எதிர்த்துவந்தது என்று சொல்லலாம். கொல்லாமை முதலிய கொள்கைகளை அது மிகவும் போற்றிவந்தது ; நல்லொழுக்கத்தின் அவசியத்தை அறிவுறுத்தி வற்புறுத்தியது. சாமானிய

---

* ஸ்ரீ. மு. இராகவையங்கார் : 'ஆய்தவோசை' என்ற கட்டுரையைப் பார்க்க செந்தமிழ், தொகுதி, 41, பகுதி - 1.

லௌகிகநிலையிலிருந்து அதனினும்மேம்பட்ட ஒழுக்க நிலையை நாட்டிற் பரப்புவதற்கு ஜைன சமயத்தவர்கள் மிகவும் முயன்றார்கள். இம் முயற்சியாற் கனிந்த கனியே வள்ளுவரது திருக்குறள் என்று கூறுதல்வேண்டும். வள்ளுவர் காலத்தும் அவர்க்குப் பின்பும் செழித்தோங்கிய சமயக்கிளர்ச்சிக்கு ஆதாரமாக இவர் கூறிய ஒழுக்கநூல் அமைந்து விட்டது. தமிழ்மக்கள் உள்ளத்தை இவரைப் போலக் கவர்ந்து தம்வசமாக்கியவர்கள் யாரும் இல்லையென்றே சொல்லுதல் வேண்டும்.

இவர்காலத்துக் கல்விநிலையை நோக்கினால், அதுவும் பெருஞ் சிறப்புடையதாகவே காணப்படுகிறது. பரதகண்டம் முழுமையும் போற்றும் பெருமையினாலும், முனிவர்கள் முதலியோர் நூல் இயற்றிய அருமையினாலும், நமது பாரத பூமியில் பல தேசங்களிலுமுள்ளவர்கள் பல துறைகளிலும் நூல்கள் இயற்றிய சிறப்பினாலும், பெரும் புகழ் எய்திய வடமொழி நமது தாய்மொழிக்குத் துணையாய் உதவி புரிந்துவந்தது. தமிழ்மக்களது அறிவு வளம் படுவதற்குச் சிறந்த கருவியாக அவ்வடமொழி நூல்கள் இருந்தன. அவற்றை நன்கு பயன்படுத்த வேண்டும் காலமாக இருந்தது வள்ளுவரது காலம். ஆகவே, அக்காலத்துத் தமிழ்மக்கள் பரந்துபட்ட கல்வியறிவிற் பெரிதும் ஈடுபட்டவர்களாயிருந்தனர். எனவே, வள்ளுவரது காலம் தமிழ்மக்கள் சரிதத்தில் மிகவும் பெருமைபெற்று விளங்கிய காலம் என்று நாம் சொல்லலாம்.

## நூற் பெயர் :

வள்ளுவர் அருளிச்செய்த நூல் ஒன்பது பெயர்களால் வழங்கியது என்று முன்பு குறித்துள்ளேன் (பக் - 49). அவை வருமாறு :

1. திருக்குறள்
2. உத்தரவேதம்
3. திருவள்ளுவா
4. பொய்யாமொழி
5. வாயுறை வாழ்தது
6. தெய்வநூல்
7. பொதுமறை
8. முப்பால்
9. தமிழ்மறை

இங்கே திருக்குறள், முப்பால், பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து என்ற நான்கு பெயர்களும் திருவள்ளுவர் மாலையினின்றும் எடுக்கப்பட்டுள்ளன. தமிழ்மறை என்ற பெயர் வேதப் பொருளைத் தமிழால் வள்ளுவர் உணர்த்தினர் என்னும் கருத்தினின்றும் கொள்ளப்பட்டது. இக்கருத்துத் திருவள்ளுவர் மாலையில் நான்கு செய்யுட்களில் (24, 28, 37, 42) வந்துள்ளது. பொதுமறை என்ற பெயர் கல்லாடர், வெள்ளி வீதியார் என்ற புலவர்கள் வள்ளுவர் மாலையில் முறையே பாடியதாகக் கூறும்

ஒன்றே பொருள் என்னின் வேறுஎன்ப வேறுஎனின்
அன்றுஎன்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி (9)

செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருள்ஒன்றே—செய்யா
அதற்குரியார் அந்தணரே ஆராயின் ஏனை
இதற்குரியா ரல்லாதார் இல் (28)

என்ற செய்யுட்களின் கருத்தை உட்கொண்டு அமைத்ததாகும். உத்தரவேதம் என்பது பின் தோன்றிய வேதம் என்று பொருள்படும். நாமகளும், உக்கிரப் பெருவழுதியும் பாடினாராகக் கூறும் இரண்டு வள்ளுவர் மாலைச் செய்யுட்களின் கருத்தை உட்கொண்டு இப்பெயர் அமைந்துள்ளது. அச்செய்யுட்கள் வருமாறு :

*நாடா முதல் நான்மறை நான்முகன் நாவில்*
*பாடா இடைப் பாரதம் பகர்ந்தேன் - கூடாரை*
*எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாறபின்*
*வள்ளுவன் வாயதென் வாக்கு.* (2)

*நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்* [முகத்தோன்
*தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூல்* [முறையை
*வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்*
*சிந்திக்க கேட்க செவி.* (4)

தெய்வநூல் என்ற பெயர் ஆசிரியரைத் தெய்வத் திருவள்ளுவர் (வள்ளுவர்மாலை. 19) எனவும், தேவிற் சிறந்த திருவள்ளுவர் (வள்ளு - மாலை. 39) எனவும், தேவர் திருவள்ளுவர் (வள்ளு. மாலை. 41) எனவும் பலபடப் பாராட்டிப் புகழ்ந்ததுகொண்டு, அவரது நூலும் தெய்வநூல் என்று அழைக்கப்பட்டது எனக் கருதலாம். அன்றியும் ஒரு செய்யுளில் 'தெய்வம்' என்ற அடை வள்ளுவருக்கும் குறளுக்கும் சென்று இயையுமாறு பாடப்பெற்றுள்ளது. அச்செய்யுள் வருமாறு :

*பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் அல்லாத*
*மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலில்*

தெய்வத் திருவள்ளுவர் செப்பிய குறளால்
வையத்து வாழ்வார் மனத்து. (49)

இதனை மனத்துக்கொண்டும் தெய்வநூல் என்று வள்ளுவர் இயற்றிய பெருநூல் உபசரிக்கப்பட்டது என்று கருதலாம்.

இனி, திருவள்ளுவர் என்ற நூற்பெயரை நோக்கு வோம். நூல்களுக்குப் பெயரிடுகின்ற வகைகளை நோக்குமிடத்துச் செய்தானால் பெயரிடுதல் உண்டு என்பது

முதல்நூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும்
இடுகுறி யானும் நூற்கு எய்தும் பெயரே (நன். 48)

என்ற சூத்திரத்தால் அறியலாம். அன்றியும் கருத்தா-ஆகு பெயர்க்கு உதாரணமாக, 'இந்நூல் திருவள்ளுவர்' என்பதனைச் சங்கர நமச்சிவாயர் (நன். 290) கொடுத்துள்ளார். இவ்வழக்குப் பற்றித் திருவள்ளுவர் செய்த நூலுக்குத் திருவள்ளுவர் எனப் பெயர் அமைந்தது என்பது உறுதி. இப்பெயர் வழக்கை

பல்காற் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப்பியம் திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும் ஆண்டினும் இலையேல்
வடமொழி வெளிபெற வழங்கும் என்க

எனவரும் இலக்கணக் கொத்துச் சூத்திரத்தாலும் அறியலாம். 'திரு' என்ற அடையை நீக்கி வள்ளுவர் என வழங்குதலும் உண்டு. 'வள்ளுவர் தொல்காப்பியமே' என்ற கொற்றங்குடியார் வாக்கு இதற்குச் சான்று.

மேற்குறித்த ஒன்பது பெயர்களே அன்றி, திருவள்ளுவப் பயன் என்பதும் இந்நூலுக்கு ஒரு பெயராக

வழங்கியுள்ளது. இது, 'மாஞ்சீர் கலியுள் புகா' என்னும் யாப்பருங்கலக் காரிகையின் (40) பழைய உரையில், 'திருவள்ளுவப் பயன், நாலடி நானூறு முதலாய கீழ்க் கணக்குள்ளும் முத்தொள்ளாயிரம் முதலாகிய பிற்சான்றோர் செய்யுளுள்ளும் வஞ்சி யுரிச்சீர் வந்திலாமையானும்' எனவருதலால் அறிய லாகும். மயிலைநாத ருரையும் (நன்னூல் 274. உரை), வீரசோழிய உரையும் (யாப்பு. 21) இப்பெயரையே வழங்குகின்றன. இப்பெயர் கொல்லம் 976 - ம் ஆண் டில், அதாவது இற்றைக்கு 147 ஆண்டுகளுக்கு முன் னர், எழுதப்பெற்ற ஓர் ஏட்டில் சிறிது திரிந்து காணப்படுகிறது. அச் செய்யுள் வருமாறு:

திருத்தகுசீர் வள்ளுவர்தம் தெய்வப் பயனின்
கருத்தருமை தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனெனும்
மன்னு முயர்நாமன் வந்து.

(பெருந்தொகை, 1544).

ஜைனர்களும் பௌத்தர்களும் இப்பெயரை மிகுதி யாய் வழங்கினர் என்று தோன்றுகிறது.

இப்பெயராலன்றி, தமிழ் மனுநூல் என்ற பெய ராலும் இந்நூல் வழங்கப்பட்டுள்ளது. திருக்குறள் உரைச்சிறப்புப் பாயிரத்தில், பரிமேலழகர்

வள்ளுவன் மீளவும் வந்துதித் துலகோர்க்கு
உள்ளிய பொருளை உரைத்தனன் என்ன
எழுத்து முதல இலக்கண வகையும்
வழுத்து வேதாகம வகையதன் பயனும்
தங்கிய குறட்பாத் தமிழ்மனு நூலிற்கு
இதுவே உரையென்று யாவரும் வியப்பப்
பொழிப்பக லத்தொடு நுட்ப எச்ச
விழுப்பொருள் தோன்ற விரித்தினி துரைத்தனன்

(பெருந்தொகை, 1543)

எனக் கூறப்படுகின்றார். இதனால் தமிழ் மனுநூல் என்ற பெயரும் இந்நூலைக் குறித்தல் தெளிவாம்.

'திருவள்ளுவ மாலை' என்பதும் திருக்குறளுக்கு ஒரு பெயராக வழங்கப்பட்டது என ஊகித்தற்கு இடமுண்டு. தற்காலத்தில், திருக்குறள் பற்றிப் பண்டைப் புலவர்கள் பாடிய சிறப்புப் பாயிரச் செய்யுள் - தொகுதியைத் திருவள்ளுவர் மாலை என வழங்குவர். ஆனால், வேம்பத்தூர் முத்து வேங்கடசுப்ப பாரதியார் தாம் இயற்றிய 'பிரபந்த தீபிகை' என்னும் நூலில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை உரைக்கு மிடத்து,

> வாரிதிணை மாலைநூற் றைம்பதாம் திணைமொழி
> வழுத்தைம்ப தாம் வள்ளுவ
> மாலையீ ரொன்பதாய்ச் சாற்று பிரபந்தம்
> வழுத்துவர்கள் புலவோர்களே

என்று குறிக்கின்றார். இங்கே 'வள்ளுவ மாலை' என்பது திருக்குறள் நூலை உணர்த்துதல் வெளிப்படை.

மேலே காட்டிய பெயர்களுள், வள்ளுவர் தமது நூலுக்கு இட்ட பெயர் யாது?

தெய்வத் தன்மை பற்றி எழுந்த தெய்வநூல் என்ற பெயரும், வடமொழி வேதத்தோடு ஒப்புமை பற்றி எழுந்த தமிழ்மறை, பொதுமறை, உத்தர வேதம் என்ற பெயர்களும், புகழ்ச்சி பற்றி எழுந்த பொய்யா மொழி, வாயுறை வாழ்த்து என்ற பெயர்களும் பிற்காலத்தவர்கள் நூலின் பெருமையை உணர்ந்து அருமைப்பாட்டுடன் வழங்கிய பெயர்கள் எனவே கொள்ளத்தக்கன. கருத்தா - ஆகுபெயராக எழுந்த திருவள்ளுவர் என்ற பெயரும், வள்ளுவர் பெயரோடு சார்ந்து எழுந்த திருவள்ளுவப் பயன், திருவள்ளுவ மாலை என்ற பெயர்களும் இங்ஙனமே

பிற்காலத்துத் தோன்றியன எனவே கருதத்தக்கன. இனி, எஞ்சி நிற்கும் பெயர்கள் திருக்குறள், முப்பால் என்ற இரண்டே. திரு என்ற அடை கொடுத்துத் தமது நூலை வள்ளுவர் வழங்கினார் என்று கொள்ளுதல் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஆகவே, முப்பால் என்ற பெயர்தான் வள்ளுவர் தமது அரிய நூலுக்குக் கொடுத்த பெயரென்று நாம் கொள்ளவேண்டும். நாலடி என்பதைப்போல, குறள் என்பதும் நூற்பெயராகலாம். ஆனால், சிறப்புப்பாயிரமாய் அமைந்த திருவள்ளுவர் மாலையில் முப்பால் என்ற பெயரே பல செய்யுட்களில் (9, 10, 11, 12, 15, 17, 18, 19, 30, 31, 39, 44, 46, 49, 53) வழங்கப்பட்டுள்ளது. இது முப்பால் என்பதுவே நூற்பெயர் என்பதை வலியுறுத்துகின்றது. இறுதியாக, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை உணர்த்தும் 'நாலடி நான் மணி' என்று தொடங்கும் பழைய செய்யுளில் (பக். 48) முப்பால் என்பதுவே இந்நூலின் பெயராகப் படிக்கப்பட்டுள்ளது. ஆகவே, திருக்குறளுக்கு வள்ளுவர் இட்ட பெயர் முப்பால்* என்பது தெளிவாம்.

---

*மிகப் பிற்பட்ட காலத்தவர் ஒருவர் விருத்தப் பாவினால் சிறு நூலொன்று இயற்றி, அதற்கு 'முப்பால்' என்று பெயரிட்டனர். இந்நூல் சில ஆண்டுகட்கு முன் அச்சில் வெளிவந்துள்ளது.

## நூல் – அமைப்பு

வள்ளுவர் தமது நூலுக்கு முப்பால் எனப் பெயரிட்டார் என்பதை மேலே தெளிந்தோம். இப் பெயரினின்றும் மூன்று பெரும் பகுதியாகத் தமது நூலை அவர் பகுத்துள்ளார் என்று விளங்குகிறது.

*நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்*
*தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூல் முறையை.*

(வள்ளுவமாலை, 4)

என்ற செய்யுளாலும் இப்பகுப்பின் உண்மை விளங்கும். மூன்று பகுப்புக்களும் இவை என்பது

*அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின்*
*திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்*

(வள்ளுவமாலை, 50)

என்று கூறுவதனால் உணரலாகும். இச் செய்யுளில் வீடு தெளிந்தேம் என்று வந்துள்ளது. ஆனால், இதற்கென ஒரு தனிப் பகுப்பு இல்லை. பரிமேலழகரும், ‘வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத் தாகலின் துறவறமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது இலக்கண வகையால் கூறப்படாமையின், நூல்களால் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்’ என்று தமது உரைப்பாயிரத்தில் எழுதுகின்றார். இது பற்றியே மேற் செய்யுளில் ‘வீடு அறிந்தேம்’ என்று கூறாமல் ‘வீடு தெளிந்தேம்’ என்று வேறு வாசகத்தால் கூறப்பட்டுள்ளது எனத் தோன்றுகிறது. ஆகவே, வள்ளுவர் அறத்துப்பால்,

பொருட்பால், காமத்துப்பால் எனத் தமது நூலைப் பகுத்துக் கூறினார் என்பது விளங்கும்.

அறத்துப்பாலைப் பாயிரம், இல்லறம், துறவறம், ஊழ் என்று நான்காகப் பகுத்தனர் ஒரு சாரார். இது,

பாயிரம்நான்கு ; இல்இருபான் ; பத்தோ டியைந்த மூன்று
ஓய்வில் துறவறம் ; ஒன்றாமூழாகத் - தூய
அறத்துப்பால் முப்பத்தெட் டாமென்றுரைத்தார்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து

என்ற பழஞ் செய்யுளால்* அறியப்படும்.

பரிமேலழகர் அறத்துப்பாலை இல்லறம் துறவறம் என இரண்டு இயல்களாகவே பகுத்தனர். உரைப்பாயிரத்திலே 'அறத்துப்பால் பொது இயல்பு பற்றி இல்லறம், துறவறம் என இருவகை நிலையால் கூறப்பட்டது' என எழுதுவதனால் இவர் கொண்டது இரண்டு பகுப்பே என்பது விளங்கும். ஆனால், முதல் நான்கு அதிகாரங்களைப் பாயிரம் எனவே இவர் கொண்டனர்.

திருவள்ளுவர் மாலையின் 20-ம் செய்யுள் பின் வருமாறு ஓர் ஏட்டுப் பிரதியில் உள்ளது :

வீடொன்று பாயிரம் மூன்று விளங்கறம்
நாடிய முப்பத்து நான்கு பொருள் - கூடிய -

---

*இது சில பாடபேதங்களுடன் திருவள்ளுவர் மாலையில் 25-ம் செய்யுளாகக் காணப்படுகிறது. காலிங்கர் பின்வருமாறு கூறியுள்ளார் :

பாலாகும் வேதப் பயனாகும் பாயிரம் நான்கு
ஏலாகேள் இல்லறமும் நாலைந்தாம் - மேலாம்
துறவு பதின்மூன்று தோமில்ஊழ் ஒன்றென்ப
அறிவுநெறி ஆய்ந்துடையார் தாம்.

எள்ளில் எழுபது இருபத்தைந் தின்பமிவை
வள்ளுவர் சொன்ன வகை.

இங்கே ஊழ் தனிப்பட்ட ஓர் இயலாகக் காணப்பட வில்லை. பரிமேலழகரது பகுப்பை ஒருவாறு இச்செய்யுள் ஆதரித்தல் காணலாம். ஆகவே, அறத்துப் பாலை இயலாகப் பகுப்பதிலே கருத்து வேற்றுமை உண்டு என்பது புலப்படுகிறது.

பொருட்பாலை அரசியல், அமைச்சியல், அரண், பொருள், படை, நட்பு, குடி என ஏழு இயல்களாகப் பகுப்பர் ஒரு சாரார். இதனை,

அரசியல் ஐயைந்து, அமைச்சியல் ஈரைந்து
உருவல் அரண் இரண்டு ; ஒன்றொண் கூழ்-உரைசால்
படையிரண்டு நட்புப் பதினேழ் பன்மூன்று
குடிஎழுபான் நோக்கபொருட் கூறு*

என்ற பழஞ் செய்யுளால் அறியலாம். இப் பகுப்பினை மேற்கொண்டவர் காலிங்கர்.

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு, (குறள் 381)

என்று இப்பாலின் தொடக்கத்தில் வரும் குறள் இவரது கொள்கையை ஆதரிப்பதுபோல் உள்ளது.

பிறிதொரு சாரார் பொருட்பாலை அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல்,

---

* இது சில பாடபேதங்களுடன் திருவள்ளுவர் மாலையில் 26-ம் செய்யுளாக உள்ளது. இரண்டாம் அடியில்

'உரைநாடு அரண்பொருள் ஒவ்வொன்று' (பெருந். 2005) எனத் தந்து எட்டுப் பகுப்பாகக் காட்டிய பழஞ் செய்யுளும் உண்டு. வியாஸ பாரதத்தில் ஆச்சிரம வாசிக பர்வத்தில் (v, 8) ராஜ்யத்திற்கு எட்டு அங்கங்கள் உளவாகக் கூறப்படுகின்றன.

குடியியல் என அறுவகையாகப் பகுப்பர். மணக்குடவர் இங்ஙனங் கொண்டுள்ளார்.

இப் பகுப்பினை ஆதரிப்பதற்குப் பழஞ்செய்யுள் உளதாகத் தெரியவில்லை.*

மற்றொரு சாரார் அரசியல், அங்க இயல், ஒழிபியல் என மூன்று இயல்களாகப் பகுத்தனர். பரிமேலழகர் இங்ஙனம் கொண்டவரே. இது வடநூலில் அரசிற்குரிய அங்கம் ஏழாம் என்னும் முறைபற்றிப் பகுத்தது என்பது தெளிவு. இப்பகுப்பினை ஆதரிப்பதற்கும் பழஞ் செய்யுள் காணப்படவில்லை. பொருட்பாலின் இயற்பகுப்பில் இங்ஙனம் மூன்று வகையான கருத்துக்கள் உண்மை புலனாகும்.

இனி, காமத்துப்பாலை எடுத்துக் கொள்வோம். இதனை ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, இருபாற் கூற்று என மூன்று இயல்களாகச் சிலர் பகுத்துள்ளார்கள். இது,

ஆண்பாலேழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்தன்பு
பூண்பால் இருபாலோ ராறாக - மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு
(வளளுவர்மாலை, 27)

என்ற செய்யுளால் புலப்படும். இப் பகுப்பினைக் காலிங்கரும் மேற்கொண்டு, தலைமகன் கூற்று, தலைமகள் கூற்று, இருபாற்கிளவி எனத் தமது உரையில் பகுத்துக் காட்டினர்.

மணக்குடவர் கூடலும் கூடல் நிமித்தமும், பிரிந்து கூடலும் அதற்கு நிமித்தமும், ஊடிக் கூடலும் அதற்கு நிமித்தமும் என மூன்று பகுதிகளாகப்

*செந்தமிழ் - தொகுதி, 1, பகுதி - 6 பார்க்க.

பகுத்துள்ளனர். அவரது உரையிற் காமத்துப் பாலின் அவதாரிகையால் இப்பகுப்பின் உண்மையை உணரலாம். ஆனால், பரிமேலழகரோ எனின், களவு, கற்பு என்ற இரண்டு பாகுபாட்டினையே கொண்டனர். அவர் காமத்துப் பாலின் தொடக்கத்தில், 'புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து அவற்றைச் சுவை மிகுதிபயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார்' என்றனர். இப் பகுப்பினை,

> புணர்தல் பிரிதல் பொருள்களவு கற்பென்று
> உணருமிரு கூறும் உரைக்கில் - புணரும்
> களவேழ் அறுமூன்று கற்பிவை யையைந்தா
> அளவுறு காமத்துப் பாலாம்

(பெருந்தொகை, 2006)

என்ற செய்யுளும் ஆதரிக்கின்றது. ஆகவே, காமத்துப்பாலை இயல்களாகப் பிரிப்பதிலும் †பண்டைக் காலத்தில்தானே கருத்து வேற்றுமை உண்டென்பது விளங்குகிறது.

வள்ளுவர் இவ்இயல் பற்றிய பாகுபாட்டினை மேற்கொண்டாரா? இக் கேள்வி எழுதல் முற்றும் இயற்கையே. ஆசிரியரே இப்பாகுபாடு செய்திருப்பாராயின், உரைகாரர்கள் மேற்காட்டியவாறு பலபடியாகப் பிரிக்க உடன்பட மாட்டார்கள். ஆதலால்,

---

†தொல்காப்பியர், தலைமகன் கூற்று, தலைவி கூற்று முதலியனவாகக் கூற்றுவகைபற்றிப் பிரித்துணர்த்தியதோடு, களவியல், கற்பியல் எனவும் பிரித்து இருவகைப் பாகுபாடுகளையும் தந்திருக்கின்றனர்.

இயல்பற்றிய இப் பகுப்பு வள்ளுவர் செய்யவில்லை என்று நாம் கொள்ளலாம் போலும்.

ஆனால், அதிகாரப் பகுப்புச் செய்தவர் வள்ளுவர் தாமா என்று நாம் தெரிதல் வேண்டும். இப்பகுப்பு இல்லாமற்போனால் இப்பேரறிஞரது நூல் செவ்வனே அமைந்ததாக மாட்டாது. அதிகாரங்களின் பெயர்களைச் சிறிதும் வேற்றுமையின்றிப் பல உரைகாரர்களும் காட்டுதலினாலே, இவ் அதிகாரப் பெயரை இட்டவர்கள் அவர்கள் அல்லர் என்பதும் ஆசிரியர் வள்ளுவரே அப்பெயர்களை இட்டிருத்தல் வேண்டும் என்பதும் புலப்படும். வள்ளுவர் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களாகத் தமது நூலைப் பகுத்துள்ளார். இதனை,

> ஐயாறு நூறும் அதிகாரம் மூன்றுமாய்
> மெய்யாய வேதப் பொருள் விளங்கப்-பொய்யாது
> தந்தான் உலகிற்குத் தான் வள்ளுவனாகி
> அந்தாமரை மேல் அயன்
>
> (வள்ளுவர்மாலை, 28)

என்ற செய்யுளால் உணரலாம்.

இப்போது நூலிற்காணும் அதிகார வைப்பு முறை வள்ளுவர் அமைத்ததுதானா? இக்கேள்வியும் எழுதல் இயல்பே. சிறிதளவேனும் வேறுபாடு இருந்தால், இவ் வேறுபட்ட முறையை உரைகாரருள் ஒருவரேனும் பின்பற்றாமலிருக்க மாட்டார்கள். கிடைக்கும் உரைகள் அனைத்தினும் வைப்பு முறையில் வேறுபாடின்றி அதிகாரங்கள் அனைத்தும் காணப்படுகின்றன. எனவே இவ் வைப்பு முறையிலும் நாம் ஐயங் கொள்ளுதற்குச் சிறிதும் இடமில்லை. இந் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களில் அடங்கியுள்ள செய்யுட்கள் 1330.

**ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்**
**பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின் - போயொருத்தர்**
**வாய்க்கேட்க நூ லுளவோ மன்னு தமிழ்ப்புலவ**
**ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.**

(வள்ளுவர் மாலை, 16)

அதிகாரம் ஒன்றிற்குப் பப்பத்துக் குறளாக நூலினை வள்ளுவர் அமைத்துள்ளார். நாலடியாரைப் பால், இயல், அதிகாரங்களாக வகுத்த பதுமனுர் வள்ளுவரது முறையைப் பின்பற்றுகிருர். அதிகாரப் பெயர்களையும் கூட வள்ளுவரிட மிருந்தே இவர் கொண்டிருக்கின்றனர் என்று ஊகிக்கலாம். நாலடியாரின் ஒவ்வோர் அதிகாரத்திலும் இவர் பப்பத்துச் செய்யுட்களை அமைத்திருப்பது திருக்குறளின் அதிகாரங்களிலும் பப்பத்துச் செய்யுட்களே இருந்தன என்பதற்குச் சான்ருகும்.*

இனி, ஒவ்வோர் அதிகாரத்திலும் உள்ள செய்யுட்களின் வைப்பு முறையை நோக்குவோம். இம்முறையில் உரைகாரர்கள் பெரிதும் வேறுபடுகின்றனர். கல்வி என்ற 40-வது அதிகாரத்தை எடுத்துக் கொள்வோம்.

| பாடல் வரிசை | பரிமேலழகர் | மணக்குடவர் | காலிங்கர் |
|---|---|---|---|
| **கற்கக் கசடற** | 1 | 1 | 6 |
| **எண்ணென்ப** | 2 | 2 | 5 |
| **கண்ணுடையர்** | 3 | 3 | 3 |
| **உவப்பத் தலைக்கூடி** | 4 | 8 | 8 |
| **உடையார்முன்** | 5 | 10 | 2 |

---

*சங்க இலக்கியங்களுள் பதிற்றுப் பத்திலும் ஐங்குறு நூற்றிலும் பப்பத்துச் செய்யுட்களாக நூலைப் பிரித்துள்ளமை இங்கே ஒப்பிடத்தக்கது.

| | பரிமேலழகர் | மணக்குடவர் | காலிங்கர் |
|---|---|---|---|
| தொட்டனைத்தூறும் | 6 | 4 | 4 |
| யாதானும் நாடாமால் | 7 | 7 | 9 |
| ஒருமைக்கண் | 8 | 5 | 1 |
| தாமின்புறுவது | 9 | 9 | 7 |
| கேடில் விழுச் | 10 | 6 | 10 |

இங்ஙனமே, ஒவ்வோர் அதிகாரத்திலும் செய்யுட்களின் வரிசை வேறுபட்டுள்ளது. வள்ளுவர் ஏதாவது ஒரு முறையில்தான் செய்யுட்களை வைத்திருத்தல் வேண்டும். அம் முறை யாது? திருக்குறளுக்கு முதன் முதல் தோன்றிய உரையில் வள்ளுவரது முறை கைக்கொள்ளப்பட்டிருக்கலாம் என நாம் ஒருவாறு ஊகிக்கலாம். இந் நூலுக்குரிய பல உரைகளையும் இயற்றிய பதின்மர் பெயர்களை,

*தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்*
*பரிமே லழகர் பருதி - திருமலையர்*
*மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர் நூற்கு*
*எல்லையுரை கண்டார் இவர்* (பெருந்தொகை,1538)

என்ற வெண்பாவில் காணலாம். இதிற் காணப்படும் வரிசை உரைகாரர்களது காலமுறை ஆகுமா? பரிமேலழகர் கடைசியில் வந்தவர் என்பது,

*அறம்பொருள் இன்பம் வீடெனும் நான்கின்*
*திறந்தெரிந் துரைத்த செவ்வி முப்பாலுக்கு*
*ஒருரை யின்றி ஒன்பது சென்றும்*
*ஐயுற வாக நையுறு காலை*
* * * *
*விழுப்பொருள் தோன்ற விரித்தினி துரைத்தனன்*
* * * *

பரிமே லழகன் எனப் பெயர் படைத்துத்
தரைமேல் உதித்த தலைமை யோனே.

(பெருந்தொகை. 1543)

என்ற உரைப்பாயிரத்தில் 'ஒன்பது சென்றும்' என வருவதால் அறியலாம். இத்தொடர்க்கு 'ஒன்பது உரைகள் இயற்றப்பட்டுக் கழிந்த விடத்தும்' என்று பொருள். இவ்வாறாகக் கடைசியில் வந்தவரை இடையிட்டுக் கூறுதலால் மேலே வெண்பாவில் உள்ள முறை கால முறை அன்றென்பது திண்ணம்.

இங்ஙனமாயின், எது முதலுரையென எவ்வாறு துணிதல் கூடும்? தெரிந்த அளவில், நான்கு உரைகள் கிடைத்துள்ளன. அவையாவன: பரிமேலழகர், பரிப் பெருமாள், மணக்குடவர், காலிங்கர் என்பவர்கள் இயற்றியன. பரிமேலழகருரை செம்மையாய் அச்சி டப் பட்டுள்ளது. மணக்குடவருரை ஒருவாறாக அச்சில் உள்ளது. ஏனை இருவரது உரைகளில் காமத் துப் பால் மட்டும் அச்சிடப் பட்டிருக்கிறது. எல்லா உரைகளும் கிடைத்து,* அவையனைத்தும் அச்சில்

---

*நமது மூதாதையர் நமக்கென ஈட்டி வைத்துள்ள அறிவுச் செல்வங்கள் ஏட்டுப் பிரதிகளில் அமைந்து தமிழ்நாட்டில் பல இடங்களிலும் புதையுண்டு கிடக்கின்றன. அவற்றை ஊர்கள் தோறும் சென்று தேடிப் பெற்றுப் பொதுவிடங்களில் தொகுத்து வைப்பது இன்றியமையாததாகும். தொடர்ந்து, முறைப்பட, ஊக்கத்துடன், தமிழுணர்ச்சியோடு செய்யவேண்டும் இம்முயற்சி ஒரு ஸ்தாபனத்தாலும் இதுகாறும் நடைபெறவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை ஸரஸ்வதிமஹால் நூல்நிலயம், சென்னை அரசாங்க நூல்நிலயம், திருவிதாங்கூர் அரசாங்க நூல்நிலயம் முதலியன செய்து வரும் சிறு முயற்சிகளால் நாம் பெரும்பயன் அடைந்திருக்கிறோம். ஆனால், முயற்சியின் அளவு போதியதல்ல; அதிற் பல குறைபாடுகள் உள்ளன. தமிழன்னையே! உனது புதல்வர்கள் என்றுதான்

வந்த பின்னரே, முதலுரை இன்னதெனத் துணிதல் இயலும்.

இப்போது அகப்படும் உரைகளைக் கொண்டு நோக்கினால், பரிமேலழகரது முறை வள்ளுவர் வகுத்த முறையாகலா மெனக் கருதச் சிறிதும் இடமில்லை. அவர் தமது கல்வியிலும், தமது அறிவாற்றலிலும், தமது கொள்கைகளிலும் பெருநம்பிக்கை யுடையவர். வள்ளுவர் கருத்துக்களைத் தம் கருத்துக்களாலன்றி, உரிய பிறகருவிகள் கொண்டு ஆராய்ந்து துணிய வேண்டும் என்னும் நெறியிற் செல்லாதவர். பிறழ்வு என்பதைச் சிறிதும் அறியாத அவரது முதிர்ந்த தருக்க உணர்ச்சி அவர் கொள்கைகளை ஒப்புக்கொள் வதில் நாம் அதிஜாக்கிரதையா யிருக்க வேண்டு மென் பதை அறிவுறுத்திக்கொண்டே யிருக்கிறது. அவர் வள்ளுவர் கருத்தைக் கைந்நெகிழ விடினும், தமது தருக்கத்தை நெகிழவிடமாட்டார். சரித்திர உணர்ச் சியும் சூழ்நிலை உணர்ச்சியும் அவரால் பெரும்பாலும் போற்றப்படவில்லை. வள்ளுவர் கருத்துக்களையே எல்லா விடங்களிலும் அவர் விளக்குகிறார் என்று நாம் கொள்வதற்கு இல்லை. ஆகவே, வள்ளுவரது முறையை யுணருவதற்குப் பரிமேலழகரைக் காட்டி னும் பிற உரைகாரர்களே நாம் நம்பித் துணையாகக் கொள்வதற்கு உரியர். மணக்குடவர் நமக்கு உற்ற துணையாகலாம் எனத் தோன்றுகிறது. இவரது செய்யுள் வைப்பு முறை பெரும்பாலும் வள்ளுவரது ஆகலாம். ஆனால், இவர்உரை கிடைக்கக் கூடும்

---

தங்கள் கடமையை யுணர்ந்து இம்முயற்சியில் ஈடுபடப் போகின் றார்களோ, அறியேன். சிறிது காலம் தாழ்த்தால், இச் செல்வங் கள் அனைத்தும் அழிந்து விடுமே என்று மனம் நைந்து வருந்த வேண்டியதா யிருக்கின்றது.

பிரதிகள் அனைத்தையும் ஒப்பு நோக்கி, ஆராய்ச்சி முறையில் நன்கு பதிப்பிக்கப் பெறவில்லை.[1] தமிழறிஞர்கள் இதனைச் சிந்தித்தல் வேண்டும்.

மேலே, ஒரே அதிகாரத்தில் செய்யுட்கள் முன் பின்னாக வைக்கப் பட்டுள்ளமையை நோக்கினோம். ஒரு சில இடங்களில் ஓர் அதிகாரத்துள்ள செய்யுள் பிறிதோர் அதிகாரத்தில் வந்துள்ளது. இதுபற்றி நாம் கவனிக்க வேண்டியன சில உள. முதலாவது, இப்போது கிடைப்பனவற்றுள் பரிப்பெருமாள் உரையில் தவிர ஏனையவற்றில் அறத்துப் பாலிலும் பொருட்பாலிலும் இப்பிறழ்ச்சி காணப்பெறவில்லை. பரிப்பெருமாள் உரையும் மணக்குடவர் உரையையே பின்பற்றி யுள்ளது[2] எனத் தெரிதலால், அவர் உரையிலும் மேற்கூறிய இருபால் பற்றிய அளவில் பிறழ்ச்சி இல்லை என்று தெளியலாம். காமத்துப் பாலில் மாத்திரம் மூன்று இடங்களில் பிறழ்ச்சி யுள்ளது.

1. காலிங்கர் உரையில் 'தனிப்படர் மிகுதி' என்ற 120 - ம் அதிகாரத்தில் 10 - ம் செய்யுள்,

> உரம் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
> வரல்நசைஇ இன்னும் உளேன்

என்பது. இது 'அவர்வயின் விதும்பல்' என்ற 127 - ம் அதிகாரத்தில் பரிமேலழகர், மணக்குடவர்,

---

[1] திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் 'எனது பிரதியில் ஸ்ருஷ்டி, திதி, ஸம்ஹாரம் என்னும் மூன்றையும் புரிந்த மணக்குடவ ருரையை ஒருவாறு பூரணமாக்கி அச்சிற்குக் கொடுத்தேன்' என்று தமது அறத்துப் பால் பதிப்புரையில் எழுதியிருக்கிறார்கள்.

[2] திருக்குறள் : காமத்துப்பால். ஸ்ரீவேங்கடேஸ்வர கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகப் பதிப்பு - 9 ; முகவுரை, பக்கம், 4)

பரிப்பெருமாள் இவர்கள் உரைகளில் முறையே 3 - வது, 7 - வது, 9 - வது செய்யுளாக உள்ளது.

2. காலிங்கர் உரையில் ' நினைந்தவர் புலம்பல் என்ற 121 - ம் அதிகாரத்தில் 10 - ம் செய்யுள்,

வீழ்வாரின் இன்சொற் பெறுஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல்

என்பது. இது ' தனிப்படர் மிகுதி ' என்ற 120 - ம் அதிகாரத்தில் பரிமேலழகர், மணக்குடவர், பரிப்பெருமாள் உரைகளில் முறையே 8 - வது, 9 - வது, 10 - வது, செய்யுளாக உள்ளது.

3. காலிங்கர் உரையில், 'அவர்வயின் விதும்பல்' என்ற 127 - ம் அதிகாரத்தில் 6 - ம் செய்யுள்,

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅது வாழி மதி

என்பது. இது ' நினைந்தவர் புலம்பல் ' என்ற 121 - ம் அதிகாரத்தில் பரிமேலழகர், மணக்குடவர், பரிப்பெருமாள் இவர்கள் உரைகளில் முறையே 10 - வது செய்யுளாக உள்ளது.

மேற்காட்டியவற்றால் காலிங்கர் உரையில் மட்டும் பிறழ்ச்சி உள்ளது என்பதும் ஏனைமூன்று உரைகளிலும் அதிகாரத்தில் பிறழ்ச்சி இல்லை என்பதும் புலனாகின்றன.

மூன்றாவதாக, இம் மூன்று செய்யுட்களும் பொருள் பற்றிய அளவில் மேற்காட்டியவாறு அதிகாரம் பிறழ்ந்து வருவதற்கு இயைபு உண்டு. குறுந்தொகை முதலிய தொகை நூல்களில் தொகுத்தார் ஒரு கிளவித் துறையிலே அமைத்த செய்யுள், தொல்காப்பிய உரைகாரர்களால் பிறிதொரு கிளவித்

துறைக்கு உரியதாகக் காட்டி யிருப்பது ஒப்பு நோக்கத் தக்கது.

ஆகவே, கடைசியில் குறிப்பிட்ட செய்தியை நோக்குமிடத்துக் காலிங்கர் பொருள் இயைபுபற்றி முன் வழங்கிய அமைப்பைக் கைவிட்டுப் புதியதொரு வைப்பு முறையை மேற்கொண்டார் என்று துணிவது பொருத்தமாகலாம்.

இங்ஙனமாக அதிகார வைப்புமுறை முதலியன எல்லாம் வள்ளுவர் அமைத்தனவே என்று கொள்ளுதலே நேரிது.

## மாணிக்கவாசகரும் மலைநாடும்

தமிழிலக்கிய சரிதத்தில் இன்றுவரை விடுக்க இயலாத வினாக்கள் சிலவுள்ளன. அவற்றுள் ஒன்று மாணிக்கவாசக சுவாமிகளின் காலத்தைப் பற்றியது. சுவாமிகளின் காலத்தைக் குறித்து முதன் முதலில் ஐயத்தை யெழுப்பியவர் ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள். ஞானசம்பந்தருக்குச் சுவாமிகள் முற்பட்டவரா என்பது பற்றித் தமக்கு ஐயப்பாடு உளது என்று பிள்ளையவர்கள் தமது 'ஞானசம்பந்த சுவாமிகள் காலம்' என்ற நூலின் முன்னுரையில் (1898) எழுதிச்சென்றூர்கள். ஆகவே சுவாமிகள் பிற்பட்டவராகலாம் என்பதே இவர்கள் கருத்து.

இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் திரு. S. A. திருமலைக்கொழுந்துப் பிள்ளையவர்கள் 'மாணிக்க வாசகர் காலம்' என்ற நூலை எழுதி வெளியிட்டார்கள். இதன்கண் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றுண்டில் சுவாமிகள் வாழ்ந்தவராதல் வேண்டுமென முடிவு செய்யப்பட்டுள்ளது. இம் முடிவையே திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரும் வற்புறுத்தி 1901-ல் 'இந்தியன் ரிவியூ' என்ற பத்திரிகையில் எழுதினர். பின்னர் திரு. பொன்னம்பலம் பிள்ளையவர்கள் 'மலபார் குவார்ட்டர்லி ரிவியூ' என்ற பத்திரிகையில் சுவாமிகள் மலைநாடுசென்று ஆங்குள்ள கிறிஸ்தவர்களில் ஒரு சாராரைச் சைவசமயத்திற்குத் திருப்பினரெனவும், இங்ஙனம் சைவசமயத்தைத் தழுவியவர்கள் சுவாமிகள் பெயரால் 'மாணிக்கிராமக்காரர்' என வழங்கப் பட்டனரெனவும், இப் புதுப் பெயரே பிற்காலத்தில்

'மணிக்கிராமக்காரர்' என மருவிற்று எனவும், மணிக்கிராமம் பற்றிய செப்புப்பட்டயமொன்று அகப்பட்டுளதெனவும், அதன் காலம் கி. பி. 273 ஆதலால், சுவாமிகள் காலம் கி. பி. இரண்டு அல்லது மூன்றும் நூற்றுண்டாயிருத்தல் வேண்டுமெனவும் எழுதினர். பின்னர் திரு. வேதாசலம் பிள்ளையவர்கள் (மறைமலையடிகள்) கி. பி. 3-ம் நூற்றுண்டில் சுவாமிகள் வாழ்ந்தவராதல் வேண்டுமென இலக்கிய வாயிலாக நிறுவி 1904-ல் கிறிஸ்தவக் கலாசாலைப் பத்திரிகையில் எழுதினர். அப் பத்திரிகையிலேயே திரு. K. G. சேஷய்யரவர்கள் கி. பி. 4-ம் நூற்றுண்டாக இருத்தல் கூடுமென எழுதினுர்கள். மெக்கென்ஸி நூற்றொகுதியின் பட்டிகை ஆசிரியராகிய வில்ஸன் என்பவர் சுவாமிகள் காலம் கி. பி. 7-ம் நூற்றுண்டாக இருக்கலாமென்று கூறினர். டாக்டர் ஜி. யூ. போப் கி. பி. 7-அல்லது 8ம் நூற்றுண்டாகக் கொள்ளுவதற்குத் தக்க காரணமிருப்பதாகக் கூறினர். சென்னை உயர்தர நீதிமன்றத்தில் நீதிபதியாயிருந்த இன்னிஸ் என்பவர் சுவாமிகள் 9-ம் நூற்றுண்டினராதல் வேண்டுமென வரைந்தனர். ஜூலியன் வின்ஸ்ன் இக்காலத்தையே ஒப்புக்கொண்டனர். கௌடியென்னும் பாதிரியார் கி. பி. 8-ம் நூற்றுண்டுக்கும் 10-ம் நூற்றுண்டுக்கும் இடையில் சுவாமிகள் வாழ்ந்திருக்கவேண்டுமெனக் கருதினர்.

நெல்ஸன் என்பவர் தமது மதுரைச் சரித்திரத்தில் (Madura Manual) தமிழ்நாட்டிலிருந்து சைவாசாரியரொருவர் ஈழ நாட்டிற்குக் கி. பி. 819-ல் சென்று ஆங்குள்ள பௌத்த அரசனைச் சைவசமயத்திற்குத் திருப்பினரென ராஜரத்நாகரி யென்ற நூல் கூறுகிறதென்றும், இவ்வாசாரியர் மாணிக்கவாசக

சுவாமிகளாதல் வேண்டுமென்றும், எனவே அவர் காலம் 9-ம் நூற்றாண்டின் முற்பகுதியாமென்றும் கூறினர். 10-ம் நூற்றாண்டின் இறுதி அல்லது 11-ம் நூற்றாண்டின் தொடக்கமாயிருக்கலாமென்று திரு. கோபிநாதராயர் எழுதினர். டாக்டர் ரெயின் ஹோல்ட் ரோஸ்ட் என்பவர் Encyclopaedia Britannica-வில் 13-அல்லது 14-ம் நூற்றாண்டாக இருக்கலாமென முடிவுகண்டனர்.

இங்ஙனமாகப் பலதிறப்பட்டுக் கிடக்கும் முடிபுகளை ஆராய்ந்து உண்மை காணுதல் எளிதன்று. உண்மை காணவேண்டுவது அவசியமேயாயினும், நான் அதனை இப்பொழுது மேற்கொள்ளவில்லை. மாணிக்கவாசகர் மலைநாடு சென்று ஆங்குள்ள கிறிஸ்தவர்களைச் சைவர்களாக்கினரென்று கூறும் திரு. பொன்னம்பலம் பிள்ளையவர்கள் எழுதியவற்றையே இப்பொழுது ஆராய முற்பட்டுள்ளேன்.

இக்கொள்கைக்கு மூலாதாரமாயுள்ள செப்பேட்டுச் சாஸனத்தை ஈண்டுத் தருகிறேன்.

' ஹரிஸ்ரீ மஹா கணபதே நம: ஸ்ரீ பூபாலநரபதி வீர கேரள சக்ரவர்த்தி ஆதியாயி முறை முறையே பல நூறாயிரத்தாண்டு செங்கோல் நடத்தாயி நின்ற ஸ்ரீ வீரராகவச் சக்கரவர்த்திக்குத் திருவிராச்சியம் செல்லாயி நின்ற மகரத்துள் வியாழம் மீன ஞாயிறு இருபத்தொன்றுசென்ற சனி ரோஹணிநாள் பெருங் கோயிலகத் திருந்தருள, மகோதையர் பட்டிணத்து இரவி கொற்றனுய சேரமான் லோகப் பெருஞ் செட்டிக்கு மணிக்கிராமப் பட்டங் குடுத்தோம். விளா வாடையும் பவனத்தாங்கும் பெறு பேறும் கடுத்து வளஞ்சியமும் வளஞ்சியத்தில் தனிச்செட்டும் முற்சொல்லும் முன் நடையும் பஞ்சவாத்யமும் சங்கும் பகல் விளக்கும் பாவாடையும் ஐந்தோளமும்

கொற்றக்குடையும் வடுகப்பறையும் இடுபடிதோரணமும் நாலு சேரிக்கும் தனிச்செட்டும் குடுத்தோம். வாணியரும் ஐங் கம்மாளரையும் அடிமை குடுத்தோம். நகரத்துக்கு கர்த்தாவாய இரவிகொற்றனுக்கு பறை கொண்டளந்து நிறைகொண்டு தூக்கி நூல்கொண்டு பாகி எண்ணின்றதிலும் எடுக்கின்றதிலும் உப்பிஞேடு சர்க்கரையோடு கஸ்தூரியோடு விளக்கெண்ணையோடு இடையிலுளளது எப்பேர்ப்பட்டதினும் தரகும் அதினடுத்த சுங்கமும் கூட கொடுங்கலூர் அழிவியோடு கோபுரத்தோடு விசேஷால் நாலுதளியும் தளிக்கடுத்த கிராமத்தோடிடையில் நீர் முதலாயி செப்பேடு எழுதிக்கொடுத்தோம் சேரமான் லோகப் பெருஞ் செட்டியான இரவி கொற்றனுக்கு. இவன் மக்கள் மக்கட்கு வழி வழியே பேருகக் குடுத்தோம். இதறியும் பன்றியூர் கிராமமும் சோகிரகிராமமும் அறியக் குடுத்தோம். வேணுடும் ஓடு நாடும் அறியக் குடுத்தோம். ஏரு நாடும் வள்ளுவநாடும் அறியக் குடுத்தோடும். சந்த்ராதித்யகளுள்ள நாளைக்கு குடுத்தோம். இவர்களறிய செப்பேடெழுதிய சேரமான் லோகப்பெருந்தட்டான் நம்பிசடையன் கையெழுத்து.'

இச்செப்புப் பட்டயத்தில் 'மணிக்கிராமம்' என்ற பட்டம் லோகப் பெருஞ்செட்டி இரவி கொற்றன் என்பவனுக்கு அளிக்கப்பட்டமை கூறப்படுகின்றது. 'மணிக்கிராமம்' என்றதன் பொருள் யாது?

ஸிரியன் கிறிஸ்தவர்களிடையில் அந்நிய சமயத்தா ஞெருவனது தூண்டுதலால் மணிக்கிராமக் காரர் கிறிஸ்தவ சமயத்தை விட்டுச் சைவசமயத்தைக் கைப்பற்றியவர்கள் என்று ஓர் ஐதிகம் வழங்கி வருகிறது. இதை அடிப்படையாகக் கொண்டு

டாக்டர் குண்டர்ட்[1] ஒரு நூதனசரித்திரத்தை வகுக்கத்தொடங்கினர். ஐதிகத்தில் குறிப்பிடும் அந்நிய மதத்தினர் மாணிக்கவாசகராக இருத்தல் கூடுமென்றும் ஐயுறவு கொண்டனர். இந்த ஐயுறவினின்றே மணிக்கிராமம் என்பதற்குச் சொல் வரலாறு கற்பித்துவிட்டனர். மணிக்கிராமம் என்பது மாணிக்கக்கிராமம் என்றதன் மரூஉவென்று கொள்ளப்பட்டது. இதுவே இந்நூதன சரித்திரத்திற்கு ஆதர வளிப்பதாகக் கருதப்பட்டது.

ரெவரென்ட் டெய்லர்[2] மேற்குறித்த சொல் வரலாற்றினையும் சரித்திரத்தினையும் முற்றும் கண்டித்துத் தாம் புதுவதாகச் சில கூறினர். மனி என்ற பாரஸிகக் குருவின் சிஷ்யவர்க்கத்தினராகிய மனிக்கிய கூட்டத்தாரே[3] மணிக்கிராமக்காரரென்றும், மணிக்கிராமம் என்பது மனிக்கேயரின் கிராமம் என்று பொருள் படுமென்றும் எழுதினர். இதனையும் கண்டித்து, ரத்ந முதலியன நிரம்பியிருந்தமைபற்றி மணிக்கிராமம் என்று பெயர் படைத்த ஓர் ஊரினைச் சாசனம் குறிப்பிடுகின்றதெனக் கூக்கல் கேளு நாயர் என்பவர் எழுதினர்.[4] ரத்ந வியாபாரிகள் குடியிருந்த கிராமம் என்பதுதான் பொருள் என்று யோஸெப் என்பவர் கருதினர்.[5]

முடிவில் இவையனைத்தும் பிழையென்று இப்பொழுது ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். மணிக்கிராமக்காரர் மலையாளப் பிரதேசத்தில் மட்டுமன்றிப் பிறநாடுகளிலும் காணப்படுதல் ஒருபெருஞ்

[1] Madras Journal Vol XIII pt i p 121.
[2] Madras Journal Vol XIII pt i p 146.
[3] Indian Antiquary Vol IV 311.
[4] Madras Journal Vol XXI p 41.
[5] Indian Antiquary Vol LViii, 26.

சான்று. இதனால் கிராமம் என்பது ஓர் ஊரெனக் கொள்ளத்தக்கதன் றென்றும் ஒருசங்கம் அல்லது குழுவெனவே கொள்ளத்தக்க தென்றும், வணிக் கிராமமென்பதே மணிக்கிராமமென மருவி வழங்கப் பட்ட தென்றும், முற்காலத்தில் வணிக்கிராமம் என்பது பெருவழக்கிலிருந்து வந்ததென்றும், சாஸ னத்தில்வரும் வாணிப விஷயங்களும் இம்முடி பினையே வற்புறுத்துகின்றன வென்றும் ஆராய்ந்து நிச்சயித்திருக்கிறார்கள்.[1] தொல்காப்பியச் சொல்லதி காரவுரையில் (பெயரியல் 11) நச்சினார்க்கினியரும் குழுப்பற்றிய பெயர்களுள் ஒன்றாக 'வணிக்கிரா மத்தார்' என்பதனைக் கூறியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

இச் செப்புப்பட்டயத்தின் காலம் கி. பி. 14-ம் நூற்றாண்டாக இருக்கவேண்டுமென ஸ்ரீ வெங்கய்யா அவர்கள் (Epi. Ind. Vol. IV, 293) அறுதியிட்டிருக் கிறார்கள்.

மணிக்கிராமத்தின் கதி இவ்வாறாக, டாக்டர் குண்டர்ட் கொண்டிருந்த ஐயுறவை அடிநிலையாகக் கொண்டு, இத்தூப் என்ற ஸிரியன் கிறிஸ்தவ ஆசிரியர் ஒரு சரித்திரமே நிருமித்து விட்டனர். ரெவ ரென்ட் வொய்ட் ஹவுஸ் என்பவரும் குண்டர்ட் கூறிய தனையே ஆதாரமாகக்கொண்டு தமது நூலில் (Lingerings of Light in a Dark Land) ஒரு கதை எழுதி வைத்தனர். இக்கற்பிதங்களையே தமக்குற்ற கருவி யாகக் கொண்டு ஸ்ரீ பொன்னம்பலம் பிள்ளையவர்கள் Manikkavasagar and the early Christians of Travancore என்ற நூலை எழுதி, மாணிக்கவாசகர்

---

[1] The copper-plate of Sri Viraraghava chakravarti: A study by Dr. K. Goda Varma

மலைநாடு சென்று ஆங்குள்ள கிறிஸ்தவர்களைச் சைவராக்கினர் என்று முடிவுகட்டினார்கள். சுவாமிகளுடைய ஜீவியசரித்திரத்திற் பெரிதும் வழங்கிக் காணப்படும் திருப்பெருந்துறை என்னுந் தலம் கொச்சியை யடுத்துள்ள திருப்பூணித் துறையே யாதல் வேண்டுமெனவும் கருதினார்கள்.

இவ்வனைத்திற்கும் சான்று சிறிது மில்லாமை எளிதின் உணரத்தக்கது.

சுவாமிகளைப்பற்றி யெழுந்துள்ள புராணங்கள் பல உள்ளன. அவற்றில் ஒன்றிற்கூட இங்ஙனம் ஒருவரலாறு கூறப் படவில்லை. ஆகவே அவர் மலைநாடு சென்றாரென்பது நிராதாரமான கூற்றாகும்.

## கம்பர்

### காலம் :

தமிழ் நாட்டிலே கவிச்சக்கிரவர்த்தி என்று ஒரு சில புலவர்களுக்குப் பெயர் வழங்கியதுண்டு. கலிங்கத்துப் பரணி இயற்றிய செயங்கொண்டார் ஒரு கவிச்சக்கிரவர்த்தி, இச் செய்தி குலோத்துங்கன் பிள்ளைத் தமிழில் (14)

> ..........................கலிங்கமேழ்
> பாழ்போக வென்ற வொருவன்
> பஞ்சா யுதங்களி லிவன்சாது ரங்கபல
> முற்றுந் தரைப்பட வடற்
> பாடற் பெரும்பரணி தேடற் கருங்கலி
> கவி சக்ரவர்த்தி பரவ

என ஒட்டக்கூத்தர் பாடுதலால் அறியப்படும்.

தஞ்சாவூர் அரண்மனைச் சரஸ்வதி மஹாலில் உள்ள பழையதோர் ஏட்டுப் பிரதியின் ஈற்றில் காணும், 'குலோத்துங்க சோழ பெருமாளுக்குத் தீபங்குடி கவிராச கண்டிதன், கவிச்சக்கிரவர்த்தி செயங்கொண்டார் பாடிய கலிங்கப் பரணி முற்றும்' என்ற வாக்கியமும் இங்கே நோக்கத்தக்கது. (Catalogue, Vol. I. p. 228). இங்ஙனமே ஒட்டக்கூத்தரும் ஒரு கவிச்சக்கிரவர்த்தியாவர். இச் செய்தி தக்கயாகப் பரணியின் ஈற்றிலே வருகின்ற இரண்டு தாழிசைகளால் அறியலாம். அவற்றில் ஒன்று வருமாறு :

ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே
ஆற்றங் கரைச் சொற்கிழத்தி வாழியே
கோக்கும் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே
கூத்தன் கவிச்சக்ர வர்த்தி வாழியே. (813)

மேற்குறித்த புலவர்கள் இருவரும் தங்கள் காலத்து அரசர்களால் ஆஸ்தான கவிஞர் என ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவர்களால் பெருஞ் சிறப்புப் பெற்று வாழ்ந்தவர்களாவர். கவிச்சக்கிரவர்த்திப் பட்டமும் அரசறிய இவர்களே தரித்துக்கொண்டனர். இப் புலவர்கள் காலத்துத்தானே பிற கவிஞர்களும் இவர்களை இப்பெயராலேயே அழைத்து வந்தனர். ஆனால், பொதுமக்கள் இவர்களை ஒருவாறுதான் பாராட்டினார்கள். வேறொருவரையே அவர்கள் கவிச்சக்கிரவர்த்தி என்று சிறப்பித்தற்குரிய பெருந்தகுதி வாய்ந்தவர் என்று கருதினார்கள். அவர்தாம் கம்பர். இச் செய்தி,

அம்பிலே சிலையை நாட்டி
அமரர்க்கன் றமுதம் ஈந்த
தம்பிரான் என்னத் தாமும்
தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல்
கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே
நரருக்கின் றமுதம் ஈந்தான்

(இராமாயணம், தனியன)

என்ற செய்யுளால் விளங்கும். செயங்கொண்டாரது கவிச்சக்கிரவர்த்திப்பட்டம் அவரோடு மாய்ந்துவிட்டது. ஒட்டக்கூத்தர்க்குரிய இப் பட்டமும் சில காலம் நின்று பின் மாய்ந்துவிட்டது. இன்றைக்கும் தமிழுலகில் இப் பட்டத்தால் வழங்கப்பெற்று,

கவியரசுகளால் போற்றப்பட்டு வருபவர் கம்பர் ஒருவரே. தமிழ் ஒன்றே யல்ல அறிஞர்கள் மட்டுமன்றி ஆங்கிலம் முதலிய பல மொழிகளைப்பயின்று காவியங்களை ஒப்புநோக்கவல்ல அறிஞர்களில் பெரும்பாலாரும கம்பர் பெருங் கவிஞர் என்பதை ஒத்துக்கொள்ளுகின்றனர். பிறநாட்டுப் பெருங்கவிஞர்களோடு ஒப்பிடற்குரியார் என்றும் கருதுகின்றனர். இத்தகைய பெருங்கவிஞர் வாழ்ந்த காலம்கூட இன்னும் ஐயமறத் துணியப்படாதது வியப்பல்லவா?

ஆராய்ந்து துணிய வேண்டும் அவசியத்தை ஒரு செய்யுள் இடை நின்று மறைத்து அறிஞர்களைமயக்கி விட்டது. அச் செய்யுள் இராமாயணப் பிரதிகளில் காணும் ஒரு தனியனாகும். அது வருமாறு :

எண்ணிய சகாத்த மெண்ணூற்
றேழின்மேல் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெ நல்லூர்
தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய இராம காதை
பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே
கவியரங் கேற்றி னானே.

இதில் ' சகாத்தம் எண்ணூற்றேழு ' என வருவதால் கி.பி. 885-ல் கம்பர் தமதுகாவியத்தை அரங்கேற்றினார் என்று வெளியாகிறது. இத்தனை தெளிவாகக் காலம் குறிக்கப்பட்டு இருக்கும்போது, அதுபற்றிய ஆராய்ச்சி எதற்கு என வினவலாம். ஆனால் இச் செய்யுள் குறிக்கும் காலத்தை நாம் ஒப்புக்கொள்வதாயின் பல பல அசம்பாவிதங்களை ஒப்புக்கொள்ள நேரிடும்.

முதலாவது : தமிழ் நாட்டில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தோன்றிப் பக்தியைப் பெருக்கெடுத்

துப் பரந்தோடும் படியாகச் செய்ததன் விளைவுதான் கம்பரது பெருங் காவியமாகும். இப் பக்திப்பிரவாகம் ஸ்ரீ இராமாநுஜர் காலத்தில் இராமசரிதம் என்னும் பெரு வாய்க்காலின் வழியே சென்று தமிழ் நாட்டில் பாய்ந்து கொண்டிருந்தது. இது,

படிகொண்ட கீர்த்தி இராமாயண
மென்னும் பக்தி வெள்ளம்
குடிகொண்ட கோயி லிராமாநுசன்
குணங் கூறும் அன்பர்
கடிகொண்ட மாமலர்த் தாள்கலந்
துள்ளங் கனியும் நல்லோர்
அடிகண்டு கொண்டுகந்து என்னையு
மாளவர்க் காக்கினரே.

(இராமாநுஜ நூற். 37)

என்ற செய்யுளால் விளங்குகிறது. இதனால், இராமாநுஜருக்குப் பிற்பட்டகாலத்தில் கம்பரை எதிர்பார்ப்போம். ஆனால் முற்குறித்த செய்யுளின்படி கம்பர் காலம் இராமாநுஜருக்குச் சுமார் 2 நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதாய் முடிகிறது. இரண்டாவது : நம்மாழ்வாரைக் குறித்துக் கம்பர் சடகோபரந்தாதி பாடினர் என்று கூறுவர். இதன் உண்மை எவ்வாறாயினும், நம்மாழ்வாருக்குப் பிற்பட்டவர் கம்பர் என்பது வைஷ்ணவர்கள் கொள்கையாகும். ஆனால், நம்மாழ்வாரது காலம்* கி. பி. 10 - ம் நூற்றாண்டின் முற்பகுதி எனத் தக்க காரணங்கள் காட்டி நிறுவப்பட்டுள்ளது. எனவே கம்பர் காலம் நம்மாழ்வாருக்கும் முற்பட்டுவிடும். மூன்றாவது : சீவகசிந்தாமணியிலிருந்து கம்பர் விருத்த முறைகளையும் கருத்

---

* Tamil Studies : M. Sreenivasa Iyangar p. 324 - 339.

துக்களையும் எடுத்தாண்டுள்ளார் என்பது நன்கு தெளியப்பட்டது. சிந்தாமணியின்* காலம் சுமார் 10 - ம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். ஆகவே, கம்பரது காலங் கூறும் செய்யுளை ஒப்புக்கொள்வதாயிருந்தால், அவர் சிந்தாமணியின் காலத்திற்கு ஒரு நூற்றாண்டு முற்பட்டவர் என முடியும். நான்காவது: பிற்காலச் சோழ அரசர்களுள் முதலாவது அரசன் விஜயாலய சோழன். இவனைப் பெரும்புகழ் வாய்ந்தவன் என்று சரித்திரம் கருதவில்லை. இவன் ஆட்சி சுமார் கி. பி. 850-ல் தொடங்குகிறது. சோழர்களுள் வெற்றியினால் பல நாடுகளையும் கைக்கொண்டு சக்கிரவர்த்தி என்று கருதக் கூடிய அளவில் பெரும்புகழ் பெற்று விளங்கியவன் முதல் இராஜராஜன் ஆவான். இவன் ஆட்சி கி.பி. 985-ல் தொடங்கியது. முற்குறிக்கப்பட்டபடி கம்பர் காலம் இவ்வரசன் காலத்திற்கும் ஒரு நூற்றாண்டு முற்பட்டதெனக் கொள்ளநேரிடும். கடைசியாக, புவிச்சக்கிரவர்த்திகளே தங்கள் பெருமைக்கு ஏற்றபடி முதன் முதலில் புலவர்களுக்குக் கவிச்சக்கிரவர்த்தி என்று சிறப்புப் பெயர் கொடுத்து ஆஸ்தானப் புலவர்களாகப் போற்றுதல் மரபு. பின்னரே இவ்வழக்கினைப் பொதுமக்கள் ஆளுவர். முதன்முதலாக இச்சிறப்புப் பெயர் பெற்றவர் கலிங்க வெற்றி பாடிய செயங்கொண்டாரே. இவர்க்குப் பிற்பட்டவராகவே கம்பரைக் கொள்ளுதல் இயல்பு. ஆனால் அரங்கேற்றுச் செய்யுளின்படி, இவர் காலத்திற்குக் கம்பர் காலம் சுமார் 2 நூற்றாண்டுகளுக்கு முற்பட்டுவிடும். இவைகள் அனைத்தும் அசம்பாவிதமாம். வைஷ்ணவ சமய சரிதத்திற்கும், தமிழ் இலக்கிய சரிதத்திற்கும், தமிழ் நாட்டுச் சரித்திரத்திற்கும்

---

*சீவகசிந்தாமணி : சமாஜப் பதிப்பு : முகவுரை 16-22

'எண்ணிய சகாத்தம்' என்ற செய்யுள் இதன் இயல்பான பொருளில் முரண்பாடாகவுள்ளது.

இக்காரணங்களால் இத்தனியன் சான்றாகக் கொள்ளத்தக்கது அன்று.

இனி, வேறு சான்றுகள் உண்டோ என நோக்கு வோம். கம்பரைக் குறித்து வரதராஜர் பாக வதத்தில்,

சம்பரனை வதைத்துயருந்
 தசரத ராமன் சரிதை
கம்பன் மொழி செந்தமிழின்
 கவித்திறத்தின் காட்சி கண்டும்
அம்புயங்க ளலர்ந்தெழு நீ
 ரிலஞ்சி தனி லாம்பலும்த
தும்பிய போலே வாசு
 தேவ கதை சொல்லினன்றல்

(திருவரங்கப்படலம். 148)

என வருகிறது. இந்நூலின் காலம் கி. பி. 1543 ஆகும் (திருவரங்கப். 154). எனவே, 16-ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் கம்பர் என்பது தெளிவு.

அரச கேசரியாரது இரகுவமிசத்தின் பாயிரத்தில்,

பொற்றா மரைமான் ஒழியாது பொலியு மார்ப
எற்றாங்கு மேனி ரகுராம சரிதை யாவும்
கற்றார் கவியிற் பெரிதாந் தமிழ்க் கம்பநாடன்
உற்றாங் குரைத்தான் உரையாதன ஓதுகிற்பாம்

எனக் கம்பர் குறிக்கப்படுகிறார். அரச கேசரியார் காலம் கி. பி. 1478 - 1519. எனவே, 15 ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் கம்பர்.

அன்றியும், நன்னூலுக்கு மயிலை நாதர் இயற்றிய உரையில் (சூ. 114 உரை), 'கம்பன்' என்னும்

பெயர் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது. நன்னூலை இயற்றுவித்த அமராபரணன் சீயகங்கன் என்ற அரசன், மூன்றாங் குலோத்துங்க சோழன் (கி. பி. 1178 - 1216) காலத்தவன். எனவே இவ் இலக்கணம் 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியதாகும். மயிலைநாதரது உரையின் காலத்தைத் திட்டமாக அறிதற்குச் சான்றுகள் இல்லை. எனினும், சீயகங்கன்மீது இவர் காட்டும் அன்பும் மதிப்புங் கொண்டு, அவன் காலத்தவரென்றேனும் அல்லது அவனுக்குச் சிறிதளவே பிற்பட்டவரென்றேனுங் கொள்ளலாம். சுமார் கி. பி. 1300 - ல் இவரது உரை தோன்றியிருக்கலாம். எனவே, இக்காலத்திற்கும் கம்பர் முற்பட்டவராவர்.

கி. பி. 1376-ம் ஆண்டில் பொறிக்கப்பட்ட ஒரு கன்னடக் கல்வெட்டுக் கம்ப ராமாயணத்தையே குறிக்கிறது. *தமிழில் அது வருமாறு :—

ஸகல குண ஸம்பந்நரான வத்ஸ கோத்ரத்து ஆணுக பள்ளி கம்பராமாயண நாராயணருடைய

---

*விஜயநகர ஸாம்ராஜ்யத்தின் தொடக்கத்திலிருந்த அரசர்களுள் ஒருவரான புக்கதேவராயர் காலத்தில், கி. பி. 1376 - ம் ஆண்டில் பொறிக்கபபட்ட அக்கல்வெட்டு தி. நா. சுப்பிரமணியம் அவர்களால் தமிழுலகிற்கு அறிவிக்கப்பட்டது. அது வருமாறு:—

ஸ்ரீமந மஹாமண்டலேச்வர அரிராயவிபாட பாஷெகெ தப்புவராயரகண்ட சதுஸ்ஸமுத்ராதிபதி ஸ்ரீ வீரபுக்கண்ண வொடெயரு பரிதிவீராஜ்யம கேயுத்திரே.........ஸகலகுண ஸம்பந்நரப வத்ஸகோத்ரத ஆணுகபள்ள கம்பத ராமாயணத நாராயணர மக்களு ராமாயணத ராமபனு லக்ஷ்மணனு அணுக வள்ளிய ராமசந்த்ர தேவர பாதக்கெ நமஸ்காரவமாடி ஹோதரு. பிங்கள ஸம்வத்ஸரதலி பரத்து. —*Epigraphia Carnatica, Vol V, Hassan, 77* (சுந்திரா - 1. பக். 108 - 9).

மக்கள் ராமாயணம் ராமப்பனும் லக்ஷ்மணனும் அனுக வள்ளி ராமச்சந்திர தேவர் பாதங்களை நமஸ்காரஞ் செய்து போனார்கள். பிங்கல ஸம்வத்ஸரத்தில் வரைந்தது.

இக் கல்வெட்டினால் கி. பி. 1376-க்கு முன்பு இரண்டு தலைமுறைக் காலமாக, சுமார் 50 ஆண்டுகளாக, கம்பராமாயணம் கன்னட தேசத்தில் வழங்கி வந்ததென்பது விளங்கும். ஆகவே கி. பி. 1325-க்கு முன்பாகவே கம்பராமாயணம் பாடப் பெற்றுப் பிரபலம் அடைந்திருக்க வேண்டும். இவ்வாறு பிரபலமடைதற்கு ஒரு நூற்றாண்டு சென்றிருக்கலாம். எனவே கம்பரது காலம் கி. பி. 1225-க்கு முற்பட்டதாதல் வேண்டும். இதனை வேறொரு செய்தியும் வற்புறுத்துகிறது.

பெரிய திருமொழியில் 'மஞ்சுலாஞ் சோலை' என்ற பாசுரத்தின் வியாக்கியானத்திலே 'ஈக்கள் வண்டொடு மொய்ப்ப' என்ற இராமாயண அடியை (பால. ஆற்றுப். 10) மேற்கோள் காட்டி, 'என்று ஆற்று வரவுகளிலே சொல்லுவார்களாய்த்துத் தமிழர்' என எழுதினர் பெரிய வாச்சான் பிள்ளை. இவர் பிறந்தது கி. பி. 1228-ல். இச்செய்தி கம்பர் கி. பி. 1250 - க்கு முற்பட்டவரென்பதற்குத் தக்க சான்றல்லவா ?

வீர சோழியத்தின் உரையிலே, 'கம்பனாரிடைப் பெருமையுளது' (வேற்றுமை 7, உரை) என வருகின்றது. 'நம்பனாரிடை' என்று சிலர் பாடங் கொள்வாராயினும், பழைய ஏட்டுப் பிரதிகள் 'கம்பனாரிடை' என்பதனையே ஆதரிக்கின்றன. வீர சோழியம் வீர ராஜேந்திரன் காலத்து (கி. பி. 1063-1069) இயற்றப் பெற்றதாகும். இதன் உரையின்

காலத்தைத் திட்டமாக வரையறுத்தற்கு இயலாது. ஆனால், இவ்வுரைகாரர் இராஜேந்திர சோழ தேவன், வீர ராஜேந்திரன் என்ற சோழர்கள் காலத்துச் சாசனங்களையும் பெயர்களையும் மிகுதியாய் எடுத்தாண்டுள்ளார்; இவ்வரசர்கள் காலத்திற்கு மிகப் பிற்பட்டிருக்க முடியாது. இவர்களுக்குச் சுமார் ஒரு நூற்றாண்டு பிற்பட்டவராக இவ்வுரைகாரரைக் கொள்ளலாம். எனவே சுமார் 12-ம் நூற்றாண்டின் இறுதியில் இவ்வுரை தோன்றியிருக்கலாம். கம்பரும் கி. பி. 1200 - க்கு முன் வாழ்ந்தவராதல் வேண்டும். இப் புலவர் பெருமானை இவ்வுரை குறிக்கும் வாசகத்திலிருந்து இதற்கு இவர் நெருங்கிய காலத்தவரென ஊகிக்கலாம். இக்காலம் பின்னெல்லையாகும்.

கம்பர் பரந்து பட்ட கல்வியறிவுள்ளவர். இது 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்ற உலக வசனத்தாலும், 'கம்பனுரிடைப் பெருமை யுளது' என முன் குறித்த வீரசோழியவுரையில் வரும் உதாரணத்தாலும் விளங்கும். இவர் சிந்தாமணி, பெருங்கதை* முதலிய பல நூல்களையும் கற்றுத் தெளிந்தவர். சிந்தாமணியில் (257)

**வாளினுற் பேச லல்லால் வாயினுல் பேசல் தேற்றேன்**

---

* பெருங்கதையினின்றும் ஓரடியைக் கம்பர் எடுத்தாளும் திறன் மிக வியக்கத்தக்கது: அந்நூலில் (1, 33, 50)

'பரந்துமீ தரும்பிய பசலை வானத்து'

என வருகிறது. இவ்வடியைத் தைலமாட்டுப் படலத்தில் (6)

பரந்தமீ னரும்பிய பசலை வானகம்

என அமைத்திருக்கின்றனர்.

என வருகின்றது. இதனையே இடத்திற்குத் தக்க படி சிறிது மாற்றி,

வில்லினாற் சொலி னல்லது வெந்திறல் வெள்கச்
சொல்லினாற் சொலக் கற்றிலம் யாமெனச் சொன்னான்

எனக் கும்பகருணன் வதைப் படலத்தில் (235) கம்பர் அமைத்தனர். சிந்தாமணியில் (579)

துன்ப முற்ற வர்க்கலால்
இன்ப மில்லை யாதலின்

என வருகின்றது. இக் கருத்தையே கங்கைப்படலத் தில் (69)

துன்புள தெனினன்றோ சுகமுளது

எனக் கம்பர் கூறினர். சிந்தாமணியில் (2265)

விருந்தாயினை யெறிநீயென
விரைமார்பகங் கொடுத்தாற்
கரும்பூணற வெறிந்தாங்கவ
னினதூழினி யெனவே

என வருகின்றது. இக் கருத்தையே, இதே செய்யுள் வகையில், இதே சந்தத்திலே, முதற்போர்ப் படலத் தில் (180)

இணையாருமி லவனேர்நர எய்நாவலி செய்தாய்
அணையாயினி யெனதூழென அடராவெளி படரா

எனக் கம்பர் மொழிந்தனர். இங்ஙனம் பல.

சிந்தாமணி 10-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்டதென முன்னரே கூறினேன். ஆகவே, 10-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டுக் கம்பர் தோன்றி

யவராதல் வேண்டும். இக் காலம் முன்னெல்லையாகக் கொள்ளற் குரியது.

கி. பி. 1000-ம் ஆண்டுக்குப் பின்னும் கி. பி. 1200-ம் ஆண்டுக்கு முன்னும் உள்ள இடைக் காலத்தில், கம்பர் எப்பொழுது வாழ்ந்தார்? இக் கேள்வியின் விடைக்குக் கன்ன பரம்பரை வரலாறுகள் சில பயன்படுகின்றன.

தமிழ் நாவலர் சரிதை சுமார் 275 ஆண்டுகட்கு முற்பட்டது. இதில், தெலுங்குப் பிரதேசமாகிய ஓரங்கல் நாட்டில் பிரதாபருத்திரன் ஆஸ்தானத்திற்குக் கம்பர் சென்றதாகவும், அவனது வள்ளன்மையைப் புகழ்ந்து,

அவனிமுழு துண்டும் அயிரா பதத்துன்
பவனி தொழுவார் படுத்தும்-புவனி
உருத்திரா உன்னுடைய ஓரங்கல் நாட்டில்
குருத்திரா வாழைக் குழாம்

என்ற செய்யுளைப் பாடியதாகவும் ஒரு வரலாறு காணப்படுகிறது. இவ் வரலாறு உண்மை யென்றே கொள்ளலாம். ஏனெனின், கம்பர் தெலுங்கு முதலிய பிறமொழிச் சொற்கள் பலவற்றை எடுத்தாளுகின்றனர்.

மசரதம் அனையவர் வரமும் வாழ்வும் (திருவவதார. 22)
தாள் மிடைந்தன தம்பி மிடைந்தென (எழுச்சி. 30)
கிச்சிடை யிடுமெனக் கிளக்கின்றார் சிலர்(பிணிவீட்டு. 3
அக்கட இராவணற் கமைந்த ஆற்றலே
(யுத்த. மந்திரப். 32)

அந்து செய்குவனென அறிந்த மாதலி
(இராவண. வதைப். 61)

என்பன உதாரணங்கள். இச்சொற்களுள், 'மசரதம்' கானல் நீர் என்றும், 'தம்பி' தாமரை என்றும், 'கிச்சு'

நெருப்பு என்றும் தெலுங்கிற் பொருள்படுவன. 'அந்து' அப்படி என்று கன்னடத்திற் பொருளாம். 'அக்கட' என்பது தெலுங்கில் வியப்பிடைச் சொல். மேலே வரலாற்றிற் குறிக்கப்பட்ட அரசன் முதலாம் பிரதாப ருத்திரன். இவனது கல்வெட்டுக்கள் கி. பி. 1162, 1179 முதலிய ஆண்டுகட்கு உரியவாயுள்ளன. எனவே, 12-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவன் வாழ்ந்தவன். ஆதலால் கம்பரும் இக்காலத்தினராவர்.

வேறொரு வரலாறு கம்பரும் ஒட்டக் கூத்தரும் ஒரு காலத்தவர் என்று கருதும்படி யுள்ளது.

*பூணிலாவுங் கம்பனலம் பொலியுந் தமிழாற்*
*பொலிவெய்திக்*
*காணுமாறு காண்டமுறுங் கதையிற் பெரிய*
*காதை யெனுந்*
*தாணிலாவுங் கழலபயன் சபையிற் பயிலுத்*
*தரகாண்டம்*
*வாணிதாச னரங்கேற்ற வைத்தார் சோழ*
*மண்டலமே* (சோழ. சதகம். 80)

என்று ஒரு செய்யுள் உள்ளது. இதிற் காணும் வாணிதாசன் ஒட்டக் கூத்தரே என்றும், அவர் உத்தர காண்டம் பாடினார் என்றும் *கதை கூறுவர். ஆனால், இங்ஙனம் கொள்வதற்கு ஆதாரம் யாதும் இல்லை. வாணிதாசன் என்ற பெயருள்ள வேறொரு புலவர் இருந்தனர் என்று தெரிதலால், அவரே இவ் உத்தர காண்டத்தைப் பாடியிருத்தல் வேண்டும். கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் இணைத்து வேறொரு வரலாறும், தமிழ் நாவலர் சரிதை, சோழமண்டல சதகம் முதலியவற்றில் காணப் பெறுமை இங்கே நாம் அறியத்தக்கது. சுமார் 75

*செந்தமிழ், தொகுதி III, பக். 43

ஆண்டுகளுக்கு முன் இயற்றிய விநோதரச மஞ்சரியில்தான் இருபெரும் புலவர்களையும் இயைக்கும் வரலாறுகள் முதலில் தோன்றியுள்ளன.

என்றாலும், இருவரும் ஏறத்தாழச் சமகாலத்தவர் என்பது முழுதும் ஆதாரமில்லாத கூற்றல்ல. கம்பரை ஆதரித்தவர் சடையப்பர் என்ற வள்ளல் என்பது பிரசித்தம். அவர் தமது இராமாயணத்திலேயே இவ்வள்ளலைப் பத்து இடங்களில்* புகழ்ந்து பாடியுள்ளார். அச்சுப் பிரதிகளில் எட்டு இடங்கள் காணப்படுகின்றன. அவற்றில் காணப்பெறாது ஏட்டுப் பிரதிகளிற் காணும் இரண்டு செய்யுட்கள் வருமாறு :

அந்தணர் வணிகர் வேளாண்
மரபினர் ஆலி நாட்டுச்
சந்தணி புயந்து வள்ளல்
சடையனை யனைய சான்றோர்
உய்ந்தனம் அடிய மென்னும்
உவகையர் உவரி நாண
வந்தன ரிராமன் கோயில்
மங்கலத் துரிமை மாக்கள்.

(யுத்த. திருமுடி. 33)

மறையவர் வாழி வேத
மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயும் அரசர் திங்கள்
மும்மழை வாழி மெய்ம்மை

---

*பாயிரம் 11 ; பால, வேள்விப்படலம். 1 ; பால. அகலிகை. 18 ; பால. மிதிலைகாண். 74 ; யுத்த. சேதுபந்தன. 9 ; யுத்த. நாகபாச. 263 ; யுத்த. மருத்துமலை. 58 ; யுத்த. திருமுடி சூட்டு. 33, 38 ; யுத்த. விடைகொடுத்த. வாழ்த்து.

இறையவ னிராமன் வாழி
இக்கதை கேட்போர் வாழி
அறைபுகழ்ச் சடையன் வாழி
அரும்புகழ் அநுமன் வாழி.

(யுத்த. விடைகொடுத்த. வாழ்த்து)

சடையப்பருக்குச் சரராமன் (யுத்த. நாகபாச. 263) என்ற பெயரும், வெண்ணைத் திரிகர்த்தன் (சோழ. சத. 91 மேற்கோள். 91, 92) என்ற பெயரும், கண்ணன் என்ற பெயரும், (பால. அகலிகை. 18; யுத்த மருத்துமலை. 58) உளவாகத் தெரிகின்றன.

மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவேரி—பொய்கழுவும்
போர்வேற் சடையன் புதுவையா னில்லறத்தை
யார்போற்ற வல்லா ரறிந்து

என்ற செய்யுளைக் கம்பர் பாடியதாகச் சோழ மண்டல சதகம் காட்டுகிறது. இச் செய்யுள் மூவலூர்க் கல்வெட்டில் (செந்தமிழ் IV, பக். 252) உள்ளது. எனவே இதன் பழமையில் ஐயுறவு கொள்ள இடமில்லை. இதில் கம்பர் தம்மை ஆதரித்து வந்த சடையனைப் புதுவையான் என்கிறார். எனவே, புதுவைச் சடையனும் வெண்ணைச் சடையனும் ஒருவரே யாதல் தெளியலாம்.

சடையப்பரது தந்தை சங்கரன் என்பவரிடம் ஒட்டக்கூத்தர், தாம் கவிச்சக்கிரவர்த்தியாவதற்கு முன்பு, இளமையில் உதவித்தொழில் செய்துவந்தார். இது சோழ மண்டல சதகத்தில்,

புதுவைச் சடையன் பொருந்து சங்கரனுக்கு
உதவித் தொழில்புரி ஒட்டக்கூத்தனை (93)

என வரும் மேற்கோள் - செய்யுளால் விளங்குகின்றது. ஆகவே, ஒட்டக்கூத்தரது முதுமைக்காலத்தில் கம்பர் இளம் பிராயத்தினர் என்று கொள்ளலாம்.

ஒட்டக்கூத்தர், விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜராஜன் என்ற மூன்று அரசர்களைக் குறித்தும் மூன்று உலாக்கள் பாடியுள்ளார். இம் மூவர்களும் கி. பி. 1118-முதல் சுமார் 1171 வரை 54 ஆண்டுகள் அரசாண்டுள்ளார்கள் எனத் தெரிகின்றது. இராஜராஜன் எதுவரை வாழ்ந்து வந்தான் என்பது சரித ஆராய்ச்சியில் திட்டமாகப் புலப்படவில்லை. ஒட்டக்கூத்தர் விக்கிரம சோழனைப் பாடியிருத்தலால் (அப்பொழுது அவருக்குச் சுமார் 25 வயது இருந்திருக்கலாம்), அவர் சுமார் 85-வது வயது வரை இருந்தனர் எனக் கொள்ள வேண்டும். இவரது முதுமைப் பருவத்தில் கம்பர் வாழ்ந்தனர் என மேலே கண்டோமாதலின், கி. பி. 12-ம் ஆண்டின் பிற்பகுதியில் கம்பர் வாழ்ந்தனர் என்று முன் கூறியது உறுதியாகின்றது.

வேறுசில செய்திகள் *கன்னபரம்பரை மூலமாகவும் நூல் வழியாகவும் தெரிகின்றன. அவற்றை

---

*கம்பரது உயிர்-நண்பராகிய சடையப்ப வள்ளல், பரராசசிங்கன் என்ற இலங்கையரசன் வேண்ட, பல கப்பல்களில் நெல்லனுப்பினார் என்று சோழமண்டல சதகம் கூறுகிறது. இச் செய்யுள் வருமாறு :—

தேனார் தொடையார் பரராசசிங்கப் பெருமான் செழுநதமிழ்க்குக்
கானார் நெல்லின் மலைகோடி கண்டிநாடு கரைசேரக்
கூனார் கப்ப லாயிரத்திற் கொடுபோ யளித்த கொடைத் தடக்கை
மானாகரன் சங்கரன் சடையன் வளஞ்சேர் சோழமண்டலமே

பரராச சிங்கனைக் குறித்துப் பல பல ஐயங்கள் உண்டு. கண்டி நாட்டில் இப் பெயருடையவன் ஆட்சி புரிந்ததில்லை. யாழ்ப்பாணத்தில் அரசு புரிந்தவனாகலாம் என்று வலிந்து

உண்மையெனக் கொள்ளுதலில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. நாம் அவற்றைப் புறக்கணித்து ஒதுக்கி விடலாம்.

இனி, இராமாயணப் பெருங்காப்பியத்திற் காணும் சில செய்திகளை நோக்குவோம். சோழ நாட்டு அரசனைப் பற்றியனவே இங்கே இயைபுடையன. பில நீங்கு படலத்தில் (35)

---

கொள்வர். அந்தகக்கவி வீரராகவமுதலியார் காலத்தில் பரராச சிங்கன் எனப் பெயரிய ஓர் அரசன் இருந்தனன் என்று தமிழ்நாவலர் சரிதை தெரிவிக்கிறது. சடையப்பர் காலத்தில் இப் பெயருடைய அரசன் இருந்தான் என்பதற்கு ஓர் ஆதாரமும் இல்லை. இலங்கைச் சரித்திரத்திலும் காணப்படவில்லை. கம்பரைப் பற்றிக் கதைகள் வளர்ந்துள்ளன போல, சடையப்பரைப்பற்றியும் கதைகள் வளர்தல் இயல்புதானே!

குலோத்துங்க சோழன் காலத்தில் காவேரி பெருகி வெள்ளங் கரைகடந்தது. கம்பர் 'கன்னியழிந்தனள்' என்னும் வெண்பாக் கூறினர். நதிப் பெருக்கு அடங்கியது. கைம்மாறாக, குடிகள் செலுத்தி வரும் கலியாண வரியை ஒரு சாசனத்தின் மூலம் அரசன் கம்பருக்குக் கொடுக்க, அவர் கொங்குநாட்டுப் புலவர்களுடைய வம்சங்களுக்கு அவ்வரியை அளித்து விட்டனர்; என்று கொங்குமண்டல சதகத்தின் உரைகாரர் கூறுவர்.

கதுவிவரு பொன்னி கரைகடவா வண்ணம்
பதுமமுகக் கம்பனவர் பாட—வதுவைவரி
மாடை யரைக்கழஞ்சு வண்கம்பர்க் கீந்தபரி
சேடர் குலோத்துங்கன் எழுத்து

என்ற பழைய பாட்டு சாசனத்தின் கருத்தைக் குறிப்பிடுகின்றது என்றுங் காட்டினர். இவ்வரலாறு தங்கள் நாட்டுப் பெருமை தோன்றுவதற் கென்றே பிற்காலத்தார் அமைத்துக் கொண்டதெனல் எளிதில் உணரலாம்.

*புலிபுகழ் சென்னிபோ ரமலன் தோள்புகழ்
கவிகள் தம் மனையெனக் கனக ராசியும்
சவியுடைத் தூசு மென் சாந்து மாலையும்
அவிரிழைக் குப்பையும் அளவி லாதது

என ஒரு செய்யுள் வந்துள்ளது. இங்கே 'அமலன்' என்பது பெயராகக் கருத இடமில்லை. இப் பெயருடைய சோழன் ஒருவன் இருந்தனனென்றும் தெரியவில்லை. பொதுப்பட, சோழ அரசர்கள் பலர் இவ் அடை மொழியோடு கூறப்படுகின்றனர். உதாரணமாக, இரண்டாம் குலோத்துங்கன் 'அனகன், அதுலன், அமலன்' (உலா. கண்ணி. 157) எனக் கூறப்படுகின்றான். ஆனால், கம்பர் காலத்தேயிருந்த அரசன் உலகம் முழுதும் போற்றும் பேரரசனாகவும் சிறந்த போர் வீரனாகவும் பெருங்கொடை வள்ளலாகவும் இருந்தனன் என்பது இச் செய்யுளால் புலனாகிறது. ஒட்டக்கூத்தர் காலத்தவர்களான விக்கிரமன், குலோத்துங்கன், இராஜ ராஜன் என்ற மூவர்களுக்கும் இச் செய்யுள் பொருந்து மென்னலாம்.

ஆனால், மருத்துமலைப் படலத்தில் (58)

வன்னி நாட்டிய பொன்மௌலி
வானவன் மலரின் மேலான்
கன்னிநாள் திருவைச் சேர்ந்து
கண்ணனும் ஆளுங் காணிச்

---

*பாடபேதங்கள் (எண்கள் சீர்களைக் குறிப்பன) :

2-4 சென்னியோர்ப் புகழும் பொற்புடை, சென்னியோனமலன் தொல்புகழ்க்; 2-3 சென்னிபே ரமலன்; 9 தவிசுடைத்; 10 துகிலுமென்; 12 (ஞ்) சுண்ணமும் 13 அவிர்மணிக்.

*சென்னிநாள் தெரியல் வீரன்*
*தியாக விநோதன் தெய்வப்*
*பொன்னிநாட் டுவமை வைப்பைப்*
*புலன்கொள நோக்கிப் போனான்*

என ஒரு செய்யுள் வருகிறது. இங்கேயுள்ள தியாக விநோதன் என்பது குறிப்பிட்ட ஓர் அரசனுக்கு வழங்கிய சிறப்புப் பெயரென்று தோன்றுகிறது. விக்கிரம சோழன் 'தியாக சமுத்திரம்' எனக் குறிக்கப்படுகிறான்.

*செங்கோல் தியாக சமுத்திரம் நண்ணுதலும்*
*தங்கோ மறுகில் தலைப்பட்டு* (கண்ணி, 216)

எனவும்,

*ஏனைக் கலிங்கங்கள் ஏழனையும் போய்க்கொண்ட*
*தானைத் தியாக சமுத்திரமே* (கண்ணி, 331)

எனவும், விக்கிரம சோழன் உலாவில் வருகின்றன. தியாக சமுத்திரம் என்ற இப்பெயரோடு கூடிய ஊர்களும் சில உள்ளன. இங்ஙனமே குலோத்துங்க சோழன் II 'தியாகன்' எனக் குறிக்கப்படுகின்றான்.

*தியாகனை மானதனைத் திக்கானை எட்டுக்கும்*
*பாகனையே பின்சென்று பற்றுவார்* (கண்ணி,217)

எனக் குலோத்துங்க சோழன் உலாக் கூறுகின்றது. இங்கே கூறிய இவ் அரசர்கள் தியாகத்திற் சிறந்தவர்களாயிருப்பினும், 'தியாக விநோதன்' என்ற சிறப்புப் பெயர் இவர்களுக்கு வழங்கியதாய்த் தெரியவில்லை. ஆனால், வேறோர் அரசனுக்கு உரியதாய்த் 'தியாக விநோதன்' என்ற இப்பெயரே சாசனங்களில் காணப்படுகின்றது.

கும்பகோணம் வாணபுரீச்சுரர் கோயிலில் மகா மண்டபம் தென்மேற்குப் பக்கமாக மேல் பாலுள்ள ஒரு சாஸனப் பகுதி (செந்தமிழ். 1, 122) வருமாறு :

......திரைமூரான தியாக விநோதன் ஆற்றூர் ஜன்மக் காணியான படிக்கும் சுருக்கி இறை கட்டின...உள்வரி விருதராஜ பயங்கர வள நாட்டு மிழலை நாட்டு ஆற்றூருடையான்... னளூரர்தேவரான வேளூடையார் விக்கிரம சோழ வளநாட்டு விறைக் கூற்றத்துத் திரை மூர் பரிக்கிரத்த...ாக் குடியிருப்பு மாறி வீர ராஜேந்திரப் பெருவிலை விற்கிற நிலத்துக்குக் காணிவிலைக்கு ஒடுக்குங்காசு பிரஸாதம்...பற் றுக்காணியாகப் பெற்ற நிலம்...முன்னுடையா ரும்...ம் பேருமுன் இறை கட்டினபடி...ரகக்... யபலற்கு ப்ரஸாதக் காணியாக இட்டிருக்கிற படியும் தவிர்ந்து இவர்......ம் யாண்டு 6 - வது முதல் ஜன்மக் காணியான திரை மூரான தியாக விநோதன் ஆற்றூர் நிலம்...

இம் மகா மண்டபம் தென்புறம் மேல் பாலுள்ள ஒரு சாஸனப் பகுதி (செந்தமிழ், 1. 119) வருமாறு :

...திருபுவனசக்கரவர்த்திகள் மதுரையும் ஈழமும் பாண்டியனை முடித்தலையும் கொண்டருளின குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 11 - ஆவது......வாண கோவரயன் காணியான விக் கிரமசோழவளநாட்டு மிறைக் கூற்றத்து திரை மூரான தியாக விநோதன் ஆற்றூர் நிலம்......

இச்சாசனங்கள் மூன்றாங் குலோத்துங்கன் காலத்தன. இவ்வரசன் கி.பி. 1178 முதல் 1216 வரை ஆட்சி புரிந்தவன். முதலாவது சாசனத்தில் இடை

யிடையே எழுத்துக்கள் மறைந்துள்ளமையினல், பொருள் தெளிவாக அறிய இயலாது ; என்ருலும், பொதுப்படையாகக் கருத்து விளங்குகிறது. குலோத் துங்கனது 6-வது ஆண்டில் திரைமூரை விலையாகப் பெற்று 'தியாக விநோதன் ஆற்றூர்' எனப் பெய ரிட்டு ஜன்மக் காணியாக வழங்கினமை இச் சாசனத் தில் கூறப்படுகிறது. இதனால் 'தியாகவிநோதன்' என்பது மூன்ருங் குலோத்துங்கன் சிறப்புப் பெய ராதல் வேண்டும். திரைமூராயிருக்கும் காலத்தேயே விக்கிரம சோழ வளநாட்டில் அது உள்ளடங்கி யிருந்த தென முதற் சாஸனம் தெரிவிக்கின்றது. வள நாட்டின் பெயர் விக்கிரம சோழன் காலத்தில் ஏற்பட்டதெனலே பொருத்தம். இச் சோழனுக்கே 'தியாக விநோதன்' என்ற பெயரும் இருந்ததாயின், இவன் காலத்தேயே 'தியாக விநோதன் ஆற்றூர் என்று ஊர்ப் பெயர் மாறியிருக்கலாம். அவ்வா றன்றி இவனுக்குப் பிற்பட்ட வேருெரு சோழன் காலத்தில் பெயர் மாற்றம் ஏற்பட்டிருத்தலால், இவ் விக்கிரம சோழனும் தியாகவிநோதனும் வேருவர் என்பது புலப்படும்.

அன்றியும், மூன்ரும் குலோத்துங்கன் காலத்து அதிகாரிகள் பெருமக்கள் முதலியோர் சிலர் இந்தச் சிறப்புப் பெயரையே தாமும் தரித்து வந்துள்ளனர். தியாக விநோதன் (M. E. R. No. 260 of 1920), தியாக விநோதன் மூவேந்தவேளான் (ibid. 28 of 1927), தியாக விநோதபட்டன் (ibid 169 of 1927) முதலிய பெயர்களைக் காண்க (சாஸனத் தமிழ்க்கவி சரிதம், பக். 83). இச் செய்தியும் இப்பெயர் மூன்ருங் குலோத்துங்கனுக்கு உரிய தென்பதைக் காட்டும்.

இவ்வரசன் கீழாகச் சிற்றரசாயிருந்த அமரா பரணன் சீயகங்கன் 'அருங்கலை விநோதன்' என

வழங்கப் படுதலையும், இவ் அரசன் காலத்தில் கண்ணுடைய பெருமாள் என்பவன் தன்னை வீர வினோத விக்கிரம சோழ சம்புவராயனேன்' என்று அழைத்துக் கொள்ளுதலையும் (செந்தமிழ். 1. பக் 117) நோக்குமிடத்து, வினோதன் என்ற பட்ட வழக்கு இவனிடமிருந்தே பரவியிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இங்கே கூறியவற்றால், மூன்றாங் குலோத்துங்க சோழனே கம்பராற் குறிக்கப்பட்டவன் * என்பது தெளிவாம். ஆகவே மூன்றாங் குலோத்துங்கன் காலத்து அதாவது பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கம்பர் வாழ்ந்தவரென்று சிறிதும் ஐயமின்றித் துணியலாம்.

சில இராமாயண ஏடுகளில், விடை கொடுத்த படலத்தின்பின், சில அரிய செய்யுட்கள் வரையப் பட்டுள்ளன. அவற்றுள்,

ஆவின் கொடைச் சகர ராயிரத்து நூறொழித்துத்
தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு—மூவலூர்ச்
சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான்
காரார் காகுத்தன் கதை

என்ற செய்யுளும் ஒன்றாகும் (செந்தமிழ் III, 53). சகாப்தத்தைச் சகரயாண்டு என்றல் அக்காலத்துள்ள ஒரு சாசன வழக்கு (S. I. I. XII, 263, 264). இதனால், சகாப்தம் 1100-ல், அதாவது கி.பி. 1178-ல் இராமாயணத்தைக் கம்பர் பாடினரென்று விளங்குகிறது. இவ் ஆண்டில் கம்பர் தமது பெருங்காவியத்தைப் பாடி முடித்தனரென்று கொள்ளவேண்டும்.

---

*இவ் அரசனுக்குரிய 'தனிநாயகன்' என்ற பெயரினை (147 of 1927), கம்பர் 'நாராயணனே தனிநாயகனே' (உருக்காட்டு. 6) என ஆளுதலும் கருதத்தக்கது.

இங்ஙனமாகவும் 'எண்ணிய சகாப்தம் *எண்ணூற்றேழின் மேல்' என்று காலத்தைக் குறிப்பதற்குக் காரணம் என்ன என்று கேட்கலாம். ஸ்ரீ ரா. ராகவையங்காரவர்கள் கூறியுள்ளபடி, பேரெண்ணாகிய ஆயிரத்தை நீக்கி அப்தங்களைக் கூறுதல் வழக்காதலால் 1000-ன் மேலெண்ணிய 107 என்று கொண்டு, சகாப்தம் 1107-ல் அதாவது கி. பி. 1185-ல் இராமாயணம் அரங்கேற்றப்பட்டது எனக் கருதுதல் தக்கது. இப்பேரிதிகாசத்தைப் பாடி முடித்தது கி. பி. 1178-ல் என்றும், அரங்கேற்றி முடித்தது கி. பி. 1185-ல் என்றும் கொள்ளுதல் மிகவும் பொருத்தமாகும்.

தமிழ்நாட்டுச் சரிதத்தில் கம்பர் வாழ்ந்த காலம் போல அத்துணை மேம்பாடான காலம் வேறில்லை என்று சொல்லலாம். சேர சோழ பாண்டியர்கள் பன்னூறாண்டுகளாகக் கனவு கண்டுகொண்டிருந்த சக்ரவர்த்தித்துவம் 10-ம் நூற்றாண்டிலிருந்து சோழ அரசர்கள் நனவிலே கண்டதோர் உண்மையாயிற்று. தமிழ்நாடுகளை வென்று முற்றும் கைக்கொண்டு, கலிங்கம், கடாரம் முதலிய பல தேசங்களிலும் தமது ஆணை பரவும்படியாகச் செய்திருந்தனர். கடலுக்கு அப்பாலுள்ள சுமாத்திரா, ஜாவா முதலிய இடங்களிலும் சோழ அரசர்களுடைய புகழ்பரவி அந்நாட்டரசர்களோடு அரசியல் பற்றி நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்தது. 'புவிபுகழ் சென்னிபோ ரமலன்' என்ற கம்பருடைய செய்யுள் சோழரது உச்ச நிலையையே உணர்த்துகின்றது. நாட்டின் செல்வ நிலையும் அரசியல் நிலையைப் போலவே மிகவும் மேம்பாடுற்

* 'மூநூற்றேழின்மேல்,' 'முன்னூற்றேழின்மேல' என்ற பாடபேதங்களும் பிரதிகளிற் காணப்படுகின்றன.

றிருந்தது. பிற நாடுகளை வென்று கொண்ட செல்வத்தோடு, தமிழ்நாட்டின் ஆட்சி முறையில் புது வழிகளை வகுத்து நாட்டின் செல்வத்தைச் சோழர்கள் மிகுவித்தனர். சமயநிலையும் சோழர்கள் காலத்தில் மிகவும் சிறந்து விளங்கியது. பக்தி நெறியானது நாடெங்கும் பரவிச் செழித்திருந்தது. இப் பக்தியின் விளைவே கம்பரது இராமாயணம் என்று கூறினோம். 'படி கொண்ட கீர்த்தி யிராமாயண மென்னும் பக்திவெள் ளம் குடிகொண்ட கோயி லிராமானுசன்' என்பது இராமானுச நூற்றந்தாதி. இந் நெறியின் சின்னமாகப் பெருங் கோயில்கள் பல அங்கங்கே தோன்றின. ஆசாரியர்கள் வைஷ்ணவ சமயத்தைப் பெரிதும் பிரசாரஞ் செய்து வந்தார்கள். கம்பர் காலத்து ஆசாரியர் நஞ்சீயர் என்று கருதலாம். தமிழ் நாட்டிலுள்ள மக்கள் தம்மிடையிருந்த பேத வுணர்ச்சியைப் போக்கி ஒருவாறு ஒற்றுமை யெய்தும்படி, இப் பக்தி நெறி ஊக்கியது. ஆதலால், சமுதாய நிலையிலும் புது நோக்கமும் பரந்த வுணர்ச்சியும் புகுந்து அதற்குப் புத்துயிர் அளித்தன.

நாட்டின் கல்வி நிலைமையும் பெரிதும் போற்றற்குரியதாய் அமைந்தது. தமிழறிவில் வடமொழி யுணர்ச்சியும் கலந்து தமிழ்மக்கள் மனப்பண்பு அழகு பெற்று விளங்கியது. தமிழ்மொழியும் புதிய பேரழகுடன் ஒளிர்ந்தது. எளிமையிலும் நேர்மையிலும் சங்க காலத்துத் தமிழோடு ஒருவகையில ஒப்பிடக் கூடியதாயிற்று. சொல்லழகில் ஈடுபட்டு அவ் அழகைக் கருவியாகக் கொண்டு, தமிழ் மக்களை வசீகரிக்க முயன்றனர் சைன கவிஞர்கள் முதலியோர். சொல்லழகோடு கூடிய பொருளழகுதான் உண்மையில் இன்புறுத்தத் தக்கது என்ற கொள்கை கம்பர் காலத்திற் பரவி யிருந்தது. பல வகையான செய்யுள்

விகற்பங்களை யெல்லாம் சிறு நூல்களுக்கு ஒதுக்கி விட்டு, பெருமிதமாய்த் தலைநிமிர்ந்து இனிது செல்லும் விருத்தமே பெருங் காவியங்களுக்கு உரியதாகும் என்ற கொள்கையும் ஓங்கிச் சிறந்தது. 'விருத்த மென்னும் ஒண்பாவில் உயர் கம்பன்' என்ற செய்யுட் பகுதியும் கம்பராமாயணமும் இதற்குரிய சான்று கள்.

இங்ஙனமாக அரசியல் நிலை, சமய நிலை, சமுதாய நிலை, கல்வி நிலை முதலியன யாவும் ஒப்புயர்வற்றுச் சிறந்து விளங்கிய இக்காலத்தே கம்பர் தமது இராமாவதாரமாகிய கலைப்பெருங் கோயிலை இயற் றினர்.

## கம்பர் திருநாள் *

தமிழிலக்கிய சரிதத்திலே கம்பர் பெருமானது இராமாயண அரங்கேற்றத்தோடு எல்லா வகையினும் ஒத்த சிறப்புடைய பிறிதொரு நிகழ்ச்சி இல்லையெனக் கூறுதலே தகும். இதனோடு ஒரு வகையான் ஒப்பிடத் தக்கது வள்ளுவப் பெருந்தகையார் தமிழ்வேதம் அருளிச் செய்த பெரு நிகழ்ச்சியென்பது யாவரும் அறிவர். தெய்வப் புலமைத் திருவள்ளுவரது அறிவின்மாட்சி அதிசயிக்கத் தக்கதே. அவரது பேரறிவு எத்துணைப் பெரியாரையும் தலைவணக்கும் இயல்பினது. தேவிற் சிறந்த திருமாலைப் போல, இத் தெய்வப் பெரும் புலவரும் தமது நுண்ணிய மாட்சிமிக்க புலங்கொண்டு அறிவுலகினை முற்ற அளந்து எல்லை கண்டனர். மக்கட்கு உறுதி பயப்பனவற்றை ஆணி முத்தன்ன செஞ் சொற்களால் தெளித்துத் தந்தருளினர். வாழ்வின் பெரு நோக்கங்களை அகன்று கூர்ந்து விளங்கும் தமது அறிவினாற்றலாலும், பரந்து கடைபோகிய தமது கல்வி கேள்விகளின் பெருமையினாலும், ஆழ்ந்து சிறந்து முதிர்ந்த தமது அனுபவ வாயிலாலும், நுண்ணிதின் ஆராய்ந்து தெரிந்து தமிழ் மக்கட்கு உதவியருளினர். எவ்வகையினருக்கும் எவ்வகை நிலையினும் துணை நின்றுதவும் அறிவுரைக் களஞ்சியமொன்றினை அளித்தருளினர் இவ் அருட்பெருஞ் செல்வர். இவர் இயற்றித்தந்த திருக்குறட் பெருநூலிற் காணும் ஒவ்வொரு குறளும் தனித்தனியே செப்பஞ் செய்யப் பெற்றதொரு மணியேயாகும். ஒவ்வொரு குறள்மணியும் உள்ளத்து இருளகற்றி யொளிருந் தன்மையது. ஓத

---

*ஒரு பாவனைக் கட்டுரை: 29 - 3 - '26-ல் எழுதியது.

இனிதாயும், கேட்க இனிதாயும், உணர இனி தாயும் உள்ளது இத் தெய்விகப் பெருநூல். இதனை இயற்றி யருளிய புலமைத் தெய்வத்திற்குக் கோயில் எடுத்துப் போற்றியும், அவர் திருவவதாரம் செய்த திருநாளினைத் தமிழ் மக்களது மங்கல நன்னாட்களுள் ஒன்றாகப் பாராட்டியும் வருவது தமிழுலகத்திற்கு ஒரு பெருமையாகவே என்றும் உள்ளதாகும்.

இத் தெய்வப் புலவரது திருவடிப் பரிசத்தால் தமிழுலகு பரிசுத்தம் எய்தியதற்குப் பல நூற்றாண்டு கட்கு முன்பாகவே, அவர் வகுத்தருளியது போன்ற உத்தம வாழ்வின் பெருவிதிகளுக்குத் தனி நிலைக்கள மாகிய புருஷோத்தமன் ஒருவனைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று பாரதமாதா பெருந்தவம் புரிந்து வந்தனள். ஆரிய சமுதாயத்தின் மனோபாவனையானது தானறிந்த ஜாதீய வீரர்களுக்குள் இப் புருஷோத்த மனை நிச்சயிப்பதன் கண்ணும் அவனது சரித்திரத் தினைக் கோவைப் படுத்து அலங்கரிப்பதன் கண்ணும் அநேக நூற்றாண்டுகளாக முயன்று வந்தது. இம் முயற்சியின் நற்பயன் முதன்முதல் உருவம் பெறத் தொடங்கியது வான்மீகி யென்னும் மஹரிஷியின் காலத்தே தான். 'ஆதிகவி' என்று இப்பொழுது போற்றப்படும் இம்மஹான் தமது அதியற்புத கவித்வ—சக்தியினாலே ஆரியா வர்த்தத்தில் பரந்து வழங்கிய அச் சரித்திரங்களை யெல்லாம் ஒரு நிலைப் படுத்து, அழகுபெறப் புனைந்து, இராமாயணம் எனப் பெயர் தந்து, இதிஹாஸமாக இயற்றியளித் தருளினர்.

இம் மஹரிஷியின் காலத்திற்குப் பின்பு, ஆரிய-சமுதாயம் விரிந்து பெருகியது ; பரதகண்ட முழுவ தும் பரந்து சென்றது. தனித்தனியாய்ப் பல வேறிடங் களில் வாசஞ் செய்துகொண்டிருந்த சமுதாயங்கள்

பல ஆரிய—சமுதாயத்தோ டொன்றுபடவே, இந்து சமுதாயம் என்னும் சிறப்புடைப் பெருஞ் சமுதாயம் ஒன்று பரிணமித்தெழுந்தது. இச்சரித்திர கதிக்குத் தமிழ சமுதாயமும் உட்பட்டு, இந்து சமுதாயத்தின் உத்தம அங்கங்களுள் ஒன்ருக விளங்கத் தலைப்பட்டது. தனித் தமிழ் மக்கள் உயரிய நாகரிகம் படைத்தவர்; இயற்கை மதிநலம் முதலிய அருஞ் சிறப்புக்கள் பெரிதும் வாய்ந்தவர்; கவித்வசக்தி நிரம்ப உடையவர். இந்து சமுதாயத்தின் பெருமை இத் தனித் தமிழ் மக்களது கலப்பினுல் மிக அதிகரித்தது. அதன் ஆத்ம சக்தி உரம் மிகுந்து ஓங்கியது. அதன் பாவனு சக்தி ஊக்கம் பெற்று, வளம் பயின்று, புதுமை நாடியது; அதன் கவித்வ சக்தி நூற்றுக் கணக்கான விவிதவர்ணங்கள் அமைந்து, அதிமனேகரமான ரூபவைசித்திரியங்களாகத் திகழ்ந்து தோற்றஞ் சான்று நின்றது. தமிழ்ப் பண்பு மிக்க திராவிட - இந்து சமுதாயத்தின் உள்ளத்தேயும் புதிய உணர்ச்சிகள் கிளர்ந்து பரந்தன; பௌத்த மதம் பரவலுற்றது; ஜைனசமயம் தனித்து நிலைபெற்று வீறுபெற விரும்பிப் பெரிதும் முயன்றது. இவற்ருேடு முரணி வைதிகசமயம்உள்ளத்தில்ஆழ்ந்துநிலைகூடிவெற்றியையெதிர்நோக்கி நின்றது. வீரமுங் காதலும் விளைந்த நம் தமிழ் நிலத்தே இப்பொழுது அன்பும் அருளும் விளைவுபெறத் தொடங்கின. ஆழ்ந்த பக்தி ஊற்றுக்கண் திறந்து சுரந்து பெருகுவதாயிற்று. இங்ஙனமாக, இரண்டு ஜீவநதிகள் ஒன்றுகூடிப் பெருகி ஓடுவதைப் போல, ஆரியர் நாகரிகமும் தனித் தமிழர் நாகரிகமும் பேதமின்றிக் கலந்து ஒன்றுபட்டுத் தமிழ் நாட்டிலே பிரவஹிப்பதாயிற்று. காலம் விரைந்து சென்றது. நாகரிகக் கலப்பின் ஆரம்பத்தில் நிகழ்ந்த கலகம், பரபரப்பு முதலியன யாவும் நாளடைவில்

மறைந்தொழிந்தன. தக்ஷிண இந்து சமுதாய வாழ்வு அமைதியுற்றுச் சென்றது. தமிழ் மக்கட்குரிய மனப் பண்பு, அநுபவம், நாகரிகம் இவற்றிற்குத் தக்கவாறும், காலகதியின் விளைவுக்குத் தக்கவாறும், பெருஞ் சிறப்புள்ள நூதன சிருஷ்டிகள் முளைத்துச் செழித்தன. பழமையும் பெருமையும் பொருந்திய இரு பெரு நாகரிகங்கள் ஒன்று பட்டதன் முதற்பெரும் பயனாக, வள்ளுவ ரென்னும் புலமைத் தெய்வம் தோன்றி, தமிழ்வேதத்தை யருளிச்செய்து, திகழ்ந்து, மறைந்து சென்றது. பாரதமாதாவின் கனவு நனவாகுங் காலம் நெருங்கியது.

பன்னெடுங்காலமாக, வட-ஆரிய சமுதாயத்தின் உள்ளத்தே ஊறிக் கிடந்து வான்மீகி மஹரிஷியால் உருவமைந்த இராம சரிதம் இப்பொழுது தன் பூர்வ கதியை அநுஸரித்துத் தக்ஷிண இந்து சமுதாயத்தின் உள்ளப்பரப்பிலேயும் அழுந்திக்கிடந்து ரஸம் இனிது ஊறிக் கனிவதாயிற்று; புதுவதாகிய மனோபாவனையால் புதுக்கோலம் புனையப் பெற்றது. பாரததேவி அரிதில் தெரிந்துகொண்ட புருஷோத்தமனது சிறந்த குண விசேஷங்கள் நன்கு புலப்படுமாறு நூதன சம்பவங்கள் அழகு பெறச் சேர்க்கப் பெற்றன. இராமபிரானது அபூர்வ குணாதிசயங்களும், அரிய வீரச் செயல்களும், தியாக புத்தியும் மக்களது உள்ளத்தைக் கொள்ளைகொண்டன. இவர் தமது பேரொளித் திருமேனியானது தெய்வ மணத்தாற் கமழ்ந்தது. உயரிய மக்கட் பண்பும் உயரிய தெய்வப் பண்பும் ஒருங்கு சிறந்து விளங்கத் தொடங்கின. இவரது மஹிமையும் பூர்த்தி யெய்தியது. பக்தி நிரம்பிய நம் மூதாதையர்களது உள்ளத்தே, இராமபிரான் தெய்வமாகவே குடிகொண்டு நின்றனர். இராம சரிதத்தில் வழங்கிய இதர கதா பாத்திரங்

களின் குண விசேஷங்களும் சிறிது சிறிது பேத மெய்தின. இராமாயணம் பலவகையானும் செப்ப மெய்தி ஜன ஸமூகத்தில் வழங்கலாயிற்று. நாடக மாகவும் நடித்துவரப் பெற்றது. நடிக்கப்பெறவே, இத்திவ்விய சரிதம் புதுநலங் கனிந்து இன்புறுத்துவ தாயிற்று. கல்லிடைகளிலே கசிந்து பிறந்து சிற் றருவியாய்ச் சிற்றோடையாய்ப் பேரருவியாய்ப் பின் னர் நதியாய்ப் பல சிறு நதிகளோடு சங்கமித்துப் பெருநதியாய் இரு கரையும் புரண்டு பெருக்கெடுத் தோடும் மாரிக்காலத்துப் பேராறுபோல, இராம சரித்திரமும் ஆரிய சமுதாய வுள்ளத்தின் அடிப் பரப்பிலே சிறிதளவில் தோன்றிப் பின்னர் நாளா வர்த்தியில் வரவரப் பெருகி நிரம்பித் தக்ஷிணத்திற் கரை ததும்பிப் பெருக்கெடுத்துச் செல்லுவதாயிற்று. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் சமுதாய வுள்ளத்தில் இடம்பெற்ற இராம கதையின் வித்தா னது முளைத்துச் செழிப்புற வளர்ந்தோங்கித் திண் ணிய கவடுகள் பல திசைதோறும் போக்கிப் பசே லெனத் தழைத்துத் தண்ணிழல் பரப்பி வானளாவி நின்று தனது பூர்ண - ஆகிருதியை அடைந்தது. தக்ஷிண இந்து சமுதாயத்தின் உள்ளப் பரப்பிலே, கருத்துலகிலே, இராம சரிதம் மேற் கூறியவாறாக அங்க - பரிபூர்த்தியை எய்திய போதிலும், வாசா ரூப மான காவிய வுலகிலே தக்க கோலத்தோடு வெளிப் பட்டுத் தோன்றவில்லை. வாசா ரூபமாகப் புலப்படு தற்கு உத்தமப் பெருங்கவிஞ ரொருவனை அவாவி நின்றது.

இந்நிலையிலே, தென்னாடு செய்த அருந் தவத்தி னாலும், தமிழன்னை பன்னெடுங் காலமாகத் திரட்டி வைத்துள்ள அரும் புண்ணியத்தின் பெரும்பயனாலும் கம்பர்பெருமான் தோன்றி யருளினர். இப் பெரியா

ரது ஜனனத்தைத் தெய்வத் தோற்றம் என்று தான் கூறியமைதல் வேண்டும். பிரகிருதி தேவி தனது அருள்வளம் அனைத்தையும் இவர்பால் வரையாது பொழிந்தனள். 'கருவிலே திருவுடையவர்' என்பதற்கு இவரிடத்தன்றி ஏனையோர்பால் பொருள் நிரம்பக் காணுதலரிது. இயற்கையிலேயே பேரறிவு படைத்தவர். 'தொட்டனைத் தூறு மணற் கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறும் அறிவு' என்பது பொய்யா மொழியாகலின், தம் காலத்து வழங்கிய அருங்கலைகள் அனைத்தையும் முற்றக் கற்றுத் தமது அறிவினது அளவினையும் ஆற்றலையும் முன் பின் ஒப்பின்றிப் பெருக்கிக் கொண்டனர். தமது தாய் மொழியை முற்றக் கற்றதனோடு அமையாது, வடமொழிப் பயிற்சியும் நிரம்ப வாய்ந்து விளங்கினர். தம்மோடு ஒப்பாரும் மிக்காருமில்லாத பெருங் கல்வியாளராய்ப் புலமை முற்றிய காரணத்தாலே, 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்னும் முதுமொழி கால தேச வர்த்தமானத்தால் அளவு படாத ஒரு பொதுவுண்மையாய்த் தமிழுலகில் வழங்கியது. உணர்ச்சி - வலி முதலிய பிற மன - நலங்களும் இவர்பால் நிரம்பி யிருந்தன. மக்களது உள்ளமாகிய வீணையில் எத்தனை வகையான உணர்ச்சி பேதங்கள் எழக் கூடுமோ அவை யனைத்தும் தமது சங்கற்ப மாத்திரையினாலே எழுந்து இனிது சப்திக்கச் செய்யும் பேரிசையாண்மை பெற்றனர். அகத்தும் புறத்தும் காணப்படுகின்ற சௌந்தர்ய வைபவங்கள் அனைத்தையும் நுண்ணிதி னுணர்ந்து ஆழ்ந்து அனுபவித்து ஆனந்த சரீரியாய்த் தோன்றினர். இவரது பாவனாசக்தி எல்லையின்றி அகன்று பரந்தது; கொள்ளக் குறையாத பெருங்கடல் போன்றது; எவ்வுலகத்தினும் சென்று சஞ்சரிக்க வல்லது; எவ்வகைப்

பொருளினையும் எவ்வகை நிலையினையும் மனக்கண் முன்னே தெளிவாய்ப் புலப்படுத்திச் சித்திரிக்கும் சிறப்பியல் வாய்ந்தது. அறிவின் பெருமையினாலும், உணர்வின் பெருமையினாலும், பாவனாசக்தியின் பெருமையினாலும் இவரது கவித்வம் முதிர்ந்து கனிந்தது. ஸ்வரங்களும், ராகங்களும், வர்ணங்களும், கீர்த்தனங்களும் ஒன்றின்மேலொன்றாய்ப் படிப்படியாய் இசைச் செல்வத்தோடு பொங்கி வருதற் பொருட்டு நலன்கள் நிரம்பிநின்ற அரிய வீணை போல, இவரது பண்பு மிக்க உள்ளந்தானும், கவித்வ சக்தியின் வேகத்தால் பண் கனிந்தூறும் இனிய கருத்துக்கள் அடுத்தடுத் தெழுந்து ஒன்றோடொன் றிசைந்து நவநவமான கான விலாசத்துடன் ஒழுகிவரும் பக்குவமெய்திற்று. மதுரமிக்க இவ் இருதய கானத்தை யுணர்த்துதற்கென்றே அமைந்ததென்னலாம் இவரது அரிய சொற்செல்வம். தமிழணங்கு இவ் அருந்திறற் பெரியாரது குறிப்புணர்ந்த மாத்திரையில், அவர் விரும்பிய வண்ணம் இன்சுவை கனிந்த நன்மொழியினைத் தட்டின்றி யுதவிவரக் காத்து நின்றனள். தமிழ் மொழியின் இனிமையினையும், அழகினையும், ஆற்றலையும் இவர் போல் முற்ற வுணர்ந்தார் பிறர் யாரும் இல்லையென்றே கூறலாம். தமிழ் மொழி இவரது தனியரசினுக்கு அன்புற்றடங்கி நின்று குற்றேவல் புரிகுவதாயிற்று.

இங்ஙனம் உத்தமப்பெருங்கவிஞர்க்குரிய உத்தம லக்ஷணங்களனைத்தும் ஒருங்கு நிரம்பி விளங்கினர் கம்பர் பெருமான்.

பாரததேவியின் அருந்தவம் முற்றுப் பெருங் காலமாயிற்று. அவ் அம்மை பல நூற்றாண்டுகளாக ஆசையோடு எதிர் நோக்கியிருந்த ஸம்பூர்ண - ராம பிரானை வாசாரூபமாக உலகினர்க்கு அளிக்கக் கம்பர்

திருவுளம் பற்றினர். எத்தகைய மங்கல நன்னாளில் நமது கவிஞர் இங்ஙனம் எண்ணித் துணிந்தா ரென யார்வரால் அளவிட் டுரைக்கத் தகும்? தம்முயிர் போற் கம்பர் பெருமானைப் பாதுகாத்துத் தமக்கும் தமிழ்க்கும் அழியாப் புகழ் தேடிக்கொண்ட சடை யப்ப வள்ளலார் தூண்ட இராமசரிதம் பாடுங் கருத்து எழுந்ததெனச் சிலர் கூறுவர். ஆனால் இத் தெய்வ மாக்கதையைப் பாட வேண்டுமென்று கம்ப ரது உயிரே அளவு கடந்த ஆசை கொண்டிருந்தது என்பது தான் உண்மை. 'ஆசை பற்றி அறைய லுற்றேன்' என்றே நமது கவிஞர் சிகாமணியும் நமக்கு உணர்த்துகின்றார். பிறர் யாரேனும் வேண்ட, இத் தெய்வ நறுங்கனி ரஸம் ஊறிப் பழுத்ததாக மாட்டாது. மேலும் இப் பெருங் கருத்து கம்பரது இளமைப் பிராயத்திலேயே இவரது திருவுள்ளத்தில் தோன்றியிருத்தல் வேண்டும். இளமை தொட்டே தம்மை இராமாயணத்திற்கெனத் தத்தஞ்செய்தனர். தமதுவாழ்வின் தனிப்பெருநோக்கம் இராமகாதையை இயற்றுதலே யென்று கடைப் பிடித்தனர். இவரது சிந்தை இராமசரிதத்தையே சுற்றிச் சுழன்று வந்தது; இவரது சொற்கள் யாவும் இராம சரித்திரம் பற் றியே விளைந்தன ; இவரது செயல்கள் யாவும் இராம சரிதத்தை முற்றுவிக்கும் பொருட்டே எழுந்தன.

ஆரே யெனுமொன்று சொல்லத்
தொடங்கினு மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற்றேன்
பெருநான் மறையின்
வேரே மிதிலையின் மின்னொடும்
போய்வெய்ய கானடைந்த
காரே கடல்கொளுந்தச் சிலை
வாங்கிய காகுத்தனே

என்ற அழகிய செய்யுளின் பொருள் கம்பர் பெருமானது திருவுளத் தன்மையை நினைக்கும் பொழுதுதான் நமக்குப் புலப்படுகின்றது.

உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உகப்பார்

என்ற தெய்வத் திருவாக்கின் இன்னிசையிலே நமது மனம் கட்டுண்டு கிடப்பதன் காரணம் இப்பொழுது தான் நாம் அறிகின்றோம். இவரது அகன்று பரந்த அகவுலகிலே இராம சரித மொன்றே தனியாட்சி புரிந்து வந்தது. காலம், அளவு முதலிய வரையறையின்றிச் செவிநுகர் கனிகளைச் சொரிந்து தரவல்ல கம்பரென்னும் கற்பக தருவினை, அது வெயில் முதலியனவற்றால் வாடி வருந்தாதபடி, நீர் பெய்து அன்போடு பாதுகாத்து வந்த சடையப்பவள்ளலார் தாமும் இராம சரிதத்திற்கு அடுத்தபடியாகவே நமது கவிஞர் பெருமானது அன்பிற்கு உரியவராயினர். பல ஆண்டுகளாக, இரவும் பகலும், இராமாயணப் பெரும்பொருளையே கம்பநாடர் சிந்தனைசெய்து வந்தாராதல் வேண்டும். கதைப் போக்கினை அழகு பெற ஒழுங்கு படுத்துதலினும, பலவேறு கட்டங்களில் நிகழும் சம்பாஷணைகளின் முக்கியாம்சங்களைத் தெரிந்தெடுத்து அழகு படுத்துதலினும், கதா பாத்திரங்களின் குண விசேஷங்களை அவ்வவர்க்குரிய சொற்செயல் முதலியவற்றால் விளங்க அமைப்பதிலும், இவரது வாழ்வுக்காலத்தின் முற்பகுதி கழிந்திருத்தல் வேண்டும். இராம சரிதம் என்னும் புண்ணிய தீர்த்தத்திலே இவர் தோய்ந்து தோய்ந்து அதன்கண் தம்மை நன்கு ஊற வைத்திருத்தல் வேண்டும். தம்மை இராமசரித மயமாகவே மாற்றி யிருத்தல் வேண்டும். பலரும் இவரைப் பித்தரெனவும் பேதை யெனவும் கூறுமாறு, தமது உளங்கோயில் கொண்ட தெய்வப்

பெருஞ் சரிதத்திலே ஈடுபட்டுப் பக்தராய் விளங்கினர்.

*பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்*
*பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ ?*

என்று நம் கவிஞர் பெருந்தகை கூறுவதன் குறிப்பு உணரத் தக்கது. இவர் தம் பெருங் காப்பியத்தைப் பாடியது பிறரது ஆணையை மேற்கொண்டன்று; பிறர் கேட்டு உளங் குளிரும் பொருட்டும் அன்று; தமது ஆத்ம தாகத்தைத் தணிக்கும் பொருட்டுத் தாம் பெய்து கொண்ட கானவர்ஷமே யாகும் இவரது ‘ இராமாவதாரம்.’ இப் பெருந்தகையாரது கவித்வ சக்தி இராம சரித்திரத்தை அலங்கரித்தற் பொருட்டாகவே அரும்பி மலர்ந்து, ஒளி சிறந்து, மணங் கமழ்ந்து விளங்கியதாகும். இத் தெய்வ கீதத்தைப் பாடுதற் பொருட்டாகவே அமைந்து நின்ற ஓர் அரும் பெறல் வீணை யென்று நம் புலவர் பெருமானைக் கூறின், அது மிகவும் பொருத்த முடையதே யாகும்.

இராம காதையைப் பாடுதற் கெனத் தம்மைப் பக்குவப் படுத்தி அவ் அருஞ் செயலினை மேற்கொள்ளுதற் கண்ணே தாம் ஈடுபட்டிருந்த போதிலும், கம்பர் பெருமானது உள்ளத்தில் இடையிடையே சிறிது தளர்வு தோன்றுமற் போகவில்லை யென்று கருதற்கிட முண்டு. வான்மீகி மஹரிஷியின் பெருமையை நன்குணர்ந்தார் யார்தாம் அவரோடு கவிதையில் இகலி வெற்றிகொள்ள மனமொருப்படுவர் ? பாடுதற் கமைந்த தெய்வ சரிதத்தின் பெருமையை நன்குணர்ந்தார் யார்தாம் அச் சரிதத்திற்குத் தமது கவித்வ சக்தி போதியதாகு மென இறுமாந்திருப்பர்? இவ்வகைத் தளர்வு தோன்றி யிருத்தல் வேண்டும் என்பதற்கு,

நொய்தின் நொய்யசொல் நூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமரம் ஏழ்துளை
எய்த எய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே

என்னும் செய்யுள் சான்றாகும். இங்ஙனம் மனந் தளர்ந்த காலங்களிற் சடையப்ப வள்ளலாரே நமது கவிஞர்க்கு ஊன்றுகோலா யுதவினர். தம் உயிர் நண்பரது கவித்வ சக்தியின் பெருமையைப் பலவாறாக அறிந்த சடையப்பர் அவரை அடிக்கடி யூக்கி மனத் தளர்வகற்றி இராம சரித்திரம் பாடுஞ் செயலினை மேற்கொள்ளச் செய்திருத்தல் வேண்டும். இதனை யடிப்படையாகக்கொண்டே இராமகாதை சடையப்ப வள்ளல் தூண்டலாற் பாடப் பெற்ற தென்னும் பரம்பரை வரலாறு எழுந்ததெனக் கொள்ளலாம்.

தமது கவித்துவ சக்தியின் பெருமையினாலும் சடையப்பரது அன்பினாலும் கம்பர் பெருமானின் உள்ளத்தில் ஏகதேசமாய்த் தோன்றிய தளர்வு அறவே நீங்கியது. தோன்றாத் துணையாய் நின்று உலகனைத்தையும் இயங்கச் செய்யும் இறைவனது திருவருளால் நமது கவிஞர் பெருந்தகையின் சிந்தை செயலாகப் பரிணமித்தது. இராமாயண - கானம் இனி தெழுந்து சப்திக்கத் தொடங்கிற்று. பாரத மாதாவின் தவமுற்றி அவளது உயிராசை நிரம்புவ தாயிற்று. அவள் மனத்திற்குகந்த புருஷோத்தமன் என்றும் அழியாத வாசாரூபத்தில் தோன்றுவானாயி னான். இராமாவதாரப் பேரிதிஹாஸம் உருப்பெற லாயிற்று. பல நூற்றாண்டுகட்கு முன்னர் நிகழ்ந்த இவ் அரிய சம்பவம் இப்பொழுதும் நம்மால் அன் போடும் மகிழ்ச்சியோடும் நினைந்து இன்புறத் தக்கதா யுள்ளது. கம்பர் பெருமானோடு உடனுண்டுறைந்து

அவரைத் தம் உயிரினும் மேலாகப் பாதுகாத்து வந்த சடையப்ப வள்ளலார் எத்துணை அன்போடு இப்பெரு நிகழ்ச்சியைப் போற்றி யிருத்தல் வேண்டுமென அறிதல் கூடுமோ? அவரது அன்பின் திறம் யாவரால் உணரத் தக்கது? "அன்பென்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்த தன்றால்" என்று கம்பர் தாமே அருளிச் செய்தது தமது ஆருயிர் நண்பராகிய வள்ளலது பேரன்பினைத் தம் மனத்தகத்துக் கொண்டே போலும்! சடையப்ப வள்ளல் தம ஊர்ப் புறத்துள்ள ஓர் அழகிய பூஞ்சோலையிலே அவரது அன்பே வடிவெடுத்தாற் போன்ற பெருமை வாய்ந்த மணி மண்டப மொன்று வனப்புத் தோன்ற அமைத்தன ரென்று நாம் கருதல் வேண்டும். அப் பூஞ்சோலை யிலே பிரகிருதி தேவி நிசப்தமாய் அமைதியுற்று விளங்குகின்றாள். மணிமண்டபத்தினுள்ளே கம்பர் பெருமான் அறிவும் அன்பும் அரிய கவித்வசக்தியும் தமது திருமுக மண்டலத்தே ஒளி சிறந்து தோன்ற நடுவே வீற்றிருந்தருளுகின்றார். சிறிது தூரத்தே விரைந்தேற்குஞ் செவியும் சோர்வறியாத ஞாபகமு முடைய தமிழறிஞர் மிகப் பலர் ஏடும் எழுத்தாணி யும் கொண்டு கவிஞரைச் சூழ்ந்திருக்கின்றனர். வாயிற்படியினருகே நமது சடையப்பவள்ளலார் ஓர் ஆசனத்தின் மீதாக அமர்ந்தருளியிருந்து எவ்வகை யிடையூறும் எய்தா வண்ணம் கவலையோடு நோக்கி அன்பு பூண்டு விளங்குகின்றார். பூஞ்சோலையிலே அந்நியரது வரவினைத் தவிர்க்கும்பொருட்டுக் காவலா ளர்கள் நிற்கின்றனர். தமிழார்வம் தாங்கலாற்றாத தமிழ்ச் செல்வர் சிலர் தமது ஆசை யிழுத்துச் செல் லுதலால் அறிமுகமுள்ள காவலாளரைக் கடந்து சென்று மணிமண்டபத் தருகில் வந்து இராமசரித மாகிய கீதவமுதைச் செவிமடுத்தற்கு ஒற்றியிருந்

தனர். 'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' என்னும் பொருள் நிரம்பிய மதுரத் திருவாக்கு நமது கவிஞர் பெருந்தகையின் இதயத்தினின்றும் பொங்கி யெழுந்தது. மணிமண்டப முழுவதும் நிறைந்து பூஞ்சோலையிற் பரந்துலவி மக்களிதயத்தே குடிகொண்டு நின்றது இத் தெய்வத் திருவாக்கு. ஏடெழுதும் ஒலி கேட்கலாயிற்று. கம்பர் பெருமானது திருவுள்ளம் இராமாயண - கீதமாகக் கரைந்து பெருகி ஏட்டிற் பிரவஹித்துப் பாய்குவதாயிற்று.

இங்ஙனம் தொடங்கிய இராமாவதாரம் முற்றுப் பெறுதற்கு ஆண்டுகள் பலப்பல சென்றிருத்தல் வேண்டும். சிறந்த ஆங்கில கவிஞரும் நுண்ணிய ஆராய்ச்சியாளரு மாகிய கோலரிட்ஜ் என்பவர், பத்து வருஷ காலம் இதிஹாஸத்தின் பொருள்களைக் குறித்துக் கவிஞர் சிந்தனை செய்வதற்கும், பத்து வருஷ காலம் அதனை அவர் எழுதி முடித்தற்கும் ஆக, இருபதுவருஷ காலமேனும் ஓர் இதிஹாஸம் பாடி முடித்தற்கு வேண்டப்படும் என்று ஒருவகையாற் கணக்கிடுவித்தனர். ஆனால், இங்ஙனம் கணக்கிடும் போது கம்பரது இராமாவதாரம் போன்ற பேரிதிகாஸத்தினை அவர் கனவிலும் நினைத்திரார் என்பது திண்ணம். மில்டன் எழுதிய 'சுவர்க்க நீக்கம்' என்று பொருள்படும் ஆங்கில இதிஹாஸத்தினையும், ஹோமர், வர்ஜில் முதலானோரது இதிஹாஸங்களையும் மனத்திற்கொண்டே மேற்கூறிய காலவரையறை செய்திருத்தல் கூடும். சுவர்க்க நீக்கத்தினைக் காட்டினும் இராமாவதாரம் நான்குமடங்கு பெரிது. அதனை யெழுதி முடித்தற்கு 40 வருஷங்களேனும் முன் குறித்த கணக்கின்படி வேண்டுமெனக் கருதலாம். இங்கே ஒரு விஷயம் மனங் கொள்ளுதற்கு உரியது. மேல்நாட்டுக் கவிஞர்கள் கவிதை யெழுதும் முறை

வேறு ; நமது நாட்டுக் கவிஞர்கள் கவிதையெழுதும் முறை வேறு மேல் நாட்டுக் கவிஞர்கள் தமது மனத்தின்கண் கவிதை தோன்றியவுடனே அதனைத் தாமே எழுதிக் கொள்ளுதல் பெருவழக்காகும். இதனால் கவிதைப் பிரவாஹமானது இடையீடின்றிச் செல்வதற்குச் சிறிது முட்டுப்பாடு உளதாகின்றது. கவித்துவ - ஆவேசம் நிலைநின்று விளங்குவதற்கும் சிறிது தடை ஏற்படுதல் கூடும். நமது நாட்டுப் பெருங்கவிஞர்கள் கவிதைகள் தோன்றத்தோன்றச் சொல்லி வருதலும், அவர்களது மாணாக்கர்களும் பிற தமிழறிஞர்களும் உடனிருந்து அவற்றை ஏட்டில் எழுதிக் கொள்ளுதலுமே பெருவழக்காக ஏற்பட்டுள்ளது. கவிதைகள் எத்துணை விரைந்து பெருகி வரினும் ஏடெழுதுவோர் அவற்றை வரன்முறையே சிலசிலவாகப் பங்கிட்டுத் தமது திண்ணிய ஞாபக சக்தியால் தவறின்றி விரைந்து எழுதி வந்தனர். அன்றியும், விருத்தம் முதலிய தமிழ்க் கவிதை இசையோடு கலந்தன்றித் தோன்றுதலில்லை. இவ் இன்னிசை சற்றும் இடையீடின்றிச் செய்யுட்கள் விரைந்து வருவதற்குப் பெரிதும் அனுகூலம் செய்கின்றது. இங்கே கூறிய இரண்டு காரணங்களாலும் கோலரிட்ஜ் கணக்கிட்ட முறை நமது பாரத நாட்டிற்குப் பொருந்துமாறில்லை. இராமாவதாரம் பாடி முடித்தற்கு இத்தனை வருஷங்கள் ஆகியிருத்தல் வேண்டுமென நிச்சயமாய் வரையறுத்துக் கூறுதல் ஏலாது. எனினும், ஒன்று மாத்திரம் ஐயமின்றிக் கொள்ளுதல் தகும். அறிவு, அனுபவம், கல்வி, கவித்துவம் ஆகிய இவையனைத்தும் முதிர்ந்து விளங்கிய தமது வாழ்வின் உச்சகாலத்தை இராமாவதாரத்திற்கெனக் கம்பர் அர்ப்பணஞ் செய்துவிட்டன ரென்பதே உண்மையாகும். தினம் ஒன்றுக்கு 700 செய்யுட்

கள் வீதம் இரண்டு வாரத்திற்குள் இராமாயணம் பாடி முடிந்ததெனவும், இத் தினங்களிலே இரவுகள் யாவும் வான்மீகி-ராமாயணம் பொருள் கேட்டலிலே கழிந்தன வெனவும் சிலர் கூறுவர். இதனை,

... ... ... ...
அபிநவ கவிநாதன்
விழுந்த நாயிற தெழுவதன்
முன்மறை வேதியருட னாய்ந்
தெழுந்த நாயிறு விழுவதன்
முன்கவி பாடின தெழுநூறே

என்ற செய்யுள் ஆதரிப்பதாம் என்றுங் காட்டுவர். இவ் வரலாறு முற்றிலும் அசம்பாவிதமா யுள்ளது. உணவருந்துதல் முதலிய அவசிய கர்மங்களால் இடையீடுபடாது இராமாவதாரம் பாடப் பெற்றதென்க் கொள்ளினும் நிமிஷம் ஒன்றிற்குச் செய்யுளொன்று வீதம் பாடப் பெற்றதாகல் வேண்டும்; அன்றியும் மேற்காட்டிய செய்யுள் ஏட்டுப் பிரதிகள் பலவற்றிற் காணப்படவில்லை. பிற்காலத்தே கதை பெருக்குவோர்களால் இது பாடப்பெற்றதாகல் வேண்டுமெனக் கருதுதல் தகும். மேலும் நூலினகத்து ஆழ்ந்து கிடக்கும் சில சான்றுகளும் இவ்வரலாற்றினை அநாதரிக்கின்றன. கடைசியாக, இராமாயணம் போன்ற பெருங்காவியம் பிறக்கும் கவித்துவ தத்துவத்திற்கு இவ்வரலாறு முற்றிலும் மாறாக உள்ளது. இக்காரணங்களால் மேற்காட்டிய செய்யுள் சிறிதும் கொள்ளத் தக்கதன்று. ஆனால் இச் செய்யுள் குறிக்கும் வரலாறு மிகவும் அரியதோர் உண்மையினை அறிவுறுத்துகின்றது. கவித்து - ஆவேசம் நிரம்பி உணர்வு மயமாய்க் கம்பர் பெருமான்

விளங்கிய அமயங்களில் இராமாவதாரம் பாடப் பெற்றதாகும். அவ் அமயங்களில் கவிதைப் பிரவாஹம் சிறிதும் இடையீடின்றிப் பெருகிப் பாய்ந்து, கம்பீரமா யோடும் பெருநதி போன்று, விரைந்து சென்றது. இதனை யுணர்த்தும் அந்துணையே மேலைச் செய்யுள் உண்மையுடைய தாகும்.

ஆண்டுகள் ஒருசில சென்றன. இராமகாதை முற்றுப் பெற்றது. சம்பூர்ண - இராமபிரான் வாசா ரூபமாகத் தமிழ்நாட்டில் திருவவதரித்துப் பாரத மாதாவின் திருவுளத்தை மகிழ்வித்தனன். கம்பர் பெருமான் தமிழுலகிலே தோன்றியதன் பயன் இனிது முற்றியது. அவரது ஆன்மா இராம சரிதை - வடிவமாய் உருவெடுத்து விளங்கியது. தமது இராம காதையினைத் தமிழ் மக்கட்குப் பொது உடைமை யாகவும் குலதனமாகவும் அரங்கேற்றி ஈந்தருளுவ தொன்றே அவராற் செயற்பாலதாய் எஞ்சி நின்றது.

புண்ணிய தினமொன்று தெரிந்து கொள்ளப் பட்டது. கம்பரது இதிஹாஸத்தில் நாயக நாயகி களுக்குத் திருமணப் பெருவிழா நிகழ்ந்ததாகக் கூறும் பங்குனி யுத்தரத்தின் மறுதினமாகிய பங்குனி யத்த நாளே மிக்க பொருத்த முடைய சுபதினமாகக் கரு தப்பட்டது. ஸ்ரீரங்க நாதரது திருச் சந்நிதியே[1] அரங்கேற்றுதற் குரிய இடமா யமைந்தது. சடை யப்ப வள்ளலாரால் அழைக்கப் பெற்ற தமிழ் நாட் டுப் புலவர் சிகாமணிகளும், பிரபு சிகாமணிகளும் அரங்கேற்று மண்டபத்தில் வரன் முறையே வீற்

[1] திருவரங்கத்திலே கம்பர் தமது காவியத்தை அரங் கேற்றியதாகக் கூறுவர். அரங்கநாதன் சந்நிதி வெண்ணெய் நல்லூரி லுள்ளதென்று கொள்ளும்படி 'எண்ணிய சகாத்தம்' என்னும் செய்யுள் அமைந்திருக்கின்றது.

றிருந்தனர். பக்தர் குழாங்கள், பள்ளத்துப் பாயும் நன்னீர் போல, நாலுதிசைகளினின்றும் வந்து சூழ்ந் தனர். பண்டிதர்களும் பாமரர்களும் இடம் பெறாது மிடைந்து நெருங்கினர். மண்டபத்தின் அகத்தும் புறத்தும் புடைசுற்றித் தமிழ நன்மக்கள் திரண்டு கூடினர். அதன் நடுவே சிறிது உயரிய பீடத்தின் மீது நம் கம்பர் பெருமான் எழுந்தருளி யிருந்தனர்.[2] அவரது திருமுகத்தே பேரறிவும் ஆழ்ந்த சாந்தியும் பெருங் கவித்வ-சக்தியும் நர்த்தனம் புரிகின்றன; அவரது நயனங்கள் ஆழ்ந்தகன்று உள்ள மனைத் தையும் ஒருங்கு தோற்றி விளங்குகின்றன; நோக்கு வோரை யெல்லாம் வசீகரித் தமைகின்றன; அன்பு அலையெறிந்து படர்கின்றது. அறிவு கூர்த்து விளங்கு வதனை யொப்ப அவரது நாசியும் நீண்டு கூர்ந்திருக் கின்றது. அவரது உதடுகள் இளநகை யரும்பி விகசிக் கின்றன. அகன்ற மார்பும் திரண்ட புயமும் பேரழகு பயக்கின்றன. அவரது தடக்கைகள் தாள்களைத் தொட்டு நீண்டிருக்கின்றன. அவரது திருமேனி முழுவதும் தெய்வவொளி பரந்து சுடர்கின்றது. இப் புலவர் பெருமானை யடுத்து யாரினுமினிய பேரன்பின ராகிய சடையப்பவள்ளல் வீற்றிருக்கின்றனர்; கருணை யின் நிலயம்; கவிஞரின் புகலிடம். தமிழ் நாட்டுப் புலவர்கள் பலகாலமாக ஈட்டி வந்த புண்ணியம் அனைத்தும் ஒருங்கு திரண்டு வடிவெடுத்து வந்தாற் போன்று அமைந்திருக்கின்றனர். அகக்கண் கொண்டு நுனித்து நோக்குவோமாயின் வேறு சில அற்புதக்

---

[2] திருவரங்கத்திலுள்ள கற்சிலை யொன்று கம்பர் பெரு மானது திருவுருவமாகச் சிலராற் கருதப்படுகின்றது. இங்ஙனம் கருதுதற்கு ஆதாரம் யாதுமில்லை. இக் கற்சிலை கம்பர் திருவுரு அன்றென்பதே உறுதி.

காட்சிகளும் காணலாகும். தெய்வ கணங்கள் களி சிறந்து குலவுகின்றன. பாரததேவி எல்லையற்ற சாந்தியுடனும் எல்லையற்ற ஆனந்தத்துடனும் விளங்குகின்றாள். அவளது திருமுக மண்டலத்தைச் சுற்றியிலகும் சோபா வலயத்தினூடே உளத்தினின்றும் பொங்கிவரும் களிப்பின் சிற்றருவி மெல்லெனவீழ்ந்து ஒழுகுகின்றது. இத் தேவியை யடுத்துத் தமிழன்னை அழகு சிறந்து ஒளிர்கின்றாள். அவளது திருமுடி மீது நூதனமா யமைக்கப் பெற்றதும் விலையற்ற இரத்தினங்களால் இழைக்கப் பெற்றதுமான கிரீடமொன்று குளிர்ந்த ஒளிபரப்பி நிலவுகின்றது. அவளது செந்தாமரைக் கண்கள் கருணை நில வெறித்து மிளிர்கின்றன; திருமேனி முழுதும் அன்பின் செழுமையால் பொடித்துத் துடிக்கின்றது. ரிஷிகணங்கள் ஒருபால் குழுமி யிருந்தனர். அவருள்ளே வான்மீகியும் வள்ளுவரும் தலைமை தோன்ற விளங்குகின்றனர். ஆதிகவியாகிய மஹரிஷியின் சிரத்தின்மீது சடைமாமகுடம் இலங்குகின்றது. இராம கதாம்ருதத்தை உலகிற் கருளிய அவரது தெய்வத் திருவதரத்தின் கீழாக முதுமையாற் பஞ்செனவெளுத்துத் தோன்றும் தாடி நீண்டு அடர்ந்து பொலிகின்றது. அவரது ஆழ்ந்து தெளிந்த கண்களிலே கவித்வ வொளி இன்னும் நிரம்பிப் பிரகாசிக்கின்றது. மழித்த சிரமுடையவராய்ச் சாந்த மூர்த்தியாய் அமர்ந்திருக்கின்றனர் வள்ளுவப் பெருந்தகையார். பேரறிவும் பேரருளும் அவர் கண்களிற் கனிந்து இலங்குகின்றன. தமிழ்த் தாய் வயிற்றில் தம்மோடு உடன் பிறந்த கவிஞர் பெருந்தகையார்மீது அவரது அளவு கடந்த காதல் படர்ந்து செல்கின்றது. அவரது துரிசிலாத் திருமனத்தே இன்று சிறிது கர்வம் இடம் பெற்றிருப்பது போலத் தோன்றுகிறது.

அரங்க நாதன் சந்நிதியில் இத்துணையளவாகச் சிறந்த திருக்கூட்டம் என்றும் இருந்ததே யில்லை யெனலாம். யாண்டும் கண்கள்! யாண்டும் செவிகள்! அனைவரும் ஏகாக்ர சித்தராய்க் கம்பர் பெருமானை நோக்கிய வண்ணமாயிருக்கின்றனர். "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே யாக" என்ற அருமைத் திருவாக்கு எத்துணை யுண்மை யுடையதென இன்று ஒருவாறு அறியலாகும். குறித்த அமையம் நெருங்கிற்று. உலக மனைத்தையும் ஆக்கி யளித்துத் துடைத்தலையே தனது திருவிளையாட்டாகவுடைய பரம்பொருளை நெஞ்சுற வழுத்திக் கம்பர்பெருமான் தமது இதிஹாஸ கீதத்தைப் பாடி அரங்கேற்றலாயினர். உள்ளத்தை யுருக்கி யுருவஞ் செய்ததுபோலத் தோன்றிய கவிஞர் பெருந்தகையின் கம்பீரத்தொனி மண்டப முழுதும் பரந்து சென்றது; கேட்டோர் இதயத்தினின்றும் எதிரொலி கிளர்ந்தது. இராமாயணமாகிய அமுத கீதத்திலே ஆண்டிருந்தோர் தம் மனங்கள் லயித்து மயங்கின.

வயிரியர் மதுர கீதம் மங்கையர் அமுத கீதம்
செயிரறு மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்
பயிர்கிளை வேயின் கீதம் என்றிவை பருகி விண்ணோர்
உயிருடை யுடம்பு மெல்லாம் ஓவியம் ஒப்ப நின்றார்

என்று கூறியதனோ டொப்ப, அனைவரும் சித்திரப் பதுமைகள்போன்று யாதும் செய்கையற் றிருந்தனர். இராம சரிதம் படிப்படியாய் வளர்ந்தது. செஞ்சொற் கவியின்பம் இனைத்தென்பது இன்றுதான்

உணரப்படலாயிற்று. சில பொழுது அவையகத்தார் வியப்புமேலிட்டு மதி மருண்டு கிடப்பர்; சில பொழுது உவகை மேலிட்டு ஆநந்த வாரியில் திளைத்திருப்பர்; சில சமயம் சோகத்தால் தம் உளங்கலங்கி நைந்து வருந்துவர்; சில சமயம் பக்தியால் உளங் கனிந்து உருகுவர்; ஒருகால் நகைச்சுவை மீதூர்ந்து மெய் குலுங்கச் சிரிப்பர்; ஒருகால் அச்சம் மிகக்கொண்டு வெருண்டு நடுநடுங்குவர்; ஒருசமயம் வீரம் மிக மேலிட்டுப் புயம் பூரித்து ஏற்றெழுவர். 'அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்ற வல்லார்?'

பூவுலகத்திலும் வானுலகத்திலும், நாட்டிலும் காட்டிலும், நதிக்கரையிலும் கடற் கரையிலும், யுத்தகளத்திலும் ஆகாயவீதியிலும் நிகழ்ந்த பெருஞ் சம்பவங்களெல்லாம் திருவரங்கரது சந்நிதியிலே நடித்துக் காட்டப் பெற்றன. அயோத்தி நீங்கிய அரசர் பெருந்தகையும் புஷ்பக விமானமீது ஏறிச் சீதாலக்ஷ்மண சமேதராய் வானர பரிவாரங்களுடன் திரும்பத் தனது நகர மடைந்து,

தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் [ளை
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரா

வாழ்வித் தருளினன். கைகேசியின் சூழ்வினையால் தடையெய்தி, சீதாபஹரணம் என்னும் சோக சம்பவத்தால் இடையீடுபட்ட பட்டாபிஷேக மஹோத்ஸவம் விமரிசையாய் நிகழ்கின்றது.

அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி பற்ற

விரிகட லுலகம் ஏத்தும்
வெண்ணெய்மன் சடையன் வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி

என்ற சிறப்புமிக்க செய்யுளைக் கம்பர் பெருமான் பாடினர். பாடிய அளவிலே அவைக்களிருந்தோர் அனைவரும் சடையப்ப வள்ளலாரை நோக்கி அவரது பெருமையையே உள்ளத்தில் எண்ணினார்கள். வள்ளலாரோ தலைவணங்கி யிருந்தனர்.

இராமாவதாரம் அரங்கேற்றி முடிந்தது. கவிதை வெள்ளத்தின் பெருஞ்சுழியில் அகப்பட்டுத் தம்மை யிழந்து நிற்பாரையன்றிப் பிறரைக் காணுதல் அரிதாயிற்று. திடீரென ஓர் அரவம் அங்கு உண்டாயிற்று. வான்மீகி - மஹரிஷி புனைந்த சடைமுடி துளக்கிப் புலவரேற்றினை முகம்பார்த்து மெல்ல நடப்பாராயினர். அவரைத் தொடர்ந்து வள்ளுவப் பெருந்தகை, தமிழ்வேதம் எழுதி யருளிய அருமைத் திருக்கரத்தில் பொன்கொண் டிழைத்து மணியைக்கொடு புனைந்த மகுடமொன்று தாங்கிப் பின் சென்றனர். இருவரும் தம்மை யடுத்து வந்ததும், கம்பர் பெருமான் எழுந்து தலைவணங்கி நின்றனர். அப்பொழுது தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியுடைய வான்மீகி மஹரிஷி தந்தையினுங் களிகூரத் தழுவி நின்று, "நீரே கவிச் சக்கரவர்த்தி; எனது அன்பிற்குரிய ஞான புத்திரரை இன்றுதான் காணப் பெற்றேன்" என்று கூறி வள்ளுவப் பெருந்தகையார் தாங்கிச்சென்ற மகுடத்தை வாங்கிக் கம்பர் பெருமானது முடிமீது புனைந்தருளினர். தமிழ்ப் புலமைத் தெய்வமாகிய வள்ளுவர் அன்பூற்றெடுக்குந் திரு

நயனங்களாற் கனிந்து நோக்கி முடிபுனைந்த சிரமீது தமது திருக்கைகளை அமர்த்தி ஆசீர்வதித் தருளினர்.

இன்று பங்குனி அத்த* நன்னாள். இந்தச் சுப தினத் தன்று இற்றைக்குச் சுமார் 740 ஆண்டு கட்கு முன்னர் மேல்விவரித்தவாறு கம்பர் பெருமா னது இராமாவதாரம் அரங்கேறுதலாயிற்று. இந் நாள் தான் நமது தமிழ்த்தெய்வம் மணிமா மகுடம் புனைந்து கொண்ட பெருநாள். பாரததேவி பன் னெடுங் காலமாக முயன்று வந்த தவம் பயனிரம்பி முற்றியதும் இந்நாளே. இத்தகைய மங்களத் திரு நாளைத் தமிழ் மக்களாகிய நாம் அனைவரும் இன்று போல் என்றும் போற்றிப் பாராட்டுவோமாக!

எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின்மேற்
சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே
கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி
யத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங்
கேற்றி னானே.

---

* பங்குனி யத்த நாளில் (29 - 3 - 26) சேதுஸம்ஸ்தான மஹாவித்துவான் ஸ்ரீ ரா. இராகவையங்காரவர்களது முன்னிலை யில், திருநெல்வேலித் தமிழ் - இலக்கிய சங்கத்தினர் நடத்திய கம்பர் திருவிழாவில் வாசிப்பதற்கு இப் பாவனைக் கட்டுரை எழுதப் பெற்றது.

## புகழேந்தியார்

ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் புகழேந்தி என்ற புலவர் ஒருவர் இருந்தார். அவர் வெண்பா என்று சொல்லப்படும் ஒரு வகைச் செய்யுள் செய்வதில் ஒப்பற்றவர் என்று புகழ் பெற்றவர். இப்புகழுக்குக் காரணம் என்னவென்றால் 'நளவெண்பா' என்ற ஒரு சிறு நூலை வெண்பாவினாலே அவர் இயற்றியதுதான்.

நளவெண்பா என்ற நூல் நள மகாராஜனுடைய சரித்திரத்தைக் கூறுவது. இந்தச் சரித்திரம் முதன் முதலில் மகாபாரதத்தில் கூறப்பட்டது. பாண்டவர்கள் வனவாசம் செய்யும் பொழுது, அருச்சுனன் பாசுபதம் பெறுவதற்குத் தவம்புரியச் சென்றனன். தருமபுத்திரர் சூது விளையாட்டினால் தாங்கள் துன்பப்படுவதை எண்ணி எண்ணி வருந்தியிருந்தனர். அப்பொழுது பிருகதசுவர் என்ற முனிவர் அங்கே வர, "என்னைப்போலச் சூது விளையாட்டினாலே காட்டில் வருந்தி வாழ்ந்தவர்கள் உண்டோ?" என்று கேட்டார். முனிவரும் நளனுடைய சரித்திரத்தை எடுத்துக் கூறினார். இந்த நள சரித்திரத்தையே அமைத்துப் புகழேந்தி நளவெண்பா இயற்றி இருக்கிறார். இந்நூல் எளிய இனிய நடையில் அமைந்துள்ளது. ஆடம்பரமும், சொற்களின் அலங்காரங்களும் பெரும்பாலும் இதிலில்லை. இக் காரணத்தால் இந்த நூல் தமிழ் மக்களால் மிகவும் போற்றப்பட்டு வருகிறது.

இதனை இயற்றிய புகழேந்தியைப் பற்றிப் பல கதைகள் தோன்றியிருக்கின்றன. பாண்டிய அரசன்

ஒருவனுடைய ஸம்ஸ்தானப் புலவராக இவர் விளங்கினராம். இவ் அரசன் தனது மகளைச் சோழ அரசனாகிய குலோத்துங்கனுக்கு மணம் புரிந்து கொடுத்தான். மணமகள் சோழ நாட்டிற்குச் செல்லும் பொழுது புகழேந்தியையும் உடன் அனுப்பினான். அக்காலத்தில் சோழ அரசனுடைய ஸம்ஸ்தானப் புலவராக விளங்கியவர் கவிச்சக்கரவர்த்தி என்று பட்டம்பெற்ற ஒட்டக்கூத்தர் ஆவர்.

ஒரு சமயம், பாண்டிநாடு மேம்பட்டதா அல்லது சோழநாடு மேம்பட்டதா என்ற கேள்வி எழுந்தது. ஒட்டக்கூத்தர் சோணாடே சிறந்ததென்று ஒரு செய்யுளைச் சொல்லினர். புகழேந்தி பாண்டிநாடே சிறந்ததென்று ஓர் அழகிய கவியைச் சொல்லினர். பின் ஒருமுறை, சோழ அரசனுடைய தேவி ஏதோ ஒரு சிறு காரணத்தை முன்னிட்டுத் தன் நாயகனைப் பார்ப்பதற்கே மறுத்துவிட்டாள். ஒட்டக்கூத்தர் தேவியிடம் சென்று சமாதானப் படுத்த முயன்றார்; பயன் பெறவில்லை. பின்னால் அரசன் புகழேந்தியை அனுப்பினான். இவர் சென்று சமாதானம் பண்ணுவித்தார். இவைபோன்ற பல காரணங்களால் புகழேந்தி மீது ஒட்டக்கூத்தர் பொறாமை கொண்டார். அரசனிடம் புகழேந்தியாரைக் குறித்துப் பலவாறு கோள்சொல்லிஅவரைச் சிறையிலிடும்படியாகஒட்டக்கூத்தர் செய்துவிட்டார். புகழேந்திக்கு இது மிகவும் துன்பத்தை உண்டுபண்ணிற்று.

ஒட்டக்கூத்தர் மிக்க வித்யா கர்வமுள்ளவர். செந்தமிழ்ப் புலமையில் தமக்கு ஒப்பாவார் ஒருவரும் இல்லையென்று பெருமிதங் கொண்டவர். இதனால் போலிப் புலவர்கள் என்று தாம் கருதியவர்களைக் கடினமாகத் தண்டித்து வந்தார்.

புகழேந்தி அடைபட்டிருந்த சிறையில் ஓர் அம்பட்டன், ஒரு குயவன், ஒரு கொல்லன், ஒரு வேளாளன், ஒரு தச்சன், ஒரு தட்டான் இந்த அறுவர்களும் போலிப் புலமைக்காக அவருடன் அடைக்கப்பட்டிருந்தார்கள். இவர்களுக்கு நல்ல தமிழ்க் கல்வியைப் புகழேந்தி கற்பித்து வந்தனர். கவிபாடும் வன்மையையும் பெற்று இவ்அறுவரும் சிறந்த புலவர்கள் ஆகிவிட்டனர். ஒருநாள் ஒட்டக்கூத்தர் தமது முன்னிலையில் இவர்களை வரவழைத்துப் புலமையைப் பரீட்சை செய்தபொழுது, இவர்கள் தங்கள் கவி சாதுரியத்தினால் அக் கவிச்சக்கிரவர்த்தியைத் தலை குனியும்படியாகச் செய்துவிட்டார்களாம்.

இக்கதைகளெல்லாம் பிற்காலத்தில் தோன்றியவை. புகழேந்தியின் எளிய நடை தமிழ் மக்கள் இதயத்தைப் பிணித்து விட்டது என்ற ஒரு விஷயத்தைத் தான் இவை புலப்படுத்துபவை. இவற்றுக்குச் சிறிதேனும் ஆதாரமில்லை; ஏனென்றால் அவர் இருந்த காலம் ஒட்டக்கூத்தருக்குச் சுமார் நூறு ஆண்டுகட்குப் பிற்பட்டது. அவரை ஆதரித்த அரசன் மள்ளுவ நாட்டிலே முரணை என்ற நகரில் அரசு புரிந்து வந்த சந்திரன் சுவர்க்கி என்பவன். அவருடைய ஊர் தொண்டை நாட்டிலுள்ள களந்தை என்பதாகும். அவர் தாங்கிய பெயர் இயற்பெயரா அல்லது புனைபெயரா என்பதும் தெரியவில்லை. ஆனால் 12-ஆம் நூற்றாண்டளவில் அப்பெயர் வழக்கிலிருந்தது என்பது வீரசோழியத்தின் உரையால் உறுதியாய்த் தெரிகிறது.

சிறைச்சாலையிலிருக்கும்போதே மகளிரும் கேட்டு இன்புறும்படி வசனம் போன்ற செய்யுள் நடையில் அல்லியரசாணி மாலை, பவளக்கொடி மாலை, புலந்திரன் தூது, ஏணியேற்றம், பஞ்ச பாண்டவர் வன

வாசம் முதலிய சிறுநூல்களைப் புகழேந்தி இயற்றி ஞர் என்று இன்னுமொரு கதையும் வழங்குகிறது. இவருக்கு வெகுகாலத்திற்குப் பின் செஞ்சியில் அரசாண்ட தேசிங்குராஜனைப்பற்றிய கதையும் இப்புலவரால் பாடப்பெற்றதென்று அச்சிடப்பட்டு வழங்குகிறது! இவற்றை யெல்லாம் இயற்றியவர்கள் உண்மையில் யார் என்பதை ஆராய்ந்து தெரிய முடியாது; ஆனால் இவைகள் புகழேந்தி செய்தவை அல்ல. எளிய முறையில், செம்பாகமான நடையில், நாடோடித் தமிழில் கதைகளைச் சொல்லக்கூடும் வல்லமை புகழேந்திக்கு இருந்ததால் அவர் இச் சிறுநூல்களை யெல்லாம் இயற்றினுர் என்ற நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. இதுவே அவருடைய புகழை நிலைத்து நிற்கச் செய்துள்ளது.

# பவணந்தி முனிவர்

பவணந்தி முனிவர் இன்னார் என்று தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் அவசியம் இல்லை. பள்ளி மாணவர்கள் அனைவரும் அவரது நன்னூலைக் கற்றவர்களே. தமிழ் கற்ற அறிஞர்கள் அனைவரும் தமிழ் மொழியின் நுட்பங்கள் அனைத்தையும் தெளிதற் பொருட்டு அவரது சிறந்த இலக்கண நூலை ஓதியுணர்ந்தவர்களே. முனிவர் இயற்றிய நூலின் பெருமை இன்றும் சிறந்து விளங்குகிறது; என்றும் அங்ஙனம் விளங்குமென்றே தோன்றுகிறது. 'இலக்கணப் பிசாசுகள்' மட்டும் கற்கும் நூல் என்று இதனைக் கொள்ளுதல் கூடாது. தமது தாய் - மொழியாகிய தமிழை அறிந்துகொள்ள விரும்பும் ஒவ்வொருவரும் இதனைக் கற்று வருகிறார்கள். கற்க வேண்டுவதும் அவசியமே.

பண்டைக் காலத் தமிழின் இயல்பை உணர்த்துவது தொல்காப்பியம் என்ற பேரிலக்கணம். இடைக் காலத் தமிழின் இயல்பை உணர்த்துவது பவணந்தியார் இயற்றிய நன்னூல். இவ் இயல்பு பெரும்பாலும் தற்காலத் தமிழுக்கும் ஒத்ததாகவே உள்ளது. ஆதலால் பவணந்தியார் தமிழ் வளர்ச்சிச் சரித்திரத்தில் ஒரு முக்கியமான எல்லையிடத்திலே நின்று தமிழ்மொழியை நன்கு ஆராய்ந்து அதன் இயல்புகளை வரையறுத்திருக்கின்றனர். இவ் எல்லையைக் கால முறையிற் கணக்கிட்டு நாம் அறிய வேண்டுவது மிக அவசியமாகும். நன்னூலின் பாயிரத்திலே,

இகலற நூறி யிருநில முழுவதும்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறும் நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீயகங்கன்
அருங்கலை விநோதன் அமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னும் நாமத் திருந்தவத் தோனே

என்று கூறப்பட்டுள்ளது. இதனால் பவணந்தி முனிவரை நன்னூல் இயற்றும்படி ஆணையிடுவித்தவன் சீயகங்கன் என்ற அரசன் என்பதும் இவனுக்கு அமராபரணன் என்ற சிறப்புப் பெயர் உண்டென்பதும் விளங்கும். இச்சீயகங்கன் மூன்றாம் குலோத்துங்கனது காலத்தவன் என்பது து. அ. கோபிநாத ராயரவர்களால் நன்கு எடுத்துக்காட்டப்பட்டது. டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களும் தமது மயிலைநாத ருரைப் பதிப்பில் இதனைக் குறித்திருக்கிறார்கள். எனவே, சீயகங்கன் கி. பி. 13-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவனாவன். நன்னூற் சிறப்புப் பாயிரத்தை நோக்கினால், இவனைச் சிற்றரசனென்று கொள்ள இடம் இல்லை. ஆனால் இவன் சிற்றரசனே என்பது 'ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு முப்பத்து நாலாவது அமரா பரண சீயகங்கன் நம்பிராட்டியான அரியபிள்ளை திருவல்லமுடைய நாயனாருக்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றும்.........' என வரும் சாஸனத்தால் அறியலாம். குலோத்துங்கனது ஆட்சியாண்டில் சீயகங்கனது தேவி சந்தி - விளக்கு வைத்தாள்

என்றலால், இது ஐயத்திற்கிடனின்றித் தெளிவாய் அறியக்கிடக்கிறது. டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களும் மூன்றும் குலோத்துங்கனுடைய ஆட்சிக்கு அடங்கியொழுகிய ஓர் அரசன் என இவனைக் குறித்துள்ளார்கள். குலோத்துங்கனது மகனாகிய மூன்றும் ராஜராஜனைச் சிறையிடுவித்த கோப்பெருஞ் சிங்கனுக்குக் கீழடங்கிய சிற்றரசனாகவும் இச்சீயகங்கன் வாழ்ந்தனன். இது சமீபத்தில் வெளி வந்துள்ள ஒரு சாஸனத்தால் (S. I. I. Vol. xii 202) புலனாகிறது.

இச் சாஸனம் வருமாறு :—

1 ஸ்வஸ்தி ஸ்ரீ சகலபுவநச் சக்கரவர்த்திகள் கோ[ப] பெருஞ்

2 சிங்கதேவர்[க்]கு யாண்டு [க]ளவது ஸ்ரீமற் குவளால புர பரமே

3 ஶ்வரன் கங்க குலோற்பவன் காவேரிவல்லவன் நந்தி

4 கி[ரி]நாத[ன்] சீயகங்க[ர்] [ஒ]லை மருதம்பா[க்]கத்து ஊரவர் க

5 ண்டு விடை தந்[த]தாவது தங்கள் ஊர் தேவதான திருவிடையாட்ட

6 ஸ்ரீ பண்டாரபாதிக்கு அந்தராயப பாதி உள்பட ஊரடங்(கி)ல் நன்சை புன்சை

7 கடமையும் ஸ்ரீ பண்டாரப் பாதி உள்பட வெட்டி தனியாள் சிறு பாடி

8 காவல் கண்காணி எடுத்துக் கொட்டி அரிமுக்கை கணக்[க] மிகுதி உள்

9 பட்ட பல நெல்லாயங்களும் வெட்டிப் புடவை முதற் தரங் காத்திகை கா

10 சு வகை நட[த்த]காசு முள்ள[டி] இனவரி வரி மீன் பாட்டம் ஆசுவிகள் பேர்க்[க]டமை

11 உள்ளிட்ட பலகாசு கடமையும் அச்சுத்தறி பறைத்தறி சாலியத்தறி உள்ளிட்ட த

12 றிக்க[ட]மை வெலிப்பயறு தரப்படி அ[ரி]சி தூ[ணி] நிலத்திறப்[பு]க் கடமை செக்கு கடமை

13 பேர்க்கடமை இருந்து பரிமாறுவார் பேர்க்கடமையும் செட்டிகள் வாணியர்

14 பேர்க்கடமையும் வால் மஞ்சாடிக் கடமையும் பா[லி]க் கப பாட்டமும் பழங் கு

15 டி நீ[க்]கி புதுக் குடியாய் ஏறிக் கொண்ட மன்றுடி கள் பேர்க்கடமையும் பொ

16 ன்வரி வேண்டுகோள் நல்லெருது [ந]ற்கிடா காணிக்கை காத்திகைப் பச்சை

17 பு[ட]வை மாடையும் ம[ற்]றும் நாம் கொ[ள்ளு]ம் எபபேற் ப[ட்]ட அனைத்து வரி

18 களும் உள்பட இவ்வூர் நாற்பாற் கெல்லைக்கும் உள் பட்ட மேல் நோக்கி[ய]

19 மரமும் கீழ் நோக்கிய கிணறும் உட்பட பதினேழா வது சித்திரைமாதம்

20 முதல் சோளேந்திர சிங்கமுடைய நாயனார்த் திரு நாளு[க்]கு வேண்டுவன

21 [வ]துக்கு வெட்டும் அமராபரணரான சீயகங்கன் விட்டேன்

இங்கே குறிக்கப்பட்ட அரசன் முதலாம் கோப் பெருஞ் சிங்கன் என்று சிலாசாஸனப் பரிசோதகர் கள் கூறுகிறார்கள். இவனது இறுதியாண்டு கி. பி.

1243. இவன் காலத்தும் சீயகங்கன் சிற்றரசனுய் அடங்கி வாழ்ந்தானுதலால், இச் சீயகங்கன் காலம் 13-ம் நூற்றுண்டின் முற்பகுதி (சுமார் கி பி. 1200-1250) என்று கொள்ளலாம். ஆகவே, இக் காலப் பகுதியில் பவணந்தி முனிவர் தமது நன்னூலை இயற்றினுர் என்று துணியலாம்.

இவரது ஊர் 'சனகை' என்று மேலைச் சிறப்புப் பாயிரம் அறிவிக்கின்றது. இவ்வூர் சனநாதபுரம் என்று மயிலைநாதர் தம் உரையில் விளக்குவதாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. சனநாதபுரம் சனகை என மருவிற்று என்று கொள்ளல் பொருத்தமின்று. பாடபேதமாகச் 'சனகாபுரம்' தரப்பட்டுள்ளது. இது 'சனகை' என மருவிற்று என்றல் பொருத்த முடையதாம். எனவே, உரையில் 'சனகாபுரம்' என்பதனை மேற்கொண்டு, 'சனநாதபுரம்' என்பதனைப் பாடபேதமாகக் கொள்ளுதல் வேண்டும்.

கங்கக் குருசி லுவக்கநன் னூலைக்
கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி
தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத
குருவிளங்கு
மங்குற் பொழிற்சன காபுரமுங் கொங்கு
மண்டலமே

என்ற கொங்குமண்டல சதகச் செய்யுளும் (47) எனது கருத்தை வற்புறுத்துகிறது.

# பரிமேலழகர்*

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் தமிழ் மக்களுக்கு என்றும் பெருமை அளித்துவரும் பெரு நூல். இந்த நூலைக் கற்றுணர்ந்த பிறநாட்டு அறிஞர்கள் பலர் இதன் அரிய கருத்துக்களைத் தங்கள் நாட்டினரும் கற்றுப் பயன் பெறவேண்டுமென்று விரும்பித் தங்கள் தங்கள் பாஷைகளில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். இந்நூல் தோன்றிய காலந் தொட்டுச் சுமார் 1500-ஆண்டுகளாக, இதன் புகழ் வளர்ந்துகொண்டேவருகிறது ; புகழ்களையெல்லாம் தொகுத்துத் திருவள்ளுவமாலை என்ற தனி நூலும் தோன்றியுள்ளது. திருக்குறளின் நயங்களைக் குறித்து எழுதாத தமிழறிஞர்கள் இல்லை ; பேச்சு நிகழாத பிரசங்கமேடைகளும் இல்லை. என்றாலும் இதன் பெருமையை ஆராய்ந்து உள்ளபடி உணர்ந்தவர் மிகச் சிலரே. இவருள் தலைசிறந்தவர் பரிமேலழகர்.

வள்ளுவரது குறட்பாக்கள் சுருங்கிய சொற்களுடையன ; எளிமையும் தெளிவும் உள்ளன. ஆனால் இந்நலங்களால் நாம் ஏமாந்துவிடக்கூடாது. சில மடுக்களில் அடிநிலத்தை யெட்டித் தொட்டுவிடலாம் படி நீர் தெளிந்துநிற்கும். இத் தோற்றத்தை நம்பி ஒருவன் காலை விடுவானானால், ஆழம் எய்க்கவொண்ணாததா யிருக்கும். இதனைப்போலவே வள்ளுவரது தெளிந்த எளிய தொடர்களிலே கருத்துக்கள் மிக ஆழ்ந்தனவாயிருக்கும். அவற்றை அறிந்து கொள்ளு

* 17—7—44-ல் சென்னை அகில இந்திய ரேடியோவில் ஒலிபரப்பியது. அநுமதியுடன் வெளியிடப்படுகிறது.

தல் எளிதன்று. கற்கக் கற்க, அவற்றின் ஆழம் மிக மிகப் புலப்பட்டுக்கொண்டே யிருக்கும்; அவற்றின் நயங்களும் மிகுந்து தோன்றிக்கொண்டே யிருக்கும்.

*நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு*

என்று வள்ளுவர் தாமே கூறியதற்கு அவருடைய பெருநூலே சிறந்த சான்று. பரிமேலழகர் இவ் அரிய தன்மையை முற்றும் நன்கு அறிந்திருந்தனர். எளிமையும் தெளிவும் அவரை ஏமாற்றிவிடவில்லை. தமது பரந்த கல்வி முழுமையும், நுண்ணிய அறிவு முழுமையும், அரிய மொழிவன்மை முழுமையும் வள்ளுவரின் ஆழ்ந்தகன்ற கருத்துக்களை நுட்பமாக உணர்தற்குப் பயன்படுத்தினர்.

*மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்*
*யாவுள முன்னிற் பவை?*

இயற்கையறிவும் கல்வி கேள்வியும் நிறைந்திருப்பவர்களுடைய ஆற்றலால் உணரப்படாமல் முன்னிற்பது யாதேனும் உளதா? இல்லை. இங்ஙனம் உணர்ந்து தெளிந்து, வள்ளுவரது கருத்துக்கள் அனைத்தையும் தமிழ்மக்களுக்கு ஓர் உரையெழுதி அறிவுறுத்தினர் பரிமேலழகர். உரையின் பெருஞ் சிறப்பை யுணர்ந்தே ஒரு புலவர்,

*பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள*
*நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ - நூலிற்*
*பரிந்தவுரை யெல்லாம் பரிமே லழகன்*
*தெரிந்தவுரை யாமோ தெளி*

என்ற செய்யுளைப் பாடினர்.

இச் சிறந்த உரையை எழுதியதோடு பரிமேலழகரது செயல் அமைந்துவிடவில்லை. திருவள்ளுவரது புகழை உண்மையாக வளர்த்த அருஞ்செயலும் இவர் பாற்பட்டதே. இவருக்கு முன்பு எத்தனையோ அறிஞர்கள் திருக்குறளுக்கு உரையெழுதி அந்நூலின் கருத்துக்களை விளக்க முயன்றனர். பரிமேலழகரை உள்ளிட்டுப் பத்து ஆசிரியர்களைக் கூறுவர் :

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி-திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர் நூற்கு
எல்லையுரை செய்தார் இவர்

இப்பத்து ஆசிரியர்களிலும் கடைசியில் தோன்றியவர் பரிமேலழகரென்றும் இவர்க்கு முன்புள்ளவர்கள் எழுதிய உரைகள் ஒன்பதும் இருந்தும் இல்லாதனபோலத்தான் என்றும் ஒரு பழஞ்செய்யுள் கூறுகிறது.

திறந்தெரிந் துரைத்த செவ்விமுப் பாலுக்கு
ஒருரை யின்றி ஒன்பது சென்றும்
ஐயுற வாக நையுறு காலை

(பெருந்தொகை, 1543)

என்பது அச்செய்யுட்பகுதி. இவ்வொன்பது உரைகளுள் மணக்குடவர் உரையொன்றே அச்சில் வந்துள்ளது. [1]காலிங்கர் உரையும் பரிப்பெருமாள் உரையும்

---

[1] இவ் இரண்டு உரைகளோடு காமத்துப்பால் திரு. வித்வான் T. P. பழனியப்ப பிள்ளையால் பதிப்பிக்கப்பெற்று, திருப்பதி கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத்தினரால் 1945-ல் வெளியிடப்பட்டுள்ளது. எஞ்சிய பால்களும் இவ்வுரைகளோடு வெளிவருந் தருவாயி லுள்ளன.

ஏட்டுப்பிரதிகளில் இன்றும் உள்ளன. இவ்வுரைகளை நோக்கியஅளவில், இவை பெரும்பாலும் நயமற்றன என்பதை மறுப்பதற்கு நியாயம் சிறிதும் இருப்பதாகத் தோன்றவில்லை. பரிமேலழகரொருவரது உரையொன்றே வள்ளுவர் நூலின் பெருமைக்குத் தக்கபடி அமைந்து அதன் புகழை வளர்க்கவல்லதா யுள்ளது.

இங்ஙனமாக, நமது திருக்குறளின் பெருமையை ஆராய்ந்து தெரிந்து அதன் கருத்துக்களை நுட்பமாக உணர்ந்து, அதற்கு ஓர் அரிய உரையியற்றி அதன் புகழை வளர்த்தவர் பரிமேலழகர் ஆவர். இவருடைய வரலாறு யாது?

இவரை ஒரு பழஞ்செய்யுள், 'கருத்தான் வகுத்தமைத்தான் கலைதேர் ஒக்கை காவலனே' (பெருந். 1547) என்று குறிப்பிடுகிறது. எனவே, ஒக்கூர் என்ற ஊரில் இவர் வாழ்ந்தவர் என்பது விளங்குகிறது. இந்த ஒக்கூர் பாண்டிநாட்டைச் சார்ந்ததென்பது, 'போற்று தமிழ்க் கூடற் பரிமேலழகியனென்பான்' (பெருந். 1548) என்ற வேறொரு பழஞ்செய்யுளால் புலனாகிறது. இந்த இரண்டுசெய்யுட்களின் ஆதாரமுங்கொண்டு இவர் ஒக்கூரிற் பிறந்து மதுரையில் வாழ்ந்தவர் என்று எண்ண இடமுள்ளது. இக் கருத்து ஒருபுற மிருக்க, இவரைக் காஞ்சிப் பதியில் வாழ்ந்தவரெனத் தொண்டைமண்டல சதகச் செய்யுளொன்று உறுதி கூறுகிறது. 'திருக்காஞ்சி வாழ் பரிமேலழகன் - வள்ளுவர் நூற்கு வழி காட்டினன் தொண்டை மண்டலமே' (41) என்பது அச்செய்யுட் பகுதி. கர்ணபரம்பரையும் இக்கொள்கையையே ஆதரிக்கிறது என்பர். உண்மை தெளியமுடியவில்லை. தொண்டைமண்டல சதகச் செய்யுள் அபிமானம் பற்றித் தோன்றியிருத்தல்கூடும். சோழநாட்டினரான சம்பந்தரைப்பற்றி இச் சதகத்திற் கூறப்பட்

டுள்ளதனை[1] நோக்குமிடத்து, இதில் வரும் சரித்திரச் செய்திகள் அனைத்தும் உண்மையெனக் கொள்ளு தற்கில்லை. இடைச்செருகல்களும் உளவாகலாம். மேலைக்கர்ணபரம்பரை, சதகச் செய்யுளை அடிப்படையாகக் கொண்டு, பிற்காலத்தார் கற்பித்துக்கொண்டதாகவும் இருக்கலாம். ஆதலால் வேறு தக்க சான்று கிடைக்கும்வரை பரிமேலழகர் பாண்டிநாட்டு ஒக்கூரினர் என்று கொள்ளுதலே பொருந்தும்.

பரிமேலழகர் என்ற பெயரினின்றும் இவரை வைஷ்ணவரெனநாம் எளிதில் தெரிந்துகொள்ளலாம். இதற்கேற்பத் ‘திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே’ (4, 4, 8 : இறைமாட்சி - அவதாரிகை) எனவும், ‘அற்றது பற்றெனில் உற்றது வீடு’ (1, 2, 5: குறள்-349 உரை) எனவும,

நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந்திரிய மெல்லாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா
ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு
அதுவே வீடு வீடாமே

(8, 8, 6)

எனவும் திருவாய்மொழியை மேற்கோள் (குறள் - 370 உரை) காட்டி யுள்ளார்.

---

[1] வீறார் நெருப்பிடை வீழ்த்தவும் பாடிமுன் வீழ்த்ததற்பின்
ஆறா நெருப்பினை யாறவும் பாடி அடியவரைச்
சீறாத தெய்வத் திருஞான சம்பந்தர் செய்ததமிழ்
மாறாது நிற்கப் படைத்ததென் பார்தொண்டை மண்டலமே. (38)

இவருடைய பெயர் 'பரிமேலழகரையன்' எனப் பிரதிகளிற் காணப்படுகிறது. இதனால் இவர் அந்தணராவர் என்று கொள்ளலாம். தமது உரையில் இவர் காட்டும் வடமொழி வன்மையும் இதற்குச் சான்று பகரும்.

இவரது காலம் யாது? காமத்துப்பாலின் அவதாரிகையில் 'வடநூலுட் போசராசனும் சுவை பலவென்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச் சுவையொன்றனையுமே என இதனையே மிகுத்துக் கூறினான்' என்று காணப்படுகிறது. உரையில் இங்குக் குறித்த வடநூல் போஜராஜன் இயற்றிய சிருங்காரப் பிரகாசமாகும். இவ் அரசன் காலம் 11-ம் நூற்றாண்டின் முற்பகுதி. இவன் காலத்திற்குப் பிற்பட்டவர் பரிமேலழகர் என்பது உறுதி. வேறொரு குறிப்பினால் நன்னூலை இயற்றிய பவணந்திக்குப் பிற்பட்டவரென்பதும் விளங்குகிறது. ஒரு பொருட்பன்மொழி என்பது தமிழிலக்கண நூலாருடைய ஒரு குறியீட்டுத் தொடர். 'மீமிசை' என்பது இதற்கு உதாரணம். இக்குறியீடு தொல்காப்பியத்தில் இல்லை. இப்பேரிலக்கணம 'ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்' (சொல். 460) என்று கூறும். நச்சினார்க்கினியர் முதலியோர் 'மீமிசை' போன்றதனை 'ஒரு பொருளிரு சொற் பிரிவில்லாதது' என நீண்டதோர் குறியீட்டினால் வழங்கினர். முதன்முதலில் 'ஒரு பொருட் பன்மொழி' என்ற சுருங்கிய அழகிய தொடரை வழங்கியவர் நன்னூலாரே யாவர். முற்பட்ட ஏனை இலக்கண நூல்களில் ஒன்றிலேனும் இக்குறியீடு காணப்படவில்லை. பரிமேலழகர் இதனை இரண்டு குறள்-உரைகளில் (571, 863) எடுத்தாண்டுள்ளார். ஆதலால் இவர் நன்னூலார்க்கும் பிற்பட்டவராவர். நன்னூலார் காலம் 13-ம் நூற்றாண்டின் முற்பகுதி

யாகும். எனவே, பரிமேலழகர் 13-ம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரல்லர் என்பது தெளிவு. இவரை 14-ம் நூற்றாண்டினரென்று கொள்வோமாயின் அது மிகவும் பொருத்தமென்றே தோன்றுகிறது. 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசுபுரிந்த விஜயகண்ட கோபாலனது 27-ம் ஆட்சியாண்டில் (கி. பி. 1272-ல்) காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாள் கோயிற் சாஸனமொன்றில் 'வண்டுவரைப் பெருமாளான பரிமேலழகிய பெருமாள் தாதர்' என்று ஒருவர் குறிக்கப்படுகிறார். இவர் உரைகாரராகிய பரிமேலழகரே யென்று கொள்ளுதற்குச் சான்று யாதும் இல்லை. ஓர் ஆராய்ச்சியாளர்* 'சேனாவரையர் 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவரென்றும் இவர் கருத்துக்களைப் பரிமேலழகர் பின்பற்றியுள்ளாரென்றும் எழுதியுள்ளார்' (சாஸனத் தமிழ்க் கவிசரிதம் பக். 113-118). இதுவும் நமது உரைகாரர் 14-ம் நூற்றாண்டினரென்பதை வலியுறுத்துகிறது.

இவர் தமிழுக்குச் செய்துள்ள பெருந்தொண்டு யாது? திருக்குறளுக்கு இவர் ஒரு சிறந்த உரை எழுதினார். இதுவுமன்றி எட்டுத்தொகையுள் பரிபாடலுக்கும் இவர் உரை எழுதினரெனக் கொள்ளலாம். இந்நூலின் சிறப்புப் பாயிரத்தால் இது நன்கு விளங்கும். ஒரு சிலர் இரண்டு நூல்கட்கும் உரையிட்டவர்கள் வேறுவேறா யிருத்தல் கூடுமோ என்று ஐயுறுவர். இந்த ஐயுறவிற்குத் தக்க காரணங்களும் உள்ளன. சுமார் 300 ஆண்டுகட்கு முன்பிருந்த திருமேனி இரத்தின கவிராயர் திருக்குறளுக்குப் பரிமேலழகர் செய்த அரிய உரையிற் சில கருத்துக்

* ஸ்ரீ ராவ்ஸாகிப் மு. இராகவையங்கார்.

களை நன்கு விளக்கி ‘நுண்பொருண் மாலை’ என்ற ஒரு சிறுநூல் இயற்றியுள்ளார். இம்மாலையில், “பரிபாட்டினுள் ‘மழையிருஞ்சூல்’ என்பதனை முன் பின்னாகத்தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை யென்றார் இவ்வுரையாசிரியர்” (குறள். 216) எனக் கூறுத லால் இரண்டு நூல்களின் உரையாசிரியரும் ஒருவரே யென்று இரத்தின கவிராயர் கொண்டனர். பரி பாடலுரை பரிமேலழகரது வடமொழி யுணர்ச்சியின் பெருமையை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

இரண்டு பெருநூல்களுக்கு உரையெழுதினார் என்ற அளவில் இவரது தமிழ்த்தொண்டு முடிந்து விடவில்லை. சங்ககாலத் தமிழ் வழக்கு நின்றுபோய் வெகுகால மாகிவிட்டது. அதன் சிறப்பியல்புகளான இனிமை, தெளிவு, சுருக்கம், நேர்மை முதலிய பண்பு கள் யாவும் பெரும்பான்மை இலக்கியங்களி னின்றும் நீங்கிப் பலநூற்றாண்டுகள் கழிந்து விட்டன. இடைக் காலத் தமிழ் பிறந்து வடமொழிச் சொற்களும் வட மொழிக் காவிய மரபுகளும் தமிழிற் குடிபுகுந்தன. பலவேறு நல்லியல்புகளும் தமிழில் வந்து அமைந்தன. ஆனால் அவற்றோடு சில தீய தன்மைகளும் புகுந்து விட்டன. சுருக்கம், நேர்மை என்ற இயல்புகள் இரண் டும் ஒழிந்து போயின; அலங்காரங்களும் ஆடம் பரங்களும் தலையோங்கிவிட்டன. வடசொற்கள் பெரும்பான்மை விரவித் தமிழ்ச் சொற்கள் சிறுகி வரத் தொடங்கின. இதனால் தமிழுக்கு இயற்கை யாய் அமைந்திருந்த ஆற்றல் சிறுகலாயிற்று. நூற் பொருள் பெரும்பாலும் வடமொழிக் குரியனவாய் முடிந்தன. இதனால் தமிழ்க் கவிஞர்களின் புதுவதி யற்றும் ஆற்றல் (inventive power) தடைபட்டுப் போயிற்று. இவ் இடையூறுகளையும் துணைக்கருவி யாக மாற்றி வெற்றிகொண்டு கம்பன் மகாகவியாய்

விளங்குகின்றானென்றால், அவனது பெருங் கவித்வசக்தியும், பேரறிவும், பேராற்றலுமே அதற்குக் காரணமென்று சொல்லவேண்டும். கம்பன் போன்ற அபூர்வப் பிறவிகளை விட்டுவிட்டு, பொதுவே பரந்து கிடந்த இலக்கிய நிலையை எடுத்துக் கொள்வோமானால், முற்கூறிய தீய இயல்புகளே மலிந்து கிடந்தன. அக்காலத்துக் கல்வியாளர் சிலர் இந்நிலைமைக்கு வருந்தினர். தமிழின் பண்டை நிலையை உன்னியுன்னி அந்நிலையைத் திரும்ப எய்துதல் கூடுமா என்று கருதலாயினர். சங்கத் தமிழின்மீதும் அதன் நன்முறையைக் கைப்பற்றிய பெருநூல்களின் மீதும் பொதுமக்கள் பற்றுக்கொண்டு கற்கும்படி செய்யவேண்டுமென்று எண்ணினர். அவற்றின் நல்லியல்புகள் தமிழில் மீண்டும் தழைக்க வேண்டுமென்று கருதினர். இந்நோக்கங்களைக் கொண்டு கல்வியில் தலைசிறந்தோர் சிலர் உழைத்து வந்தனர். சங்கத் தமிழுக்கு மீட்சியியக்கம் (return to classicism) நிகழ்வதாயிற்று. இம் மீட்சி யியக்கத்திற்கு ஓர் அறிகுறியாக, சங்க இலக்கியங்களுக்கும் அவற்றோடொத்த பெருமையுடைய குறள்போன்ற பெருநூல்களுக்கும் செவ்விய உரைகள் எழுதப்பட்டன. இங்ஙனமாக மீட்சியியக்கத்தைத் தோற்றுவித்தவர்களுள் ஒருவர் பரிமேலழகர். 14, 15-ம் நூற்றாண்டுகளில் இவ் இயக்கம் முனைந்து நின்றதெனக் கொள்ளலாம்.

தாம் எடுத்துக்கொண்ட இருபெரு நூல்களுக்கும் உரையெழுதி விளக்குவதே தமது வாழ்வின் பெருநோக்கமாகப் பரிமேலழகர் கொண்டிருத்தல் வேண்டும். ஒவ்வொரு நூலும் அது தோன்றிய காலத்துள்ள சமுதாயநிலை, கல்விநிலை, மொழிநிலை முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டே இயற்றப்படுவதாகும். காலத்தை முற்றிலுங் கடந்து

விடுவதென்பது யார்க்கும் இயலாததாகும். வள்ளுவரும் இக்காலநியதியைக் கடந்தவரல்லர். அவரது திருவுள்ளத்திலே உதித்த கருத்துக்களும் அவர் காலத்துள்ள சமுதாயம், கல்வி முதலியவற்றின் நிலைகளுக்குத் தக்கபடி அமைந்துள்ளன என்பது கூற வேண்டா. அவரது பரந்துபட்ட கல்வியும் அவர் நூலுக்குப் பயன்பட்டிருத்தல் வேண்டும். அன்றியும், அவரது நூலோடு ஒத்த தன்மையுள்ள பழைய நூல்களையும் அவர் நுணித்தறிந்து, கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ளி யிருத்தல் வேண்டும். ஆகவே, அவர் நூலுக்கு உரையியற்றுவோரும் அவர் காலத்துச் சமுதாயநிலை, கல்விநிலை, அவர் கற்றிருக்கக்கூடிய நூல்கள் முதலிய அனைத்தையும் நன்கறிந்து தம்மைத் தகுதியுடையராய் ஆக்கிக் கொள்ளுதல் அவசியம். அன்றியும், அவர் நூலை விளக்கியெழுந்த முற்பட்ட உரைகள் பலவற்றையும் அறிதல் அவசியம். இவ்வாறெல்லாம் பரிமேலழகர் தம்மைத் தகுதியுடையராகச் செய்து கொண்டார் என்பதற்குத் தக்க சான்றுகள் அவருரையினிடத்தே காணப்படுகின்றன. மேலும், நூல் முழுமையும் பலமுறை நுட்பமாகக் கற்று, ஆழ்ந்து சிந்தித்து, முன்பின் முரண்பாடு இன்றி ஒரு நோக்கில்வைத்து, உறுப்பு நெறிப்படுத்தி (systematise), ஆராய்ந்து வைத்திருந்தனரென்றும் நாம் உய்த்துணரலாம். இங்ஙனம் நெறிப்படுத்தி யுணர்தல் வள்ளுவரது பெருநூல்பற்றிய அளவில் மிகமிக இன்றியமையாததாம்.

குறட்பா ஒவ்வொன்றும் சூத்திரம்போல் அமைந்துள்ளது. சிறிய கண்ணாடியிற் பெரிய உருவம் முதலியவற்றின் சாயை செவ்வையாகச் செறிந்து இனிதாக விளங்கும். அதுபோல, சில எழுத்துக்களால் அமைந்த யாப்பிலே பலவகைப்பட்ட பொருள்

களும் செவ்வையாகச் செறிந்து இனிது விளங்குமாறு இயற்றுவதே சூத்திரமாகும். இதிற் பல பொருள்களின் திண்மையும் நுண்மையும் சிறந்து தோன்றும். இங்ஙனம் அமைந்த குறட்பாக்களின் தன்மையைப் பரிமேலழகர் பலவேறுமுகமாய் ஆராய்ந்துணர்ந்து பொருளின் திட்பத்தையும் நுட்பத்தையும் நன்கு விளக்கியுள்ளார்.

ஓர் உதாரணம் காட்டுகிறேன். அமைச்சர்களைப் பலவகையிற் பரிசோதனை செய்துதான் அரசர்கள் தெரிந்தெடுக்க வேண்டுமென்று வள்ளுவர் கூறுகிறார். அவ் வகைகளை,

அறம்பொரு ளின்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்

என்ற குறளிற் குறிப்பிடுகிறார். இதனை மாத்திரம் எடுத்துக்கொண்டால் பொருள் விளங்கமாட்டாது. இங்ஙனமே இக்குறிப்பிற் குரிய மூலம் தெரியாமற் போனாலும், இதன் பொருள் புலப்படமாட்டாது. மணக்குடவர், 'அறமும், பொருளும், இன்பமும், உயிரச்சமும் என்னும் நான்கின் கூறுபாட்டினையும் ஆராய்ந்து, ஆராய்ந்தபின்பு ஒருவன் அரசனால் தெளியப்படுவான். முன்பு நான்கு பொருளையும் ஆராயவேண்டு மென்றார்; பின்பு தேறப்படு மென்கிறார்' என உரையெழுதினர். இதனால் பொருள் சிறிதும் விளக்கம் பெறவில்லை. குறளின் மூலம் இன்னதென்பதை இவ் வுரைகாரர் உணர்ந்து கொள்ளவில்லை யென்பது தெளிவு. பரிமேலழகர் மூலம் இன்னதென்பதனைத் தெரிந்து உரை வகுத்

துள்ளார்.* சாணக்கியரது அர்த்த சாஸ்திரத்தில் இவ்விஷயம் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது. இந் நூலினை நோக்கி விஷயத்தை நன்குணர்ந்து விளக்க மாகப் பொருள் எழுதியுள்ளார். உரையை நோக்கிய

---

* " அறவுபதையாவது:—புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரால், ' இவ்வரசன் அறவோனன்மையின் இவனைப் போக்கி அறனும் உரிமையும் உடையானொருவனை வைத்தற்கு எண்ணினம். இதுதான் யாவர்க்கும் இயைந்தது. நின் கருத்து என்னை ?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். பொருளுபதை யாவது:—சேனைத்தலைவனையும் அவனோடு இயைந்தாரையும் விட்டு, அவரான், ' இவ்வரசன் இவறன்மாலைய னாகலின் இவனைப் போக்கிக் கொடையும் உரிமையும் உடையானொருவனை வைத்தற்கு எண்ணினம். இதுதான் யாவர்க்கும இயைந்தது. நின் கருத்து என்னை ?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இன்பவுபதை யாவது:—தொன்றுதொட்டு உரிமையோடு பயின்றுவொரு தவமுது மகளைவிட்டு, அவளால், ' உரிமையுள் இன்னாள் நின்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிகக வேண்டுமென்று என்னை விடுத்தாள். அவளைக் கூடுவையாயின் நினக்குப பேரின்பமேயன்றிப பெரும் பொருளும் கைகூடும் ' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். அச்சவுபதையாவது:—ஒரு நிமித்தததின் மேலிட்டு ஓர் அமைச்சனால் வினையோரை அவனில்லின்கண் அழைப்பித்து, இவர் அறைபோவா னெண்ணற்குச் சூழ்இயினரென்று தான் காவல் செய்து, ஒருவ னால், 'இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச்செய்து நமக்கினிய அரச னொருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கும் இயைந்தது. நின் கருத்து என்னை ?' எனச சூளுறவோடு சொல்லுவித்தல். இந்நான்கினும் திரிபிலனாயவழி எதிர்காலத்துந் திரிபிலனெனக் கருத்தளவையால் தெளியப்படும் என்பதாம். இவ் வடநூற் பொருண்மையை யுட்கொண்டு இவர் ஓதியதறியாது பிறரெல்லாம் இதனை உயிரெச்சமெனப் பாடந் திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே யுரைத்தார். "

அளவில் இதுவே உண்மையான பொருள் என்பதை யாவரும் ஒப்புவர்.

இங்ஙனம் கூறுவதனால் பரிமேலழகருரை ஓரிடத்தும் வழுவியதில்லை யென்று கருதலாகாது. தவறுதல் என்பது மக்கட் பிறவிக்கு இயல்பாக உள்ளது. ஆனால் அவருரையைப் பிழையென்று சொல்லுவது எளிதன்று; பலமுறை, பலமுகமாக, ஆராய்ந்த பின்னரே, பிழையிருக்கலாமோ என்று ஐயுறலாம். அப்போதும் ஒருதலையாகத் துணியமுடியாத நிலையும் ஏற்படலாம்.

பரிமேலழகரது தெளிந்த பேரறிவும், ஆராய்ச்சித் திறனும், மிகப் பரந்த கல்வியும், மொழித்திறமும் நோக்கி உமாபதிசிவாசாரியர் என்ற சைவப் பெரியார்

*வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே*
*தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளியசீர்த்*
*தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்*
*தண்டமிழின் மேலாந் தரம்*

என்று வாயாரப் புகழ்ந்தனர். தெய்வப் புலமைத் திருவள்ளுவரோடு ஒருங்குவைத் தெண்ணுதற்குரிய பெருமையுடையார் பரிமேலழகர் என்பதைக் காட்டி லும் சிறந்த புகழ் உண்டா?

## மகாவித்துவான்

## மீனாட்சிசுந்தரம் பிள்ளை*

19-ம் நூற்றாண்டிலே தமிழுலகிலே புகழ் சிறந்து விளங்கிய தமிழ்ப் பெரியார்கள் மூவர். அவர்கள் யாரெனில் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களும், ஸ்ரீ இராமலிங்கசுவாமிகளும், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்களுமே. நாவலர் பெருங் கல்வியாள ராக விளங்கியவர்; இராமலிங்க சுவாமிகள் பெருங்கவிஞராக விளங்கியவர்; பிள்ளை யவர்கள் கல்வியிலும் கவித்வத்திலும் சிறந்து விளங்கியவர் கள். நாவலர் சமயப்பற்றும் பாஷாபிமானமும் ஒருங் குடையவராய், தமிழ் நாட்டிற் பலவிடத்துஞ் சென்று பலராலும் அபிமானிக்கப்பெற்று, தமிழ் நூல்கள் பலவற்றைப் பிழையறப் பரிசோதித்துப் பதிப்பித்து, சிதம்பரத்தில் வித்தியாசாலை ஒன்று ஸ்தாபித்துத் தமிழ்ச்சர்வகலாசாலை யொன்று ஏற் படுத்த வேண்டுமென்ற பெருநோக்கத்தோடு பெரி தும் உழைத்து வந்தவர்; ஓர் ஆசிரிய பரம்பரைக்குத் தலைவராய் ஒரு நைட்டிகப் பிரமசாரியா யிருந்தவர். இராமலிங்க சுவாமிகள் வெகுகாலமாகத் தமிழ் நாட்டிற் கரைபுரண்டு பெருகிவந்த பக்திப் பெரு வெள்ளத்தை அணைகோலி, தமது கவிதாமார்க்கத் திற் செல்லவிட்டு, தம் கவியின் இசையினிமையால்

---

* திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம்—முதற்பாகம்: ஸ்ரீ மகா மகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமி நாதையரவர்கள் எழுதியது. சென்னை, 1933.

தமிழ்மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, இல்லறந்துறந்து வாழ்ந்தவர்; ஒரு பக்தபரம்பரைக்குத் தலைவராய்த் திகழ்ந்தவர். பிள்ளையவர்கள் தாம் இருந்தவிடங்களையே கலாசாலைகளாக்கி, தம் கல்விநிரம்பிய கவிகளால் தமிழ்நாட்டுப் பிரதேசங்களை நிரப்பி, பிரபுக்களாலும் ஆதீனங்களாலும் ஆதரிக்கப் பெற்று, இல்லறத்தே கடைபோக நின்றவர்; ஒரு வித்வத் பரம்பரைக்குத் தலைவராய் விளங்கியவர். இம்மூவருள், நாவலரது சரித்திரம் செய்யுள் நடையிலும், வசன நடையிலும் எழுதப்பெற்று வெளிவந்துள்ளது. இராமலிங்க சுவாமிகள் சரித்திரம் செய்யுள் நடையில் வெளிவந்துள்ளது. பிள்ளையவர்கள் சரித்திரத்தின் முதற்பாகம் இப்போதுதான் அவர்களுடைய உத்தம மாணாக்கராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களால் முதன்முறை வெளியிடப்படுகின்றது.

இச்சரித்திரம் வெளியிடப்பெற்றது இப்போதெனினும், இதனை எழுதுதற்கான முயற்சி சுமார் 45 வருஷங்களுக்கு முன்பே தொடங்கப்பெற்றதாகும். 'செய்வன திருந்தச்செய்' என்பதற்கு இலக்கியமாக இதன் ஆசிரியரது செயல்கள் ஒவ்வொன்றும் உள்ளது. இச் சரித்திரத்திற் குரிய செய்திகளை விடாமுயற்சியோடு பல இடங்களில் பலகாலும் சென்று விசாரித்துத் தெரிந்து, தொகுத்துத் தந்துள்ள அருமைப்பாடுகளைத் தமிழ்மக்கள் என்றும் வியந்து போற்றுவார்களென்பது திண்ணம்.

பிள்ளையவர்களது சரித்திரம், இத்துணைப் பெருமுயற்சியை மேற்கொண்டு எழுதித் தமிழுலகிற்கு அளிக்க வேண்டிய பெருந்தகுதி வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. சாந்துணையும் கற்று, சாந்துணையும் பாடி, சாந்துணையும் தாம் கற்ற கல்வியைத் தக்கார்க்குப்

போதித்தருளியவர் இக் கலாவிற்பன்னர். ‘ஆசு முதலிய நால்வகைக் கவிஞராகவும், நூலாசிரியர் உரையாசிரியர் போதகாசிரியர் என்னும் மூவகை ஆசிரியராகவும், வித்தியா வீரராகவும் இவர் விளங்கினர். பாடஞ் சொல்லுதலையே விரதமாகவுடையவர்; மாணாக்கர்பால் தாயினும் அன்புடையவர்.’ ‘பொருளை மதியாமல் கல்வியறிவையே மதிக்கும் கொள்கையுடையவர்.’ கல்வியிலும் கவியியற்றுவதிலும் இவர் ஈடுபட்டிருந்தபோதிலும், சமூகவாழ்விற்குரிய மக்கட் பண்பிலும் இவர் சிறந்து விளங்கினர். இவர் யாரிடத்தும் எளியவராகப் பழகும் இயல்புடையவர்; பரோபகாரமென்ற அருங்குணம் மிகுதியாக வாய்ந்தவர். ‘...இவருடைய வீடு ஒரு கலைமகள் நிலயமாகத் திகழ்ந்தது. தம்பால் வரும் பல மாணாக்கர்களுக்கும் பாடஞ் சொல்லுவதும், தம்மைப் பார்க்க வந்த பிரபுக்களிடம் தமிழ் நூல்களிலுள்ள அருமையான செய்திகளைக் கூறி மகிழ்வித்தலும், புதிய செய்யுட்கள் இயற்றுதலும் ஆகிய தமிழ்த்தெய்வ வழிபாடுகளே காலை முதல் இரவு நெடுநேரம் வரையில் இவருடைய வேலையாக இருந்தன.........இவர்.........தமிழறிவை வரையாமல் வழங்கிவரும் வண்மையைப் புகழாதவர் அக்காலத்து ஒருவரும் இல்லை.’ சோணாட்டினரும்... மாயூரத்தைச் சார்ந்த பிரதேசத்திலுள்ளவர்களும் தமிழ்த் தெய்வமே ஓர் அவதாரம் ஆகித் தங்களை உய்விக்க வந்திருப்பதாக எண்ணிப் போற்றிவரலாயினர். தமிழ்ப் பயிற்சியில்லாதவர்கள் கூட இப் புலவர் சிகாமணியைப் பார்த்தல் ஒன்றே பெரும்பயனென்று எண்ணி வந்துவந்து இவரைக் கண்டு களித்துச் செல்வார்கள்.’ தமது நாட்டினரால் இவ்வாறு பாராட்டப் பெற்றவரைச் சாமானியரென யாரும் கூறத் துணியார்.

இத்தகையாரது பெருமைக்குத் தக்கபடி பெருமை வாய்ந்த சரித்திரம் எழுதுதல் எளிதன்று. சுமார் அரை நூற்றாண்டுக்கு முன்புதொட்டே இச் சரித்திரச் செய்திகளை இந்நூலின் ஆசிரியர் தொகுக்கத் தொடங்கினார்களென்று மேலே கூறினோம். தமிழுலகத்திற்குப் பேருபகாரியாய் ஓயாது தமது அறிவாற்றல்களால் உழைத்துவரும் இவர்கள் தமக்கு அவகாசமுள்ள பொழுதையெல்லாம் தொகுத்து வைத்த செய்திகளை ஒழுங்கு படுத்துவதிலும், புதுச் செய்திகளை விசாரித்தறிவதிலும் செலவிட்டு வந்திருக்கிறார்கள். இச் செய்திகளுள் எத்தனையோ பொய்ச் செய்திகளும் இவர்கள் கேட்டிருக்கிறார்கள். அவற்றின் பொய்ம்மை மெய்ம்மைகளை விசாரித்துணர்வதிலும் பலகாலஞ் சென்றிருத்தல் வேண்டும். உண்மையானவற்றைத் தெரிந்து, அவற்றை முறைப்படி தொகுத்து, ஒழுங்குபடுத்தி, அதன் பின்னரே நூலை எழுதுதலில் முயன்றிருத்தல் வேண்டும். இதனுள் காணும் வரலாறுகளில் சிறிதும் அதிசயோக்தி இல்லை. ஒவ்வொரு செய்திக்கும் அதன் உண்மையான மதிப்பு இன்னதென்று அளவிட்டு உணர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொரு செய்தியும் யார் யாரால் தமக்குத் தெரிந்தது எனப் பெரும்பாலும் கூறிச் செல்கிறார்கள். ஒவ்வொரு செய்தியும் வாசகர்களைச் சரிதத் தலைவரின் மனத்தினுட் புகச் செய்து அவரது ஆன்மவொளியைக் காணும்படி செய்யத் தக்கதாயுள்ளது. இவ்வகையான செய்திகளைத் தமது நூலுள் தகுதிபெற இடங்கண்டு அமைக்கும் வல்லமை கற்பார்க்கு இன்பம் பயக்கின்றது.

சரிதத் தலைவர் நூலியற்றுங்காலத்து ஏகாக்கிர சித்தராய், தம் வசமிழந்து, புறவுலகொன்று உண்டென்னும் உணர்ச்சியைக் கூட இழந்து நிற்கும் நிலை

நம்மை ஒரு பக்கம் வசீகரிக்கின்றது (பக். 100) சிவ பூசை முதலிய செயல்களிலே ஈடுபட்டிருக்கும்போது மின்வெட்டுவது போலத் திடீரென்று தம் மனத்தில் தோன்றிய கருத்தையமைத்துப் பாடும் கவித்வசக்தி ஒரு பக்கம் நம்மை மகிழ்வூட்டுகிறது (பக். 99). எழுதுவோர் கைவருந்திச் சலித்தாலும், உள்ளமும் அறிவும் சிறிதும் சலியாது பருவகால மேகம் போலச் செய்யுட்களைப் பொழியும் அற்புதசக்தி ஒரு பக்கம் நம்மை வியப்புறச் செய்கின்றது (பக். 314). அன் போடு சூழவிருந்த மாணவர்களுக்குப் பாடஞ் சொல் லும் அழகு ஒருபுறம் இன்பூட்டுகிறது. செல்வர் களாலும் அறிஞர்களாலும் உபசரிக்கப்பெற்று வீற் றிருக்கும் காம்பீர்யம் ஒரு பக்கம் பயபக்தியை விளை விக்கின்றது. சாத்துவிக இயல்பும் பக்தியுமுடைய ஏழைகள் பலர் தங்களூர்பற்றி யெழுதும் புராணம் செவ்வையா யிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ளும் முறை நம்மை உருக்கி விடுகிறது (பக். 282). இத்துணைப் பெருமை மிக்க இவர் கீழ் வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகர் முதலியோரிடத்தில் வணங்கி யொடுங்கி நின்று வழிபாடுகள் செய்து பாடங்கேட்குந் தன்மை (பக். 141) உள்ளத்தைக் கனிவிக்கிறது. இவை யனைத்திற்கும் மேலாக, ஆறியங்காவற் பிள்ளை போன்ற சிஷ்யர்களிடத்தில் இவர் காட்டியிருக்கும் அன்பும் ஆதரவும் (பக். 153-6) இவரைக் கொண்டாடிப் பக்திபண்ணும்படியாகச் செய்கிறது.

மேற்குறித்த செயல்களெல்லாம் டாக்டர் சாமி நாதையரவர்களால் மிகவும் நயமாகக் கூறப்பட்டிருக் கின்றன. அவர்கள் தங்கள் ஆசிரியர்பாற் கொண் டுள்ள அன்பு இந்நூலின் ஒவ்வொரு வரியிலும் ததும்பிக் கொண்டிருக்கிறது. அத்தகைய அன்

பின்றி இந்நூல் போன்ற சிறந்த ஜீவிய சரித்திரம் எழுதுதல் இயலாது.

இந்நூல் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களது சரித்திரத்தின் முதற் பகுதி. இரண்டாம் பகுதி வெகு சீக்கிரம் வெளிவருமென்று எதிர்பார்க்கிறோம். பிள்ளையவர்களோடு டாக்டர் சாமிநாதையரவர்கள் நேரிற் பழகத்தொடங்கிய காலந்தொட்டுள்ள சரித்திரம் யாவும் இவ் இரண்டாம் பகுதியிலே கூறப்படுமென்று அறிகிறோம். பிள்ளையவர்களுடைய குடும்ப வாழ்க்கைச் செய்திகளும் அவர்களுடைய கடிதங்களின் பிரதிகளும் இப்பகுதியை அலங்கரிக்குமென்று நம்புகிறோம். .

தமிழ் மொழியிலே இதுவரை வெளிவந்துள்ள ஜீவிய சரித்திர நூல்களில் இதுவே முதன்மைபெற்று விளங்குவது. இதனைத் தமிழ்மக்கள் உரிய முறையிற் போற்றுவார்களென்பதில் ஐயமில்லை.

## சி. வை. தாமோதரம் பிள்ளை

சென்ற நூற்றுண்டின் பிற்பகுதியிலே நமது தமிழ்மொழி ஒருநூதன சக்தியால் இயக்கப்பட்டது. மேலை நாட்டுப் புதிய நாகரிகமும், பயிற்சிப் பண்பும் (culture) நமது நாட்டினரையும் தாக்கத் தொடங்கின. மேலை நாட்டுக் கல்விமுறை நம்மவர்களால் கையாளப்பட்டது. மேலைநாட்டு இலக்கியநயங்களிலே நம்மவர்களும் ஈடுபட்டு அதன் நலங்களை நுகர்ந்து இன்புறத் தொடங்கினர். பெரும்பாலோர் அதன் புதுமை மோகத்தில் தம்மைப் பறிகொடுத்து விட்டனர். "புதியன கண்டபோது விடுவரோ புதுமை பார்ப்பார்" என்று கம்பன் கூறியது பொய்படுமா? இவர்கள் அந்நிய மொழிகளைத் தங்கள் தாய்மொழியாகவே கருதினர்; தங்கள் தாய்மொழியைப் புறக்கணித்தல் செய்தனர். ஆனால் ஒருசிலர் இவர்களுக்கு விலக்காய் அமைந்து தாய்மொழியாகிய தமிழையும், அதன் இலக்கியங்களையும் போற்றி வரலாயினர். இச் சிலருள் ஒருவர் ஸ்ரீ ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள்.

பிள்ளையவர்கள் 90 ஆண்டுகளுக்கு முன் யாழ்ப்பாணத்திலே சிறுப்பிட்டியில் சைவ மரபிலே வைரவநாதருக்குப் புத்திரராய்ப் பிறந்தவர்கள். அந்நாட்டிலேயுள்ள கிறிஸ்தவ சங்கம், கல்வி நிலயங்கள் நிறுவிக் கல்வியைப் பரப்பி வந்தது. ஆங்கிலங் கற்க விரும்பினோர்க்கு இச் சங்கத்தைத் தவிர வேறு

கதியில்லாதிருந்தது. சங்கத்தினரின் விருப்பத்தை நிறைவேற்றியாவது கல்வி கற்க வேண்டுமென்று தாமோதரனார்க்குத் தோன்றியது. "பிச்சை புகினுங் கற்கை நன்றே" என்பது நமது முன்னோர்களது கொள்கையல்லவா? சிலகாலம் கிறிஸ்தவர்களோடு கூடித் தங்கித் தமது கருத்தை முற்றுவித்துக் கொண்டனர். தாமும் கிறிஸ்தவ மதச் சார்பினராய்ச் சில காலம் இருந்தனர். இவ் அனுபவம் ஒரு சோதனையாய் முடிந்தது. இதனால், புடமிட்ட பொன்போல அறிவொளி மிகுந்து, சைவசமயத்தில் பேரன்பு பூண்டவராய்ப் பின்பு விளங்கினர்.

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு

என்பது பொய்யாமொழி யன்றோ?

ஸ்ரீ ஆறுமுக நாவலர் இவரது சைவ சமயப் பற்றுக்குக் காரணமா யிருந்தனர்.

ஆங்கிலக் கல்வியில் ஈடுபட்டனர் என்பது உண்மை; ஆனால் தாய்மொழிக் கல்வியை மறந்துவிடவில்லை. சுன்னை முத்துக்குமார கவிராசர் என்ற ஆசிரியரிடம் தமிழ் கற்றுச் சிறந்த புலமை எய்தினர். இவரது ஆசாரிய பக்தி

தெள்ளுதமிழ்க் கடல்கடந்து
செழியகலைத் துறைபடிந்து
திரிபில் ஞானக்
கொள்ளைகொண்டு நுகர்ந்தமுத்துக்
குமாரகவி மேகமிதைக்
கொடிச் சுன்னை

வள்ளலென வுள்ளமதி
கொள்ள நறை விள்ளுதமிழ்
மணஞ்சற் றேறி
வெள்ளறிவின் முடைநாற்றம்
வீவித்தான் விரைமலர்த்தாள்
மிலேவன் மாதோ

என்ற அழகிய செய்யுளால் விளங்கும்.

* * * *

யாழ்ப்பாணத்திற் கல்வி முடிந்தது. தாமோதரனார் தமிழ் நாட்டிற்கு வந்தனர். அப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகம் 1857-ல் ஸ்தாபிக்கப் பட்டது. இக்கழகத்தின் முதல் ஆண்டில் இவர் பி. ஏ. பட்டம் பெற்றனர். பின்னர் இவர் தமிழ் நாட்டிலேயே உயர்தர அலுவலில் அமர்ந்து, இறுதியில் புதுக் கோட்டை ஸம்ஸ்தானத்து நீதிபதியாக விளங்கினர். இம்மகிழ்ச்சி நிரம்பிய வாழ்வில் தம்மை மறந்துவிட வில்லை. இவரது தமிழார்வம் இவர் உள்ளத்திலே மங்கா ஒளியாகத் திகழ்ந்து, ஒரு காலைக் கொருகால் வளர்ந்து, முடிவில் பேரொளிப் பிழம்பாகச் சுடர் விட்டு எரிந்தது.

ஒரு நாட்டில் இலக்கிய வுணர்ச்சியும் பயிற்சிப் பண்பின் நலமும் பெருக வேண்டுமாயின், அந்நாட்டுப் புராதன இலக்கியங்களால்தான் அது நன்கு கூடுவதாகும். புதிய இலக்கியங்களும் புராதன இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தான் பிறத்தல் இயலும். தேசியப் பற்றும் இப் பண்டை இலக்கியக் கல்வியினாலும், பயிற்சிப் பண்பினாலும் உண்டாவதே யாம். இதனை நன்குணர்ந்த பிள்ளையவர்கள் "தேசாபிமானம், மதாபிமானம்,

பாஷாபிமானம் என்றிவை இல்லாதார் பெருமை ஒரு பெருமையா ?" என்று ஓரிடத்துக் கூறியிருக்கிறார்கள். இதனால் இவர்கள் உள்ளப் பாங்கு நன்கு விளங்குகிறது. நமது நாட்டில் மொழிப்பற்று மிகுதியாக உண்டு. ஆனால் இம்மொழிப்பற்றுச் சுயநலத்தோடு கலந்தது ; விரிந்து இடம் பரந்த நெறியிற் செல்லாது, சுருங்கிக் குறுகிய நெறியிற் சென்றது. புராதன இலக்கிய நலன்பற்றிய உணர்ச்சியின் சார்பாகத் தோன்றாது, கேவலம் பெருமித வுணர்ச்சியில் தோன்றி, அறைகூவிப் போர்புரிதற்கு மாத்திரம் துணையாக இப்பற்று அமைந்திருந்தது. இப்பொய்ம்மையான மொழிப்பற்று வளர்ந்து, பெருகி, உண்மையான மொழிப்பற்றை ஒழித்து வந்தது இதனிடையில், பண்டை யிலக்கியங்களும் பேணுவாரற்று அழிந்துவந்தன. ஏட்டுச் சுவடிகள் நீர்வாய்ப்பட்டும், தீவாய்ப்பட்டும், சிதல்வாய்ப்பட்டும் மறைந்த வண்ணமாய் இருந்தன. இந்நிலையைக் கண்டு பிள்ளையவர்களுடைய உள்ளங் கொதித்தது. கலித்தொகையின் பதிப்புரையிலே,

"ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது. கட்டு அவிழ்க்கும் போது இதழ் முரிகிறது. ஒற்றை புரட்டும்போது துண்டு துணடாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோ வென்றால், வாலுந் தலையுமின்றி நாலுபுறமும் பாணக்கலப்பை மறுத்து மறுத்து உழுதுகிடக்கின்றது.........

"பழைய சுவடிகள் யாவுங் கிலமாய் ஒன்றொன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதிவைப்பாரும் இலர். துரைத்தனத்தாருக்கு அதின் மேல் இலட்சியமில்லை. சரஸ்வதியைத் தம்பால் வகிக்கப்பெற்ற வித்துவான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கின்றாளில்லை. திருவுடை

யீர்! நுங்கருணை இந்நாட் தவறினால், பின்பு தவம் புரிந்தாலும் ஒருதரம் அழிந்த தமிழ் நூற்களை மீட்டல் அரிது. யானைவாய்ப் பட்ட விளம்பழத்தைப் பின் இலண்டத்துள் எடுத்துமென்? ஓடன்றோ கிட்டுவது! காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடியெடுப்பினும் கம்பையும், நாராசமுந்தான் மீரும்.

* * * *

"சங்க மரீஇய நூல்களுட் சில இப்போது தானும் கிடைப்பது சமுசயம்...........எத்தனையோ திவ்ய மதுரகிரந்தங்கள் காலாந்தரத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் அழிகின்றன. சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா? ஆச்சரியம்! ஆச்சரியம்!! அயலான் அழியக் காண்கிலும் மனந் தளம்புகின்றதே! தமிழ் மாது நும் தாயல்லவா? இவள் அழிய நமக்கென்னென்று வாளா இருக்கின்றீர்களா! தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபிமானமென்று இவை இல்லாதார் பெருமையும் பெருமையாமா? இதனைத் தயைகூர்ந்து சிந்திப்பீர்களாக" என்று எழுதி அபயமிட்டார்கள்.

இச்சொற்கள் இன்றும் நமது உள்ளத்தைக் கொதித்தெழச் செய்யும் பேராற்றல் வாய்ந்தன. இவ்வாறு உளங் கொதித்திருந்த பிள்ளையவர்களுக்கு அமைதியுண்டா? இவர்கள் காலம்வரை ஒருவரும் எட்டிப்பாராத இப் பணிக் களரியில் உழைத்து வர முற்பட்டனர்.

ஸ்ரீ ஆறுமுக நாவலர் சைவ சமய நூல்கள், குறள், பாரதம் வெளியிடுவதோடு அமைந்து விட்டார்கள், வித்வான் தாண்டவராய முதலியார்

திவாகர முதலிய நூல்களையும், பள்ளி மாணவர்களுக்கு வேண்டும் வசன நூல்களையும் அச்சியற்றுவதில் ஒடுங்கிவிட்டார்கள். மழவை மகாலிங்க ஐயர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையோடு பதிப்பித்து, வேறு சில நூல்களையும் வெளியிட்டு அத்துடன் நின்றுவிட்டார்கள். களத்தூர் வேதகிரி முதலியார் நாலடி, நைடதம் முதலிய நூல்களை வெளியிட்டு அவ்வளவில் திருப்தியுற்றார்கள். திருத்தணிகை விசாகப்பெருமாளையர் முதலியோர் குறளுக்குத் தெளிபொருள், பிரபுலிங்க லீலை, சூடாமணி நிகண்டு முதலியவற்றைப் பிரசுரித்து அவ்வளவில் தங்கள் முயற்சியைச் சுருக்கிக்கொண்டார்கள். திருவேங்கட முதலியார், இராசகோபாலப் பிள்ளை முதலானவர்கள் இராமாயணம் வெளியிடுவதிலும், நாலடி முதலியன பதிப்பித்தலிலும் ஈடுபட்டு நின்றனர். ஸ்ரீ. உ. வே. சாமிநாத ஐயரவர்கள் அப்பொழுதுதான் சீவக சிந்தாமணிப் பதிப்பு முயற்சியில் போராடிக் கொண்டிருந்தார்கள். ஆகவே, நமது பிள்ளையவர்கள் தன்னந் தனியராய்ப் பழைடத் தமிழ்ச் செல்வப் புதையலைத் தமிழ் மக்களுக்கு அகழ்ந்தெடுத்து உதவும் பெருமுயற்சியை மேற்கொண்டனர்.

இம்முயற்சியில் நேர்ந்த இடையூறுகள் மிகப் பல. முதலாவதாக, ஏட்டுப்பிரதிகள் கிடைப்பது அரிதாயிருந்தது. பரம்பரை வித்துவான்களது இல்லங்கள் தோறும் பிரதிகள் தேடுவது அவசியமாயிற்று. பிள்ளையவர்களின் உற்ற நண்பர்கள் அங்கங்கேயிருந்து உதவி புரிந்தனர். இந்நண்பர்களுக்கு ஏட்டுப் பிரதிகளை நேரிற் பரிசோதிப்பது பெரும்பாலும் இயலாத காரியமாயிருந்தது. இதனால் ஏடுபெறும் முயற்சி முற்றும் நன்கு நிறைவேற வழியின்றிப் போயிற்று.

ஏடுகளுக்கு உரியவர்களும் அவற்றைக் கொடுத்துத் தமிழுலகிற்கு நன்மை புரிவதில் விருப்ப மில்லாதிருந் தார்கள். ஆனால் பிள்ளையவர்கள் மனந் தளரவில்லை. மேலும் மேலும் ஊக்கங்கொண்டு தேடிய வண்ணமா யிருந்தார்கள்.

இரண்டாவதாக, ஏட்டுப்பிரதிகளைப் பரிசோதித் துப் பலபடியாக ஆராய்ந்து வழுவறப் பிரதி செய்வது. அக்காலம் ஏடு பார்த்து வாசித்தல் வழக்காறற்றுப் புதியதொரு கலையாகத் தோன்றிவிட்ட காலம்! தற்போது அச்சிற் கிடைக்கும் பல இலக்கியங்கள் பெயர் போலும் அறியப்படாமலிருந்த காலம்! எட்டுத்தொகையில் அடங்கியுள்ள நூல்கள் இன்ன என்று அறியாக் காலம். சிலப்பதிகாரமா அல்லது சிறப்பதிகாரமா என மயங்கிக் கொண்டிருந்த காலம்! ஆகவே, தக்க பாண்டித்தியம் இருந்தாலன்றி நூல் களைப் பதிப்பிடுதல் இயலாததாம். அவ்வகைப் பாண்டித்தியமுள்ள உதவியாளர்கள் பிள்ளையவர் களுக்குக் கிடைப்பது அருமையாயிருந்தது. அவர் களே ஏடு பார்த்துப் பிரதிசெய்து பொருள் ஆராய வேண்டியதாயிற்று. தமக்கு விளங்காத இடங் களைக் குறித்துக் கடிதவாயிலாகப் பல வித்துவான் களுக்கும் எழுதிய வண்ணமா யிருந்தார்கள். ஆனால் இக்கடிதப் போக்குவரத்தினால் விளங்கிய இடம் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லலாம். பிள்ளை யவர்களுடைய அல்லற்பாடுகளை யுணர்ந்தார் தாமும் மிகச் சிலரேயாவர். "எனக்கு ஸ்ரீமத் சாமிநாதைய ரும் அவருக்கு நானுமே சாட்சி" என்று ஓரிடத்து எழுதியிருக்கிறார்கள்.

மூன்றாவதாக, நூல்களைப் பதிப்பிடுதலின் செலவு. சிற்சில பெரியார்கள் இவ்விஷயத்தில் உதவி னார்கள்; எனினும் பெரும்பாலும் தமது கைப்

பொருளையே செலவிடும்படி நேர்ந்தது. தற்காலத்திற் போன்று தமிழ் மக்கள் நூல்கள் வாங்குதல் முற்காலத்தில் இல்லை. மிகச் சொற்ப பிரதிகள் வெளியிடப்படினும், அவை தாமும் பதிப்பாசிரியரிடமே தங்கிச் செல்லரிப்புண்டு அழிதல் வழக்கமாயிருந்தது. அன்றியும் தமிழ் நூல்களிற் பற்றுள்ள புஸ்தகப் பிரசுராலயங்களும் அக்காலத்தில் இல்லையென்றே சொல்லவேண்டும்.

நான்காவதாக, எத்துணையோ சிரமமெடுத்து நூல்களை வெளியிட்ட போதினும், அதற்குக் கைம்மாருகக் கிடைத்தது வசவுரைதான். ஆங்கிலங் கற்ற தமிழ் விற்பன்னர்கள் உதாசீனமாயிருந்தார்கள். தமிழ்கற்ற பண்டிதர்களிற் சிலர் பொருமை மிக்குப் பகை காட்டினுர்கள். ஒருசில அறிஞர் தமிழ்நூல்களை வெளியிடுவதற்குத் தங்களுக்குத் தான் தனியுரிமையுண்டென்று கருதினுர்கள். அவ்வாருவது நூல்களைப் பதிப்பிட முன் வந்தார்களா ? அதுவும் இல்லை. முன் வந்தார்களாயின், தமிழ் நூல்கள் அழியாது பாதுகாக்கப்பட்டிருக்குமே ! இவர்கள் செய்ததெல்லாம் குறைகூறிக் கொண்டிருந்த தொண்டேயாம்.

பிழைகளை எழுதி அனுப்பினுல், எழுதினேர் பெயர்களோடு அவை வெளியிடப்படுமென்றும், 50 பிழைகள் காட்டுவோர்க்கு ஒரு புத்தகம் இனுமாக அளிக்கப்படு மென்றும், பிள்ளையவர்கள் பத்திரிகைகளில் வெளியிட்டிருந்தார்கள். யாரும் எழுதியனுப்பியதாகத் தெரியவில்லை. பிறரைக் குறை கூறிக் கொண்டிருப்பதே, பாண்டித்தியத்தின் முக்கிய லட்சணமென்ற கொள்கையுடையாரால் தமிழில் இலக்கியச் செல்வம் எந்நாளேனும் பெருகுவதாகுமா ? அக்காலத்திற் பலராலும் விரும்பிக் கற்கப்பட்டு வந்த திராவிடப் பிரகாசிகை என்னும் நூலில் பிள்ளையவர்களைக்

குறித்து எழுதியிருப்பன தமிழ்ப் பண்டிதர்கள் சிலரது மனப்போக்கை நன்கு தெரிவிக்கின்றன.

ஆனால், பிள்ளையவர்கள் இக்கண்டனவுரை, வசவுரை முதலிய இடையூறுகளை யெல்லாம் பொருட்படுத்தியவர்களே யல்லர். தமது அறிவொழுக்கங்களுக் கேற்ப, சிறந்த நற்குணமும் உடையவர்கள் ; அடக்கம் நிரம்பியவர்கள் ; எல்லாம் அறிந்த பெரும் புலவர் எனத் தம்மைக் கூறிக்கொள்ளவில்லை. தமக்குத் தெரியாத பொருள்களைப் பிறரிடங் கேட்டுணர்வதில் சிறிதும் கூச்சமற்றவர்கள். அவ்வாறு கேட்பது தமக்குச் சிறுமையாமென்று கருதியவர்களுமல்லர். தமிழன்னைக்குப் புரியும் திருத்தொண்டிற் பிற வித்துவான்களும் உழைத்து வரவேண்டுமென்ற கொள்கையையே உடையவர்கள். ஒரு சிலர் தம்மைத் தவிரத் தமிழ் நூல்களைப் பதிப்பிடும் பணியில் இறங்கிய பிறருக் கெல்லாம் நரக தண்டனை விதித்துச் சபித்து வந்துள்ளார்கள் ! பிள்ளையவர்கள் இவ் இனத்தை சார்ந்தவர்களல்லர். உண்மையான அன்போடு உண்மையான தமிழ்த்தொண்டு புரிதலே பிள்ளையவர்களது வாழ்க்கையின் பெருநோக்கமாயிருந்தது.

* * * *

இவ்வகையான உண்மைத் தொண்டு பயனற்றுப் போகுமா ? பிள்ளையவர்கள் வெற்றி யெய்தியமை தமிழ்நாடு நன்கறிந்ததே. தொல்காப்பியம், கலித்தொகை, சூளாமணி யென்பன அவர்கள் தந்த தனிப் பெருஞ் செல்வங்களுட் சிறந்தன. தமிழன்னையின் அருங்கலமாகத் திகழும் இந்நூல்கள் உள்ளவரை இவர்கள் புகழும் நின்று நிலவுவதாகும்.

உரைநடை யெழுதுவதில் இவர்கள் எத்தனை ஆற்றல் படைத்தவர்களென்பது மேலே தந்துள்ள எடுத்துக்காட்டுக்களால் விளங்கும். அழகிய செய்யுட்கள் இயற்றவல்ல கவித்துவ சக்தி இவர்களிடத்தில் சிறந்து விளங்கிற்று. மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள்,

நீடிய சீர்பெறு தாமோ
தரமன்ன நீள்புவியில்
வாடிய கூழ்கள் மழைமுகங்
கண்டென மாண்புறநீ
பாடிய செய்யுளைப் பார்த்தின்ப
வாரி படிந்தனன்யான்
கோடிப் புலவர்கள் கூடினும்
நின்புகழ் கூறரிதே

என்று பாடியிருக்கின்றார்கள். இது சிறிதும் முகஸ்துதியன்று ; உண்மையேயாகும்.

உரைநடையாளர், கவிஞர் என்ற இரண்டு நிலையிலும் பிள்ளையவர்கள் சிறந்த ஸ்தானத்தைப் பெறத்தக்கவர்கள். ஆனால் இவ்விரண்டு வகையிலும் அவரது ஆற்றல் மேன்மேலும் விளங்குவதைக் காணும் பேறு நமக்குக் கிடைக்கவில்லை. உதய தாரகை என்ற பத்திரிகைக்கு இவர்கள் ஆசிரியராயிருந்ததும், சைவ சமயம் பற்றிப் பல வசன நூல்கள் எழுதியதும் இங்கே குறிப்பிடத்தக்கன. ஆனால் சிறந்த பதிப்பாசிரியர் என்ற நிலையில்தான் இன்று அவர்களைப் போற்றுகிறோம்.

தமிழன்னையே ! உனது திருவுத்ரத்தில் பிள்ளையவர்களைப் போன்ற உத்தம மக்கள் பல்லாயிரவர்

தோன்றுதல் வேண்டும்! அவர்களது விரிந்து, பரந்த நோக்கங்களும், அரிய நற்குணங்களும் நம்மனோர்க்கு வழிகாட்டியாய் என்றென்றும் திகழ்தல் வேண்டும்! அவர்கள் தாய்மொழியின்மீது கொண்டிருந்த தூய அன்பும், உண்மைத் திருத்தொண்டும் நம்மனோரையும் ஊக்குவித்து நம்மை உண்மைத் தமிழ் மக்களாகத் திருத்துதல் வேண்டும்! அவர்களை லட்சிய புருஷராகக் கொண்டு நமது தாய்மொழிக்கு உற்ற பணியை நாம் புரிந்துவரல் வேண்டும்!

## ஆசிரியர் சுந்தரம் பிள்ளை

### வாழ்க்கை

சென்ற நூற்றாண்டின் இறுதியிலே பெரும்புகழ் பெற்று விளங்கிய தமிழ்ப் பெரியார்களுள் அறுவர் சிறப்பாக எடுத்துச் சொல்லுதற்குரியர். அவர்களாவார் : ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பூண்டி அரங்கநாத முதலியார், இராஜமய்யர் என்று பெயர் வழங்கிய சுப்பிரமணிய அய்யர், பெ. சுந்தரம் பிள்ளை. இவ் அறுவரும் ஆங்கிலம் கற்று மேனாட்டுக் கலைப்பண்பில் திளைத்துத் தம் தாய் மொழியாகிய தமிழ்மொழிக்கு ஒவ்வொரு வகையிலே தொண்டுபுரிந்தவர்கள். சி. வை. தாமோதரம் பிள்ளை, தொல்காப்பியம் முதலிய பழந்தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்து பதிப்பித்து வெளியிட்டவர். கனகசபைப் பிள்ளை, பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து தமிழரது பண்டை நாகரிகத்தைப் புலப்படுத்தியவர். மாயூரம் வேதநாயகம் பிள்ளை, இசைத்தமிழில் மேம்பட்டிருந்ததோடு தமிழில் வசனநூலுக்கும் அடிகோலியவர். பூண்டி அரங்கநாத முதலியார் தமிழாசிரியர்களை ஆதரித்து ஊக்கமளித்துவந்ததோடு, நம் பண்டைத் தமிழ் மரபு வழுவாதபடி பிரபந்தம் இயற்றியவர். இராஜமய்யர், வேதாந்த விசாரணையில் வல்லவராயிருந்ததோடு, தமிழ்நாட்டில் நவீனகத்தின் தந்தையெனக் கூறுமாறு ஒரு நவீனகத்தை முதன்முதலில் நமக்கு அளித்தவர். சுந்தரம் பிள்ளை, தமிழிலக்கிய ஆராய்ச்சி, தமிழிலக்கிய சரிதம், தமிழ்நாடகம்,

தத்துவநூற் புலமை இவற்றிலெல்லாம் மேம்பட்டு, சிறந்த நூல்கள் இயற்றி, இத்துறைகள் வளர்ச்சி யடைவதற்குக் காரணமாயிருந்தவர்.

இவ் அறுவரும் கலாசாலைகளில் தமிழ் போதித்து வந்த தமிழாசிரியர்க ளல்லர். இருவர் நீதிபதிகளா யிருந்தவர்கள்; ஒருவர் தபால் இலாகாப் பரிசோதக ராயிருந்தவர்; ஒருவர் கணித ஆசிரியராகப் பெரும் புகழ் படைத்தவர்; ஒருவர் தத்துவஞானத் துறை யிலும் பத்திரிகைத் துறையிலும் சிறந்து விளங்கிய வர். சுந்தரம் பிள்ளை தத்துவசாஸ்திரப் பேராசிரிய ராகவும் சிலா சாஸன பரிசோதகராகவும் புகழ்பெற் றவர். இவ் அறுவரில் முதல் தரமான புதுநூல் இயற் றித் தமிழ்த்தொண்டு புரிந்தவர் சுந்தரம் பிள்ளையே.

சுந்தரம் பிள்ளை 1855 ஏப்ரில், 4-ந்தேதியில் ஆலப் புழையில் பிறந்தவர். இவர் தந்தையாராகிய பெருமாள் பிள்ளை வியாபாரத்துறையில் தொழில்நடத்திவந்தார். இவரது முன்னோர்கள் மதுரைப் பிரதேசத்திலிருந்து வெகுகாலத்திற்கு முன் ஆலப்புழையில் குடியேறிய வர்கள். தாம் மலையாள தேசத்தில் பிறந்தவராதலை,

கொடு மலையாளக் குடியிருப் புடையேன்

எனத் தமது மனோன்மணீயத்திற் குறிப்பிடுகிறார். தமிழ் நாட்டிலே பிறந்திருந்தால், தமிழை மிக்க இள மைப் பருவந் தொட்டே அனுபவிக்க முடிந்திருக்கும். அவ்வரிய பேறு தமக்குக் கிடைக்கவில்லையே யெனப் பெரிதும் மனம் வருந்துகின்றார். பள்ளி மாணவராக இருந்தபோதே கூர்த்த அறிவுடையவரெனப் பெயர் பெற்றனர். முதலில் ஆலப்புழையிலேயே அங்கிருந்த ஜில்லாப் பள்ளிக்கூடத்தில் படித்துவந்தனர். பின் னர், திருவனந்தபுரம் வந்து அங்குள்ள உயர்தரப் பள்ளிக்கூடத்தில் கற்றனர். 1871-ல் மெட்றிகுலே

ஷன் பரீட்சையிலும், 1873-ல் எப். ஏ. பரீட்சையி லும் தேறினர். 1876-ல் பி. ஏ. பரீட்சையில் தேறிப் பட்டம் பெற்றனர். உடனே திருவனந்தையில் தமது கலாசாலையில் ஆசிரியராய் அமர்ந்தார். இவ ரது கல்வியறிவின் பெருமையையும், பிற திறமைகளை யும் உணர்ந்த திருவிதாங்கூர் அரசாங்கத்தினர் இவரைத் தமது இராச்சியத்தில் உத்தியோகஸ்த ராக்கக் கருதிப் 'பிறவகை சிரஸ்தா'ராக நியமனஞ் செய்தனர். ஆனால், கல்வித்துறை வாழ்க்கையையே இவரது மனம் மிக நாடிநின்றது. 1880-ல் இவரும் திருவிதாங்கூரில் திவான் பேஷ்காராக விளங்கிவந்த தாணு பிள்ளையும் தத்துவ சாஸ்திரத் துறையில் எம். ஏ. பட்டம் பெற்றனர். மீண்டும் தமது கலா சாலையில் இவர் ஆசிரியராக அமர்ந்தார்.

கலாசாலையில் தமது போதனு முறைச் சிறப்பி னலே, சுந்தரம் பிள்ளை மிகவும் பாராட்டப்பெற்ருர். முதலில் சரித்திர பாடம் போதித்தனர். இக்காலத் தில் தமது நாடாகிய திருவிதாங்கூர்ச் சரித்திரத்தை ஆராயவேண்டுமென்ற எண்ணம் உதித்தது. இதன் பலனுக, திருவிதாங்கூர் அரசர்கள் சிலரைக் குறித் துள்ள சிலா - சாஸனங்களை நன்கு பரிசோதித்துச் சரித்திரவியாசங்கள் பற்பல எழுதி வெளியிட்டனர். திருவிதாங்கூரில் சிலா - சாஸன - நிலையமொன்றும் இவரது நன்முயற்சியால் நிறுவப்பட்டது. அதற்குக் கௌரவத் தலைவராகச் சுந்தரம் பிள்ளையே அமர்ந்து பல அரிய ஆராய்ச்சிகளைத் திறம்பட நடத்திவந்தார். சென்னைச் சர்வகலாசாலையில் சரித்திர பாட நியமன சங்கத்தில் உறுப்பினரா யிருந்தும் பெருந்தொண்டு ஆற்றிவந்தனர்.

சரித்திரம் பற்றி எத்தனை ஆர்வம் கொண்டிருந் தனரோ, அத்தனை பேரார்வம் தத்துவ சாஸ்திர

விசாரணையிலும் இவருக்கு இருந்தது. தமது கலாசாலையில் தத்துவ சாஸ்திர ஆசிரியராக இருந்த டாக்டர் ஹார்வி அப்பதவியினின்றும் நீங்கிய பிற்பாடு, அவருடைய மாணவராகிய சுந்தரம் பிள்ளையே அப்பதவியில் அமர்ந்து மிக்க திறமையுடன் போதித்து வந்தார். இயற்கையாகவே பலவேறு சமய நூல்களிலும் வேதாந்த விசாரணையிலும் பற்று மிகுந்திருந்தார். மேலைநாட்டுத் தத்துவ விசாரணை முறையில் நன்கு பயின்றவராதலினாலே, இவர் சிறந்த தத்துவ சாஸ்திர ஆசிரியர்களுள் ஒருவர் என வெகு விரைவில் பெரும் பெயர் பெற்றார். வேதாந்த விசாரணையில் இவருக்குக் குருவாக விளங்கியவர் கோடக நல்லூர் ஸ்ரீ சுந்தர சுவாமிகள். இம் மகானை அடிக்கடி சந்தித்துத் தத்துவ விசாரணைகளைச் சுந்தரம் பிள்ளை நிகழ்த்தி வந்தார். மனோன்மணீயத்தில் சீவக வழுதியின் குல குருவாகச் சொல்லப்படுகிறவர் கோடக நல்லூர்ச் சுவாமிகளை மனத்துக்கொண்டே அமைக்கப் பெற்றவர் என்பது எளிதிற் புலப்படும். இக் குல குருவைக் குறித்து,

முனிவரர் என்றிடிற் கனிவுறும் கல்லும்

என்றும்,

சுந்தர முனிவன் சிந்துர அடியும்
வாரிசம் போல மலர்ந்த வதனமும்
கருணை அலையெறிந் தொழுகும் கண்ணும்
பரிவுடன் முகிழ்க்கும் முறுவலும் பால்போல்
நரைதரு தலையும் புரையறும் உரையும்
சாந்தமும் தயையுந் தங்கிய உடலும்
எண்ணுந் தோறும் குதித்து
நண்ணும் என்னுளம் மன்னிய தவத்தே

என்றும் வரும் அடிகளால் தாம் விரும்பிய வேதாந்த ஞானத்தை அறிவுறுத்தியருளிய சுவாமிகளை நன்றி யுடன் பாராட்டிப் போற்றுகின்றார்.

இவ்வாருக, தத்துவ விசாரணை செய்து வந்த தோடு, ஐரோப்பிய அறிஞர்களது கருத்தைத் தழுவித் தத்துவ நூல்கள் தமிழில் தோன்ற வேண்டுவதற்குப் பெரு முயற்சிகள் செய்துவந்தனர். திருவனந்தபுரத் தில் அரசாங்கத்தினர் பொதுஜனங்களின் நன்மையின் பொருட்டுச் சொற்பொழிவுகள் நடைபெற ஏற்பாடு செய்திருந்தனர். அந்தப் பிரசங்க வரிசையில் தத்துவ சாஸ்திர சம்பந்தமாகப் பல சொற்பொழிவுகளைச் சுந் தரம் பிள்ளை நிகழ்த்தினர். இவைகளே 'நூற்றொகை விளக்கம்' என்ற பெயரோடு 1888-ல வெளியிடப் பட்டன. அறிவுத் துறைகளைத் தற்கால விஞ்ஞான முறைக்குத் தக்கபடி பாகுபாடு செய்து தருவதே நூற்றொகை விளக்கத்தின் முக்கியமான நோக்கமாக இருந்தது. ஆனல், இது மொழிபெயர்ப்பு நூல் அன்று. தமது கருத்துக்களையும் உடன் கூட்டிப் புதுவதாக ஆராய்ந்து வகுத்த பாகுபாட்டினையே இந்நூல் விவ ரிக்கின்றது. ஒவ்வொரு துறையையும் பற்றித் தனித் தனியாக நூல்கள் எழுதுவதற்குச் சுந்தரம் பிள்ளை கருதி யிருந்தார் என்பது இவருடைய முன்னுரையால் விளங்குகிறது. வேதாந்த நூல்களில் மிக விரிந்த ஆராய்ச்சியுள்ளவர் இவர் என்பது இந் நூற்றொகை விளக்கத்தில் எடுத்தாளப்பட்டுள்ள பல நூல்களால் அறியலாம். வடமொழி நூல்களும், ஆங்கில நூல் களும் இவரால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இக் காலத்திலே நமது நாட்டுத் தத்துவ சாஸ்திரங்களை உணராதபடி ஐரோப்பிய தத்துவ சாஸ்திரங்களை மட்டும் உணர்ந்தவர்கட்கும், இதற்கு நேர் மாருக, ஐரோப்பிய தத்துவ சாஸ்திரங்களில் நல்ல பயிற்சி

யில்லாமல் நமது நாட்டுச் சாஸ்திரங்களை மட்டும் பரிசீலனை பண்ணுபவர்களுக்கும், தக்க நெறி இது தான் என்று காட்டுவதுபோல் அமைந்துள்ளது இந் நூற்றொகை விளக்கம்.

இவர் வடமொழிச் சொற்களைத் தகுதியாக வேண்டு மிடங்களில் எடுத்தாண்டுள்ளார். இதற்கு,

> *சரவுயிர்களைப் பிரதமரூபி, சக்கரரூபி, சிப்பிவாழுயிர், கீடாதி, வீருதண்டி என ஐந்து பெரும் பிரிவாக நிறுத்தி, அவற்றுள் வீருதண்டிகளை அண்டசம், சராயுசம் என இரு பெருந் தோற்றங்களாக வகுத்து, சராயுசங்களைப் பின்னும் நஞ்சுக்கொடி யுளது இலது என இருபிரிவாக்கி, முன்னதை மாம்சபுக்காதியாகப் பத்துப் பன்னிரண்டு குடும்பமாகக் கூறிட்டு, மாம்சபுக்குகளைப் பின்னும் மார்ச்சாலாதி சுவானாதி என்று இப்படி ஐந்து ஆறு யோனி பேதங்களாகப் பகுத்து ...எனும் ஜாதியைப் பின்னும் பல உட்பிரிவாகப் பங்கிட்டுக் காட்டுதல்*

என்பது ஒரு தக்க உதாரணமாகும்.

அறிவு வளர்ச்சிக்கு வடமொழி முதலிய பல மொழிகளினின்றும் சொற்களைக் கடன்கொள்ளுதல் இவர்க்கு முற்றும் உடம்பாடே என்பது இந்நூற்றொகை விளக்கத்தால் நன்கு விளங்கும்.

தத்துவ சாஸ்திரம் சம்பந்தமாகப் புது நூல்கள் இயற்ற வேண்டும் என்ற கருத்து இவருக்கு இருந்தது போலவே, தமிழிலக்கியத்திலும், இலக்கிய சரிதத்திலும், இலக்கிய ஆராய்ச்சியிலும், புது நூல்கள் இயற்றவேண்டும் என்ற பேரவாவும் இவருள்ளத்தில் எழுந்தது. தமது தாய்மொழி யாகிய தமிழ்மீது பேரார்வம் கொண்டிருந்தார் இவர். இளமையிலேயே திருவிளையாடல் முதலிய நூல்களைப் பக்தி சிரத்தையுடன் கற்று வந்தார் என்று சொல்லுவார்கள். இதற்

குரிய சான்றுகளும் இவரியற்றிய நூல்களில் அங் கங்கே காணலாம். புது நூல்கள், புதுத் துறை களில் மிகப் பல நூல்கள், வெளிவரவேண்டும் என்ற பேரவா இவரது மனத்திலே வெகுகால மாகக் குடி கொண்டிருந்தது. இது,

*நிற்புகழ்ந் தேத்துநின் நெடுந்தகை மைந்தர்*
*பற்பலர் நின்பெரும் பழம்பணி புதுக்கியும்*
*பொற்புடை நாற்கலிப் புதுப்பணி குயிற்றியும்*
*நிற்பவர் நிற்க நீபெறும் புதல்வரில்*
*அடியேன் கடையேன் அறியாச் சிறியேன்*
*கொடுமலை யாளக் குடியிருப் புடையேன்*
*ஆயினும் நீயே தாயெனும் தன்மையின்*
*மேயபே ராசையென் மீக்கொள ஓர்வழி*
*உழைத்தலே தகுதியென் றிழைத்தஇந் நாடகம்*
*வெள்ளிய தெனினும் விளங்குநின் கழைக்காற்கு*
*ஒள்ளிய சிறுவிர லணியாக்*
*கொண்மதி அன்பே குறியெனக் குறித்தே*

என்று வரும் தமிழ்த் தெய்வ வணக்கத்தின் பகுதி யால் அறியக்கிடக்கின்றது. தமிழ்மக்களுக் குரிய கடமைகளுள் இரண்டை முக்கியமாக இவர் எடுத்துக் காட்டுகின்றார்.

அவர் கூறுவது வருமாறு :

முதலாவது முன்னோரால் பொருட்சுவையும் சொற்சுவை யும்பொலிய இயற்றப்பட்டிருக்கிற அருமையான நூல்களுள் இறந்தவை யொழிய இனியும் இறவாது மறைந்து கிடப்பன வற்றை வெளிக் கொணர்ந்து நிலைபெறச் செய்வதேயாம்... ...பூர்வார்ஜித தனம் எவ்வளவு பெரிதாக இருப்பினும், அத னைப் பாதுகாப்பதோடு ஒவ்வொருவரும் தத்தமக்கியன்ற அளவு உழைத்துச் சொற்பமாயினும் புது வரும்படியைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டு மென்பது உலக நோக்கமாக

இருப்பதால், முற்கூறிய முயற்சியோடு இரண்டாவதொரு கடன்பாடும் தமிழர் யாவர்க்கும் விட்டு விலகத் தகாத தாகவே ஏற்படும். பூர்வார்ஜிதச் சிறப்பெல்லாம் பூர்வீகர்கள் சிறப்பு; அந்த அந்தத் தலைமுறையாளர்களுக்கு அவரவர்கள் தாமே ஈட்டிய பொருளளவும் சிறப்பேயொழிய வேறில்லை. அத் தலைமுறையாரைப் பின் சந்ததியார் பேணுவதற்கும் அதுவே யொழிய வேறு குறியு மில்லை. ஆனதினால் எக் காலத்திலும் எவ்விஷயததிலும பூர்வீகர்களால் தங்களுக்குச் சித்தித்திருப்பவற்றை ஒவ்வொரு தலைமுறையாரும் பாது காப்பதுமன்றித் தங்களாற் கூடிய அளவும் அபிவிருத்தி பண்ணவும் கடமை பூண்டவர்களாகின்றார்கள். ' பூர்வார்ஜி தம் மிகவும் பெரிதாயிருக்கின்றதே! நம் முயற்சியால் எத் தனைதான் சமபாதிப்பினும் நமது பூர்வார்ஜிதத்தின் முன் அது பொருளாகத் தோற்றுமா?' என மனந்தளர்ந்து கை சோர்வார்க்கு அவர் பூர்வார்ஜிதப் பெருமையே கேடுவிளைபப தாகவன்றோ முடியும்! அந்தோ! இக் கேட்டிற்கோ நம் முன்னோர் நமக்காக வருந்தியுழைத்துப் பொருளீட்டி வைத் திருக்கின்றார்கள்! பிதிரர்களாய் நிற்கும் அம்முன்னோர் இவ்விபரீத விளைவைக் கண்டால் நம்மை எங்ஙனம் வாழ்த் துவர்? இக் கூறிய உண்மை செல்வப்பொருளுக்கன்றிக் கல்விப்பொருளுக்கும், ஒரு குடும்பத்துள் வந்த ஒருவனுக் கன்றி ஒரு தேசத்திற் பிறந்த ஒவ்வொரு தலைமுறையார்க் கும், ஒன்றுபோலவே பொருத்த முடையதாதலால்,

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்

என்னும் திருக்குறளை நம்பி நம் முன்னோர் யாதேனும் ஒரு வழியில் அபரிமிதமான சிறப்படைந்தாராயின் நாமும் அவர் போலவே இயன்ற அளவும் முயன்று பெருமை பெறக் கருதுவதன்றோ அம் முன்னோர்க்குரிய மக்கள் நாமென முன்னிற்றற் கேற்ற முறைமை.

**தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி**
**தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்கு—ஓங்கும்**
**உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்**
**பேராண்மை யில்லாக் கடை**

ஆதலால், அருமையாகிய பூருவ நூல்களைப் பாதுகாத்துப் பயின்று வருதலாகிய முதற் கடமையோடு அவ்வழியே முயன்று அந்த அந்தக் காலநிலைக் கேற்றவாறு புது நூல் களை இயற்ற முயலுதல் தமிழ்நாடென்னும உயர்குடியிற் பிறக்கும் ஒவ்வொரு தலைமுறையாருக்கும உரித்தான இரண்டாம் கடமையாய் ஏற்படுகின்றது.

இரண்டாவதுகடமையை மேற்கொண்டு தமிழில் நாடக நூல் இல்லை என்ற காரணம்பற்றி நாடகத் துறையில் ஒரு நூல் இயற்றவேண்டு மென்று இவர் கருதினர். இதன் பயனுக, மனோன்மணீயம் என்ற நாடக நூல் 1891-ல் இவரால் இயற்றப்பட்டது. இந்நூலைப்பற்றிய விமர்சனம் ஒன்று கமலாம்பாளின் ஆசிரியராகிய இராஜம் அய்யரால் கிறிஸ்தவ கலா சாலைப் பத்திரிகையில் (Vol. X. 148) எழுதி வெளி யிடப்பெற்றது. இன்றுவரையும் இந் நாடகநூலைக் காட்டிலும் சிறந்த இலக்கிய நாடகம் தமிழ் மொழி யில் தோன்றியது இல்லை. இந்நூலினுல் ஆசிரியர் மனப்பான்மையும் நமக்குச் சிறிது விளங்குகிறது. பண்டித வர்க்கத்தினரையும் ஒருபால் தழுவி, முற் போக்காளரையும் ஒருபால் தழுவி, இந்த அரிய நாட கம் இயற்றப்பெற்ற தெனச் சொல்லலாம். பழைய முறைகளை முற்றும் கைவிட்டுவிடாது புதிய முறை களில் நூல் இயற்ற வேண்டும என்ற மனப்பான்மை யானது இப்போதுள்ளவர்க்கும் ஒத்ததாகவே உள் ளது.

**பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற்**
**பெயர்த்தல் வேண்டும்**
**இறவாத புகழுடைய புதுநூல்கள் தமிழ்மொழியில்**
**இயற்றல் வேண்டும்**

என்றனர் பாரதியார்.

இப் புதுமுறை ந[illegible]ரும ஐரோப்பிய நாட்டு அறிஞர்கள ச[illegible]த இலக்கியச் செல்வங்களை ஒட்டியிருக்[illegible]ணடும் என்பதும் சுந்தரம் பிள்ளையின் மற்றொரு மனப்பான்மை. இவ்விருவகை மனப்பான்மையும் மனோன்மணீய நாடகத்திலே நன்குகப் பிரதிபலிக்கிறது. இக்காரணத்தாலேயே தமிழ் நாட்டிலுள்ள அனைவராலும் இந்நூல போற்றி வரவேற்கப்பட்டது. இது நடிப்பதற்கு என்று கருதப்படவில்லை; கற்று அனுபவிப்பதற்கு என்றே இயற்றப்பட்டதாகும். இந்நூலின் அருமைபெருமைகளையெல்லாம் விரித்தற்கு இடம் இதுவன்று.

இந்நூல் இயற்றப்பட்ட காலத்தில் வேறொரு நூலும் தமிழ்நாட்டுப் பெரியார்களுள் ஒருவராகிய பூண்டி அரங்கநாத முதலியார் அவர்களால் இயற்றப் பெற்று வெளிவந்தது. இந்நூல்தான் கச்சிக் கலம்பகம். இந்நூலைக் குறித்துப் பாராட்டு - உரைகளும் கண்டன - உரைகளும் பல பத்திரிகைகளில் வெளிவந்தன. பொதுவாகப் பண்டிதர் குழாங்கள் இந்நூலைப் பாராட்டி வந்தனர். தமிழும் ஆங்கிலமும் கற்ற அறிஞர்கள் இதனைக் கண்டித்து வந்தனர். இந் நூல் குறித்துக் கிறிஸ்தவகலாசாலைப் பத்திரிகையில் வெளிவந்த விமர்சன - உரைகளால் இங்குக் கூறியதன் உண்மை புலப்படும். நம் தமிழ் நாட்டில் முற்போக்காளர்களில் முன்னணியில் நின்றவர்கள் பழங்காலத்து இலக்கிய முறைகள் நாம் கையாளுதற்குத் தக்கனவல்ல என்ற கொள்கையை உடையவர்

களாயிருந்தார்கள். இதனைப் புலப்படுத்துவதற்கே மேற்கூறிய கச்சிக் கலம்பக விமர்சன - உரைகளை எடுத்துக் கூற நேர்ந்தது.

[illegible]க்கியத் துறையில் சுந்தரம்பிள்ளை பல வகையிலும் சிறப[illegible]தாகச் செய்த புதுப் பணியைக் குறித்து மேலே சொ[illegible]ன். இவர்செய்த இலக்கிய ஆராய்ச்சியைக் குறித்தும் சில [illegible]ல வேண்டுவது அவசியம். தமிழ் நூல்களிலே மிகப் பழ[illegible]யாகிய பத்துப்பாட்டு முதலிய நூல்களின் நயங்களைத் தமிழ் நாட்டினரன்றிப் பிறநாட்டினரும் கற்றுணர வேண்டும் என்னும் கருத்தால், ஆங்கிலத்தில் அந்நூல்களை மொழிபெயர்த்து இவர் வெளியிட்டார். முருகாற்றுப் படையும், நெடுநல்வாடையும், மதுரைக்காஞ்சியும் இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டனவாம். இவைகள் சென்னைக் கிறிஸ்தவ கலாசாலைப் பத்திரிகையில் முதன்முதலாக அச்சில் தோன்றின. பின்னர், தமிழ்ப் புராதன கலைஞன் (Tamilian Antiquary) என்ற தொகுதியில் இவை வெளிவந்தன. இவற்றால் இவரது ஆழ்ந்த தமிழறிவும் கவிச் சுவையை இனிது உணரும் பேராற்றலும், அச்சுவையைப் பிறர் மனங் கொள ஆங்கிலத்தில் அழகுற விளக்கும் எழுத்து வன்மையும் நன்றாகப் புலப்படுகின்றன. இம் மொழிபெயர்ப்பு நூல்களை வாசிக்குந்தோறும் மூல நூலைக் கற்றுச் சுவையை நுகர வேண்டும் என்ற அவா யாவர்க்கும் தோன்றுதல் இயல்பு.

தமிழிலக்கியச் சுவையை ஆராய்ந்து அனுபவித்ததுபோலவே, இலக்கியச் சரித்திர ஆராய்ச்சியிலும் சுந்தரம்பிள்ளையின் மனம் ஈடுபட்டது. இலக்கிய சரிதம் அக்காலத்தில் புராணசரிதமய மாகவே இருந்தது. நூறு வருஷம், ஆயிரம் வருஷம் முதலிய கால - அளவு இலக்கியத்தைக் குறித்து எழுதி வந்த

வர்களுக்கு ஒரு பொருட்டாகவே தோன்றியதில்லை. யுகக்கணக்கிலே ஈடுபட்ட நம்மவர்க்கு இவ்வளவு வருஷங்கள் அற்பமாகவே தோன்றின. ஆகவே சரித்திர-உணர்ச்சி மிகவும் குன்றிய நிலையில் இருந்துவந்தது. வழியும் துறையும் இல்லாமல் இலக்கிய சரிதங்கள் எழுதப்பட்டு வந்தன. இதனைக் கண்டு வருந்திய சுந்தரம் பிள்ளை இத்துறையிலும் நூல் எழுதுவதற்கு முன் வந்தனர். இந்த முயற்சியின் விளைவாகவே திருஞானசம்பந்த சுவாமிகளின் காலம் என்ற அரிய சிறந்த சரித - ஆராய்ச்சி யுரை தோன்றியது. இவ் ஆராய்ச்சி யுரையிலே கண்ட முடிபுகள் பிற்காலத்துக் கண்டுகொள்ளப்பட்ட சிலா சாஸனங்களால் உறுதி யடைந்தன. இன்றுகாறும் இலக்கிய சரித ஆராய்ச்சிக்கு ஓர் எடுத்துக் காட்டாகவும் இந்நூல் விளங்குகிறது. மேற்குறித்த இலக்கிய முயற்சிகள் எல்லாம் தமது பதவிக்குரிய தொழிலில் அவகாசம் உள்ள காலங்களில் எழுதப்பட்டன வாகும். கலாசாலையில் கல்வித் துறையில் இவரது தொண்டின் திறத்தை இவரிடத்துக் கற்ற மாணுக்கர்கள் வாயாரப் புகழ்ந்து கூறியதை நான் நேரில் கேட்டிருக்கின்றேன். தத்துவ சாஸ்திர சம்பந்தமாக இவர் எழுதிய ஆராய்ச்சி யுரைகளும் பலவாகும். 'அவைகளெல்லாம் உயிர்த் தத்துவம் நிரம்பியனவாக உள்ளன; வாசிப்போருக்குப் பலவகையாக அறிவூட்டத்தக்கன; அவர்களுக்கு மேன்மேலும் ஊக்கத்தைத் தரத் தக்கன' என்று ஒரு மதிப்புரையாளர் கூறுகிருர்.

இவருடைய நல்லுதவியைச் சென்னை ஸர்வகலாசாலை பல ஆண்டுகளாகப் பெற்றுவந்தது. தத்துவ சாஸ்திர பாட நியமன சங்கத்தில் சில ஆண்டுகள் உறுப்பினராய் இருந்தார். கல்வித்துறையில் இவர்

செய்துவந்த தொண்டுகளைப் பாராட்டி 1891-ம் வருஷத்தில் ஸர்வகலாசாலையார் தங்கள் ஸர்வகலா சாலையின் துணையங்கத்தினராகச் (F. M. U.) செய்து கௌரவித்தனர். சென்னை அரசாங்கத்தினரும் இவருக்கு ராவ்பகதூர் என்ற பட்டத்தை அளித்தனர்.

இங்ஙனமாகப் பல துறைகளிலும் ஓய்வு ஒழிவின்றி உழைத்து வந்ததன் இடையே திடீரென்று பிளவை கண்டு 1897-ம் வருஷம் ஏப்ரில் மாதம் 25-ம் தேதி தமது 42-வது வயதில் சுந்தரம் பிள்ளை உலகினின்று மறைந்தார். இவரது அகால மரணத்தைக்குறித்துத் தமிழ்நாடு பெரிதும் வருந்தியது. இவர் நீண்ட காலம் வாழ்ந்திருக்கும்படியான பாக்கியத்தைத் தமிழ்நாடு பெற்றிருக்குமானால் இன்னும் எத்தனையோ துறையில் நிலைத்த பயன் தரத்தக்க செயல்களை இப்பெரியார் செய்திருப்பார் என்பது திண்ணம். இவருக்கு விதித்த சுருங்கிய ஆயுட்காலத்தில் தானும் இவர் செய்துள்ள தமிழ்ப் பணிகள் மிகவும் போற்றத்தக்கன. தமிழ் - மக்களது உள்ளத்தில் இவரது ஞாபகம் என்றும் புலராது பசுமை பூத்து விளங்கும் என்பதில் ஐயமில்லை.

சுந்தரம் பிள்ளை நடுத்தரமான உயரமுள்ளவர். சற்றே ஸ்தூலித்த சரீரம். மாநிறம். அபூர்வ சோபையோடு வசீகரமாய் அமைந்த முகம். அறிவொளியும் அன்பும் மிளிர்ந்து அமர்ந்து நோக்குங் கண்கள். புன்னகை தவழும் இதழ்கள். இனிமையும் அழகும் நகைச் சுவையும் ததும்பும் பேச்சு வன்மை. இவர் செல்லுமிடங்களில், கல்வியாளர்கள் திரளாக வந்து இவரது அரிய சொற்களைக் கேட்பதற்குக் கூடிவிடுவார்களென்று கேள்வியுற்றிருக்

கிறேன். எப்பொழுதும் இலக்கியம், சரித்திரம், தத்துவ சாஸ்திரம் முதலியவற்றின் ஆராய்ச்சியிலே இவர் தோய்ந்திருந்தார். தமிழ் மக்கட்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்கியவர். இவர் இயற்றியுள்ள தொண்டின் நெறியைக் கடைப்பிடித்துத் தமிழறிஞர்கள் உழைத்து வந்தால், தமிழன்னை பெருஞ் சிறப்பு எய்துவள் என்பது உறுதி.

## தமிழ்த் தொண்டு

மனோன்மணீயம் என்னும் தமிழ் நாடகநூலை அறியாதவர்கள் இல்லை. இதில்வரும் தமிழ்த் தெய்வ வணக்கம் தமிழர்கள் அனைவரும் போற்றுவது. இது தான் நமது மொழியை ஒரு தெய்வமாக்கி ஒரு புதுச் சமயத்தை முதன் முதலில் வகுத்துத் தந்தது. புதி தாய்த் தோன்றிய வழிபாட்டிலே தமிழ்மக்கள் ஒரு முகமாய் உழைத்து ஈடுபடுவாராயின் தங்களிடையி லுள்ள சாதிச் சச்சரவுகளின் கொடுமை யெல்லாம் ஒழிந்து ஒற்றுமையோடு இன்புற்று வாழ்வர் என்பது திண்ணம்.

மேலும் இந்நாடகந்தான் சில நூற்றாண்டுகளாக மறைந்திருந்த காதலின் லட்சியத்தை மீண்டும் நம் மனக்கண்முன் கொண்டுவந்து காட்டி நமது சமுதாய வாழ்விற்குப் புதிய நெறியொன்றை உதவியது. இந்த லட்சியத்தை இந்நூலில் காண்பதுபோல் தமிழ் இலக்கியத்தில் வேறெவ்விடத்தும் காணமுடியாது.

துன்பே நிறையும் மன்பே ருலகாம்
எரியுங் கானல் விரியும் பாலையில்
திரியும் மனிதர் நெஞ்சம் சிறிது
தங்கி அங்கு அவர் அங்கம் குளிரத்
தாருவாய்த் தழைத்தும், ஓயாத் தொழிலில்
நேருந் தாகம் நீக்குவான் நிமல
ஊற்றா யிருந்து அவர் உள்ளம் ஆற்றியும்,
ஆறலை கள்வர் அறுபகை மீறில்
உறுதுணையாய் அவர் நெறிமுறை காத்தும்,
முயற்சியாம் வழியில் அயர்ச்சி நேரிடில்
ஊன்று கோலாய் அவருக்கும் உயர்த்தியும்,
இவ்விதம் யாரையும் செவ்விதிற் படுத்தி,
இகத்துள சுகத்திற்கு அளவு கோலாகி,
பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்,

இல்லறம் என்பதன் நல்லுயிரே யாய்,
நின்ற காதலின் நிலைமை, நினையில்,
இரும்பும் காந்தமும் பொருந்தும் தன்மைபோல்,
இருவர் சிந்தையும் இயல்பா யுருகி
ஒன்றும் தன்மை அன்றி, ஒருவரால்
ஆக்கப் படுபொருள் ஆமோ? (I, iv, 35—104)

இக்காதற்குரிய பெண்களை மிருகப்பிராயமெனக் கருதி நடத்தி வந்தோம். இது தமிழ்மக்களுக்கே ஒரு வசை. இவ்வசையை நீக்கிப் பெண்களுக்கு இயல்பா யுரிய ஸ்தானத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டும் என்பதைக் குறிப்பது கீழ்வரும் பகுதி :

நியக்கமும் மயக்கமும் செறிவது அரிவையர்
உள்ளப் பரப்பில் ஒருபுறத் தன்றி,
பள்ளத் தாழ்ச்சியிற் பரிவும், கொள்கை
விள்ளா முரணும், மெய்மையில் தெளிவும்,
உள்ளார்; அவர்தம் உறுதிநீ உணராய்...
மாசிலா வையகத்து இவ்வுயிர் வாழ்க்கை
ஆம்பெருங் கடலுள் போம் மரக்கலனும்
ஆடவர் நெஞ்சம், அறத்துறை அகன்று,
நீள்திசை சுழற்றும் நிலையிலாக் காற்றும்
திண்ணயம் அற்ற எண்ணம் இயக்கச்
சென்றுழிச் சென்று, நன்றறிவு இன்றி
அலையா வண்ணம், அறத்துறைக் குடாவில்
நிலைபெற நிறுத்து நங்கூரமாய், பின்னும்
செய்வினை முயற்சியிற் பொய்வகைப் புன்னெறிக்கு
எற்றுண்டு அகன்று பற்றொன்று இன்றி
ஆசையாம் திசை தொறும் அலைந்து திரிந்து
கொடாவணங் கடாவிக் கெழுமிய அன்புசேர்
அறப்பிடி கடைப்பிடி யாகக் காட்டிச்
சிறப்புயர் சுகத்துறை சேர்த்து சுக்கானாய்
நின்றது மங்கையர் நிலைமை ......அன்பும்நற்
குணமு முளார் இல் துணைவ ராயின்

*இல்ல தென் உலகில் ? இவற்றுடன் கல்விசேர்*
*நல்லறிவு உளதேல், பொன்மலர் நாற்றம்*
*பெற்றவா றன்றோ ? எற்றோ மடமை !*
*கேட்டிட வேட்டவை யாவையும் ஈயும்*
*கற்பக தருவென அற்பமும் கருதாது*
*அடியுடன் முறித்து முடிபுற எரித்துக்*
*கரிபெற முயன்ற கம்மியனே என,*
*தனக்கென வாழும் தனி மிருகத்தின்*
*மனக்கோள் நிமிர்த்து மற்றையர் இன்பமும்*
*துன்பமும் தனதா அன்பு பாராட்ட,*
*மெள்ள மெள்ளத் தன் உள்ளம் விரித்துப்*
*பொறையும் சாந்தியும் படிப்படி புகட்டிச்*
*சிறிது சிறிது தன் சித்தம் தெளித்துத்*
*தானெனும் நினைப்பும் தனக்கெனும் இச்சையும்*
*ஓய்வுறச் செய்து மற்றொன்றாய் நின்ற*
*எங்கும் நிறைந்த பேரின்ப வெள்ளம்*
*முங்கி அதனுள் மூழ்கிட யாரையும்*
*பக்குவம் செய்யும் நற்பள்ளிச் சாலை, இவ்*
*இல்லறம் என்பதோர் நல்லுணர்வின்றி...*
*கெடுத்திடும் மாந்தரின் கெடுமதி என்னே !*

(II, ii, 125 முதல)

லட்சிய வாழ்வுக்கு அடிப்படையாய் விளங்குவன தேசபக்தியும் சுதந்திர தாகமும். இவற்றையும் முதன் முதலாகத் தமிழ் நாட்டில் விதைத்தது இந் நாடகமே யாகும்.

*கேட்பீர் ஒரு சொல் ! இளர்போர்க் கோலம்*
*நோக்கி யாம் மகிழ்ந்தோம். நுமது பாக்கியமே*
*பாக்கியம். ஆ ! ஆ ! யார்க்கு இது வாய்க்கும் ?*
*யாக்கையின் அரும் பயன் வாய்த்ததிங் குமக்கே.*
*தாயினும் சிறந்த தயை பூண்டிருந்த நும்*
*தேயமாந் தேவிக்குத் தீவினை யிழைக்கத்*

துணிந்த இவ்வஞ்சரை எணுந்தொறும்
எணுந்தொறும்...
களங்கமில் நும்முகம் காட்டும் இச் சினத்தீ
கண்டு அப் பாண்டியே கொண்டனள் உவகை.
ஒரு துளியேனும் நீர் உண்டுளீ ராயின்
கருதுவீர் தாம்பிர பன்னியின் கட்டுரை:
' மக்காள் ! அருந்தி வளர்மின் ! நுமக்கு
மிக்கோ ரில்லா வீரமாய்ப் பரந்து
முது சுதந்திரத்தின் முத்திரை யாகி
இது பரிணமித்து உம்இதயத்து உறைக !
அன்னியன் கைப்படா இந்நீர் கற்பிற்கு
இழிவுறின் மார்பினின்று இதுவே சோரியாய்ப்
பொழிக நீர் பொன்றிடும் அளவும் !' என்றன்றோ
வாழ்த்தி நுந்தமை வளர்த்தனள். அவளுரை
தாழ்த்தாது இவண்நீர் போர்த்த போர்க்கோலம்
பார்த்தால் ஆர்த்து அவள் வாழ்த்தாது என்செய்வள் ?
பழையோர் பெருமையும் கிழமையும் கீர்த்தியும்
மன்னிய அன்பின் நும் அன்னையர் பாடி
நித்திரை வரும்வகை யொத்தறுத்து உமது
தொட்டில் தாலாட்ட, அவ் இட்டமாம் முன்னோர்
தீரமும் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணும் கண்ணீர் நிறையக்
கண்துயிலாது நீர் கனிவுடன் கேட்ட
வண்தமிழ் மொழியால் மதித்து இக்காலம்
' ஆற்றிலம் : ஆண்மையும் உரிமையும ஒருங்கே
தோற்றனம்' எனச் சொலத் துணிபவர் யாவர் !
உரிமைமேல் ஆண்மை பாராட்டார் சாந்தம்,
பெருமையில் பிணத்திற் பிறந்ததோர் சீதம்.
அந்தணர் வளர்க்கும் செந்தழல் தன்னிலும்
நாட்டு அபிமானம் உள் மூட்டிய சினத்தீ
அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு !
போர்க்குறிக் காயமே புகழின் காயம்.
யார்க்கு அது வாய்க்கும் ! ஆ ! ஆ ! நோக்குமின் !
அனந்தந் தலைமுறை வருந் தனி மாக்கள்

தினந்தினம் தாம் அனுபவிக்கும் சுதந்திரம்
தந்த தம் முன்னோர் நொந்தபுண் எண்ணிச்
சிந்தை யன்பு உருகிச் சிந்துவர் கண்ணீர்.
புண்ணோ ? புகழின் கண்ணே! எவரே
புண்படாது உலகிற் புகழுடம்பு அடைந்தார் ?
புகழுடம்பு அன்றி இவ் இகழுடம்போ மெய் ?

(iv, i, 79 முதல்)

இங்ஙனமாகத் தமிழ்த் தெய்வ பக்தி, காதற் பெருமை, மகளிர் மாண்பு, நாட்டுப் பற்று, சுதந்திர வுணர்ச்சி என்பனவற்றைத் தமிழ சமுதாயத்திற்கு உணர்த்தும இந்த அரிய நாடகத்தை இயற்றிய தமிழ்ப் பெரியார் யார் ?

ஆசிரியர் சுந்தரம் பிள்ளையே.

இவர் பிறந்தது ஆலப்புழையில் 1855-ம் வருஷம் ஏப்ரில் 4-ம் தேதியில். இறந்தது 1897-ம் வருஷம் ஏப்ரில் 25-ம் தேதி; திருவனந்தபுரத்தில். 42 ஆண்டுகளே உயிர் வாழ்ந்தார்.

1871 - ல் மெட்ரிக்குலேஷன் பரீக்ஷையிலும், 1873-ல் எப். ஏ. பரீக்ஷையிலும், 1876-ல் பீ. ஏ. பரீக்ஷையிலும் தேறிப் பட்டம் பெற்றார். 1880-ல் தத்துவ சாஸ்திரத்தில் எம். ஏ பட்டம் பெற்றனர். இதனால் இவரை எம். ஏ. சுந்தரம்பிள்ளை யென்று குறிப்பது பெருவழக்காயிருந்தது. திருவனந்தபுரம் அரசாங்கத்தில் பிறவகை சிரஸ்தாராக இவர் இருந்த சிலகாலம் தவிர, தமது ஆயுள் முழுவதும் அந்நகரி லுள்ள மகாராஜா கல்லூரியிற் பேராசிரியராகவே விளங்கினார். இவர் வாழ்ந்த சிறிய கால அளவையில் எவ்வளவு அரிய பெரிய செயல்களைச் செய்திருக்கிறார் என்று நினைக்குந்தோறும் நமது மனம் அன்பினால் கனிந்து இவரைப் போற்றுகின்றது.

பூர்வசரித்திர ஆசிரியராக இவர் தொடக்கத்தில் நியமனம் பெற்றார். அச் சரித்திரங்களைப் பயிற்றுவித்து வரும்போது, தமது நாட்டின் பூர்வசரித்திரத்தையும் ஆராய வேண்டுமென்ற ஓர் அவா இவருக்கு உண்டாயிற்று. திருவிதாங்கூர்ப் பூர்விக அரசியல் வரலாறுகளைப் பற்றி நன்றாக ஆராய்ந்து ஒரு நூல் எழுதினர். இது அந்நாட்டுச் சரித்திரத்திற்கு முக்கிய ஆதாரங்களுள் ஒன்றாக இன்றும் விளங்குகின்றது. இந்நூலின் பொருட்டு, திருவிதாங்கூர் மகாராஜா அவர்கள் இவர் குடும்பத்தினர்க்குப் பரம்பரையாக மாதந்தோறும் ஒரு நன்கொடைத் தொகை அளித்து வர ஏற்பாடு செய்துள்ளார்கள். இது இச் சரித்திர நூலின் பெருமையை ஒருவாறு விளக்குகிறது.

இந்நூலை இயற்றிவருங் காலத்துத் திருவிதாங்கூரிலுள்ள சிலாசாஸனங்களை நன்கு பரிசோதிக்க வேண்டுவது அவசியமாய் முடிந்தது. ஆனால், அச் சாஸனங்கள் படியெடுக்கப் பெறாமையினாலேயும் அச்சில் வெளியிடப் பெறாமையினாலேயும், இவர் பெரிதும் வருந்தி யுழைக்கவேண்டிய தாயிற்று. தாமே பல இடங்களுக்குச் சென்று சிலாசாஸனங்களைக் கண்டு பிடித்துப் படியெடுக்கும்படி நேர்ந்தது. இவ் இடர்ப்பாடுகளை யெல்லாம் திருவிதாங்கூர் அரசாங்கத்தினர்க்கு அறிவித்து அந்நாட்டில் ஒரு சிலாசாஸன இலாகா நிறுவி, அதில் தாமே கௌரவ - தலைவராக விளங்கி, பல அரிய சாஸனங்களை வெளியிட்டுச் சரித்திர உணர்ச்சி பெருகும்படி செய்தனர்.

சரித்திர உணர்ச்சியைக் காட்டிலும், உண்மையான விஞ்ஞான உணர்ச்சி மிகப்பெரிதும் குன்றியிருப்பதை அனுபவ வாயிலாகத் தெரிந்து கொள்வதற்கு ஒரு வாய்ப்புச் சுந்தரம் பிள்ளைக்குக் கிடைத்தது. தமது கலாசாலையில் தத்துவபோதகாசிரியரா யிருந்த

டாக்டர் ஹார்வி இங்கிலாந்துக்குச் சென்றுவிட்டார். உடன் பிள்ளை தாமே தத்துவ ஆசிரியராக நியமனம் பெற்று, தத்துவநூலைப் பேரார்வத்துடன் கற்பித்து வந்தனர்.

இந்தச் சாஸ்திரத்தை நன்குணர வேண்டுமாயின் மேலை நாட்டு விஞ்ஞான அறிவும், நமது நாட்டுத் தத்துவ ஞானத்தில் நல்ல பயிற்சியும் வேண்டுமென்பது விரைவிற் புலப்பட்டது. இவ்விருவகை அறிவும் பொதுமக்களிடையே நன்கு பரவ வேண்டும் என்பதையும் சுந்தரம் பிள்ளை எளிதிற் கண்டார். அறிவு வளர்ச்சியின் பொருட்டுத் திருவிதாங்கூர் அரசாங்கத்தினரைப் பொதுப் பிரசங்க ஸ்தாபனம் ஒன்று நிறுவப் பண்ணி, அதில் தாம் அடிக்கடி சாஸ்திரப் பொருள் பற்றி விரிவுரை நிகழ்த்தி வந்தனர். தத்துவ சாஸ்திரத்தில் விஞ்ஞான சாஸ்திரப் பாகுபாடு (Classification of Sciences) என்ற பொருள் பற்றி அரிய நூலொன்று 'நூற்றொகை விளக்கம்' என்ற பெயருடன் வெளிவருதற்கு இந்த விரிவுரைகள் தாம் முதற் காரணமா யிருந்தன. அயலிடங்களிலிருந்தும் அறிவிற் சிறந்த பிரமுகர்களைக் கொண்டு பல அரிய விரிவுரைகள் நிகழ்த்தி வந்தனர். இவரது ஊக்கத்தால் உண்மையான விஞ்ஞான உணர்ச்சியும் தத்துவ நூல் உணர்ச்சியும் நமது தமிழ் நாட்டில் தோன்றத் தொடங்கின.

தத்துவ நுட்பப் பொருள்களை எவ்வளவு ஆர்வத்துடன் போதித்து வந்தனரோ, அவ்வளவு ஆர்வத்துடன் கற்றும் வந்தனர். இப் பேராசிரியர் ஒரு குருவை யடுத்துக் கற்பதை இழிவெனக் கருதவில்லை. 'கல்வி கரையில' என்பதை உள்ளபடி உணர்ந்தவரல்லவா? கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தரசுவாமிகளைக் குருவாகக் கொண்டு வேதாந்த ரகசியங்களை அறிந்து

வந்தனர். இந்தப் பெரியாரை மிகவும் அந்தரங்க பக்தியுடன் போற்றியுமுள்ளார்.

நூற்பொருகை விளக்கத்திலுள்ள முக்கியமான ஒரு பகுதியைக் குறித்து இங்கே குறிப்பிட வேண்டுவது அவசியம். 'கலைச்சொல் லாக்கம்' என்ற ஒரு தொடர் இப்பொழுது எங்கும் முழங்குகிறது. மகா நாடுகள் கூட்டப் படுகின்றன. சாதிச் சச்சரவுகளை விளைத்துத் தமது ஆத்திரங்களைத் தீர்த்துக் கொள்ள இதுவே தக்க தருணம் என்று பலரும் இதில் சேர்ந்துள்ளார்கள்; பலவகை முயற்சிகளும் நடைபெற்று வருகின்றன. இந்நிலையில் சுந்தரம் பிள்ளை கைக்கொண்டுள்ள சிறந்த முறையே வழிகாட்டி ஊக்கம் அளிக்கிறது. நூற்பொருகை விளக்கத்திலே ஆங்கிலத்திலுள்ள பல விஞ்ஞானச் சொற்களுக்குரிய தமிழ் மொழிபெயர்ப்புக்களை இப்பேராசிரியர் தந்திருக்கின்றனர். வட சொற்களை விலக்கும் கருத்தே இவரிடம் கிடையாது. அறிவுப்பெருக்கம் ஒன்றே தக்க குறிக்கோளாகக் கருதப்பட்டது. இதற்கு இடையூறு விளைப்பனவெல்லாம் தற்கொலையாகும் என்பதுநன்கு கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. தமிழின் வளர்ச்சிக்கும் தமிழ் மக்களது அறிவின் வளர்ச்சிக்கும் வேண்டுவன செய்தவர்களில் சுந்தரம் பிள்ளை தலைசிறந்தவராவர். இவர் காட்டிய முறை கைக்கொள்ளத் தக்கதென்பது கூறவும் வேண்டுமா?

தத்துவநூல் மூலமாகத் தமிழரது அறிவுவளர்ச்சிக்கு முயன்றுவந்தது போலவே, தமிழ் வளர்ச்சிக்கும் இவர் பெரிதும் உழைத்து வந்தனர் இவரது தமிழார்வம் இவரோடு உடன்பிறந்த தென்று சொல்லலாம். இளமையிலேயே தாய்மொழியை நன்கு கற்றவர். இவரது முன்னோர்கள் மதுரைப் பிரதேசத்திலிருந்து வியாபாரத்தின் பொருட்டு மலையாளப் பிர

தேசத்திற்குச் சென்றவர்கள். பரஞ்சோதி முனிவரது திருவிளையாடற் புராணத்தை இளமையிலேயே ஆர்வத்துடன் கற்றுத் தமிழ்ச் சுவையை நன்கறிந்தவர். தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இவர் ஈடுபட்டது சிறிதும் வியப்பன்று.

இவரது உள்ளத்தைப் பெரிதும் வருத்தியது ஒன்று உண்டு. அது தமிழிலக்கியப் பரப்பில் நாடகம் யாதொன்றும் காணப் பெறுமையே. ஷேக்ஸ்பியர் முதலிய பெருங் கவிஞர்கள் தமது ஒப்பற்ற கவித்வ சக்தியை நாடகரூபத்தில் நன்கு வெளியிட்டுள்ளார்கள் அல்லவா? அவ்வகையான நாடகம் தமிழில் வரவேண்டுமாயின், தாம் அம்முறையைத் தமிழுலகிற்கு ஒருவாறு தெரிவித்தல் வேண்டும என்னும் கருத்து நனவினும் கனவினும் இவரைத் துன்புறுத்தி வந்தது. இதன் விளைவாகத்தான் 'மனோன்மணீயம் என்ற நாடகம் இவரால் இயற்றப் பட்டது. இந்த நாடகம் இப்பொழுது ஓர் உயர்ந்த தமிழிலக்கியமாகி (classic) விட்டது. இது தமிழ்ச் சுவையும், கவிச் சுவையும், நாடகச் சுவையும் ஒருங்கு கலந்து தித்திக்கிறது. இலக்கிய இன்பம் இத்தன்மையது என்பதை நாம் நுகர்ந்து மகிழச் செய்கிறது. ஆங்கிலக் கவிஞர்களின் கருத்துக்கள் மிகவும் அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றன. பாத்திரங்கள் ஒருவரோடொருவர் உரையாடும் பொருத்தமும் நயமும் பெருஞ் சிறப்பு வாய்ந்தன. இதிலே வந்துள்ள 'சிவகாமி சரிதம்' தனிப்பட எடுத்துப் பாராட்டும் தகுதி வாய்ந்தது. இந்நாடகத்தின் மதிப்புரை யொன்று கிறிஸ்தவ கலாசாலைப் பத்திரிகையில் (X, 148) கமலாம்பாள் ஆசிரியராகிய ராஜமய்யர் எழுதியது இங்கே குறிப்பிடத்தக்கது. தமிழும் ஆங்கிலமும் கலந்து பெற்ற அரும்பெறல் மகவு என்று இந்நாடகத்தைச் சொல்லலாம்.

இன்றுவரை இதனோடு ஒத்த சிறப்புடைய நாடகம் தமிழில் பிறிதொன்று தோன்றியதில்லை.

தமிழிலக்கிய வளர்ச்சியைப் பேணி வந்தமை போலவே, இவர் பண்டைத் தமிழிலக்கியச் சுவையையும் பேணினர். பலரும் இச் சுவையை அனுபவித்துத் தமிழின் பெருமையை நன்கு உணர வேண்டுமெனச் சுந்தரம் பிள்ளை கருதினர். தமிழ்மக்கள் மட்டுமே அன்றி, பிறநாட்டு மக்களும் இந்நுகர்ச்சிப் பயனைப் பெறவேண்டுமென்றும் விரும்பினர். இக்கருத்திற் கேற்ப, பண்டை இலக்கியங்களில் பெருஞ்சுவையுள்ளனவற்றைத் தெரிந்தெடுத்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டனர். இவையும் சென்னை கிறிஸ்தவ கலாசாலைப் பத்திரிகையில் முதன்முதல் வெளிவந்தன. பின்னர் 'தமிழ்ப்புராதன கலைஞன்' (Tamilian Antiquary) என்ற தொகுதியின் வாயிலாக வெளியிடப் பெற்றன. முருகாற்றுப் படை, நெடுநல்வாடை, மதுரைக் காஞ்சி : இம்மூன்றும் இங்ஙனம் சுவைபட மொழிபெயர்க்கப்பட்டவை. இவற்றால் சுந்தரம் பிள்ளையின் ஆழ்ந்த தமிழ்க்கல்வியும், கவிச் சுவையின் நயத்தை புணரும் பேராற்றலும், அதனைக் கற்போர் மனங் கொள்ளுமாறு ஆங்கிலத்தில் அழகுற விளக்கும் எழுத்து வன்மையும் மிகவும் நன்றாகப் புலப்படுகின்றன. இம் மொழிபெயர்ப்புக்கள் மூலநூல்களைக் கற்று இன்பந் துய்க்கும்படி தூண்ட வல்லன வாகும்.

தமிழிலக்கியப் பரப்பினையும் அதன் வரலாற்றினையும் சுந்தரம்பிள்ளையின் காலத்துள்ளார் நன்குணர்ந்தனரில்லை. ஒரு சில ஆங்கில ஆசிரியர்கள், தமது கொள்கைகளுக் கேற்ப, இவ்வரலாறுகளைத் திரித்துணர்ந்து நூல்கள் எழுதிவந்தனர். தமிழ் - இலக்கியங்களே கி. பி. 9-ம் நூற்றாண்டில் தான்

தோன்றத் தொடங்கின என்றுகூட ஒரு சிலர் துணிந்தனர். நாயன்மார்களும் ஆழ்வாராதியர்களும் ஸ்ரீ ராமாநுஜருக்குப் பின்பு வாழ்ந்தவர்கள் எனக் கதை எழுதினர் ஒரு சிலர். இவர்கள் ஒருபுறமிருக்க, நமது நாட்டிலுள்ள ஒருசிலர் கிருதயுகம் முதலியவற்றில் இன்னார் இருந்தனர் என்றும், தொல்காப்பியர் கி. மு. 10,000-ல் வாழ்ந்தன ரென்றும் இங்ஙனம் காலவரையறை செய்துவந்தனர். சரித்திர முறையில் சான்றுகளைக்கொண்டு இலக்கிய வரலாற்றை நிர்ணயிப்பது அவசியமாய் முடிந்தது. இந்த வேலையிலும் முதன் முதலாக முனைந்து உழைத்தவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையே. தமிழிலக்கிய வரலாற்றுப் பெருவழியில் சில சில மைல் - கற்களை நடுவித்தவர் இவரே. ஞானசம்பந்த சுவாமிகளின் காலத்தை நிர்ணயிப்பதற்கு எடுத்துக் கொண்டு, இலக்கியச் சான்றுகளாலும் சரித்திரச் சான்றுகளாலும் கி. பி. 7-ம் நூற்றாண்டின் முற்பகுதியென அக்காலத்தை வரையறுத்தனர். இவரது மரணத்திற்குப் பின்பு கிடைத்த கல்வெட்டினால் இவர் குறித்த காலம் சரியென உறுதியடைந்தது. இவரது சரித்திர ஆராய்ச்சியின் பெருமைக்கு இது ஒரு தக்க சான்றாகும்.

தமிழ் இலக்கிய வரலாறு ஒன்று எழுத வேண்டுமென்று இவர் மனத்தில் தோன்றியது. இதற்குரிய கருவிகளைச் சேர்ப்பதிலும், ஆங்கிலத்திலுள்ள பல இலக்கிய வரலாறுகளைக் கற்பதிலும், பற்பல தமிழ் இலக்கியங்களின் காலங்களை வரையறுத்தற்குரிய சான்றுகளைத் தேடித்தொகுப்பதிலும் இவர் முயன்ற வண்ணமா யிருந்தனர்.

இவற்றையெல்லாம் தமது ஆசிரிய வேலைக்குச் சிறிதும் குறைவு வாராதபடி செய்துவந்தார். கலாசாலையிலே இவரிடம் கற்ற மாணவர்களெல்லாம்

இவரது அபூர்வமான போதனைத் திறமையைப் பற்றி மிகவும் புகழ்ந்து கொண்டாடக் கேள்வியுற்றிருக்கிறேன். எப்பொழுதும் புன்னகை ததும்பும் முகம்; எப்பொழுதும் இனிமையான பேச்சு. அயலூர்களுக்கு இவர் சென்றால், அங்கெல்லாம் ஆங்கில அறிஞர்களும் சரித்திர அறிஞர்களும் தமிழறிஞர்களும் ஒன்றுகூடி இவரோடு உரையாடவும் ஆராய்ச்சி செய்யவும் வந்து சேர்வார்களாம். எவ்வளவு நுட்பமான விஷயமாயிருந்தாலும் தெளிவாகவும் ருசிகரமாகவும் எடுத்து விளக்கும் பேராற்றல் படைத்தவரென்று இவரைப் பலரும் புகழ்ந்திருக்கின்றனர்.

தாம் கடைசியாய் எடுத்துக்கொண்ட இலக்கிய வரலாறு முடியுமுன், இவர் நோய்வாய்ப் பட்டனர். உதகமண்டலம் (Ooty) சென்று சிலகாலம் வசித்துவர எண்ணினர். செல்லும்வழியில் திருக்குற்றாலத்தில் சில நாட்கள் தங்கினர். அங்கே பிளவை கண்டது. தமது இருப்பிடமாகிய திருவனந்தபுரத்திற்கு மீண்டு சென்றார். ஏற்கெனவே நீரிழிவு நோயுள்ளவராதலாலே, பிளவைக்கு ரணசிகிச்சை செய்தது அபாயமாய் முடிந்தது.

சுந்தரம் பிள்ளை தமிழுகத்துப் பெரியார்களுள் ஒருவர். இப்பெரியாரது ஞாபகச் சின்னம் நமது பல்கலைக் கழகங்களில் இல்லாதது தமிழ் மக்களாகிய நமக்கெல்லாம் பெருங் குறையே. இது ஒரு புறம் இருக்க, இவர் செய்து முடித்தற்குக் காலமில்லாது விடுத்த தொண்டுகளை நாம் முற்றுவிப்பதும் இவருடைய ஞாபகத்தைப் போற்றுதற்குரிய ஓர் அறிகுறியாகும். அவ்வழியில் இனியேனும் உழைத்து வருதல் நம்முடைய கடமையாகும்.

# வி. கனகசபைப் பிள்ளை*

சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலக் கல்வி தமிழ் நாட்டில் பரவத் தொடங்கிற்று. இதன் பயனாக, ஆங்கிலங் கற்ற தமிழறிஞர்கள் பலவேறு வழிகளில் தமிழ்ப்பணி செய்ய முற்பட்டனர். வசன நூல்கள், நாடகங்கள், விஞ்ஞான சாஸ்திர நூல்கள் முதலியவற்றை அவ்வத் துறையில் தகுதியுடையவர்கள் இயற்றிவந்தார்கள். சிலர் பழைய இலக்கண இலக்கியங்களைத்தேடி அச்சிற்பதிப்பித்துப்பண்டைத் தமிழறிவைப் பரப்பினர். சிலர் நமது தமிழ்நாட்டுப் பூர்வ சரித்திரத்தைச் சிலாசாஸனம், பண்டை யிலக்கியங்கள் முதலியவற்றின் துணைகொண்டு புலப்படுத்தினர். சிலர் தமிழரின் பண்டைக்காலத்து நாகரிகச் சிறப்பைத் தமிழ் நூல்களின் சான்றுகள் கொண்டு தெளிவித்தலை மேற்கொண்டனர். கடைசியிற்கூறிய முயற்சியில் ஈடுபட்டவர்களில் தலைசிறந்தவராவர் வி. கனகசபைப் பிள்ளை.

கனகசபைப் பிள்ளை தமிழ்க் கல்வியில் மேம்பட்டு விளங்கிய ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர். இவரது தந்தை விசுவநாதபிள்ளை யாழ்ப்பாணத்து மல்லாகம் என்ற ஊரிலிருந்து வந்தவர்; அங்கேயுள்ள அமெரிக்க மிஷன் அதிகாரிகளான டாக்டர் வின்ஸ்லோ, பெர்சிவல் முதலியவர்களால், சி. வை. தாமோதரம் பிள்ளை முதலானவர்களோடு கூடத் தமிழ் நாட்டுக்குக் கல்வி

* சென்னை அகில இந்திய ரேடியோவில் 28 - 5 - 43-ல் ஒலிபரப்பியது : அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

யின் பொருட்டாக அனுப்பப்பெற்றவர்; சென்னை ஸர்வகலாசாலையிலே பீ. ஏ. பட்டம் பெற்றபின், அரசாங்கத்தில் தமிழ்மொழிபெயர்ப்பாளர் பதவியில் இருந்தவர்; பல ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தவர்; தமிழ் - ஆங்கில அகராதி யொன்று இயற்றிச் சென்னை கிறிஸ்தவ இலக்கிய சங்கத்தின் மூலமாக வெளியிட்டவர்; யாழ்ப்பாண நாடு தமிழ்க் கல்விக்குச் சிறந்தது என்ற கீர்த்தியை வளர்த்தவர் களுள் இவர் ஒருவர். இவரது ஏக புத்திரரான கனகசபைப் பிள்ளைக்குத் தமிழார்வம் பிறவியிலேயே அமைந்தது என்று கூறுதல் மிகையல்ல.

கனகசபைப் பிள்ளை பிறந்தது 25 - 5 - 1855-ல்; சென்னை கோமளேசுவரன் பேட்டை, சந்திரபானு தெருவில், ஒரு வீட்டில். இவரது இளம் பருவத்தைக் குறித்து விசேஷமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால் கல்வியில் மிகவும் கருத்தூன்றிச் சிறந்தனரென்று ஊகிக்கலாம். ஆனரபில் ராமநாதன், ஸர். பொன் னம்பலம் முதலானவர்களுடன் சென்னை அரசாங்கக் கல்லூரியிற் கற்று மிக்க இளவயதிலேயே பீ. ஏ. பரீக்ஷையில் தேறிப் பட்டம் பெற்றனர். இவரை (Boy Graduate) பட்டதாரிப் பையன் என்று பல ரும் குறிப்பிட்டு வந்ததாகக் கூறுவர். தமிழறிவிலும் சிறந்தவராகவே இவர் விளங்கினர். ஆனால் பண்டி தர்களிடத்தில் வரன்முறை யாகக் கற்றனரென்று தெரியவில்லை. தமது தந்தையாரிடமே கேட்டுத் தெளிந்து தம்முடைய தமிழறிவை விருத்திபண்ணிக் கொண்டனர் போலும். அறிவு - நலத்தைப் பேணிக் கொண்டது போலவே, உடல் - நலத்தையும் இவர் இளமையில் பேணி வந்தனர். ஒரு முகம்மதியப் பயில் வானிடம் தேகப் பயிற்சி முறைகளைக் கற்று நாள் தோறும் அப்பியாசம் செய்து வந்தனர்.

பட்டம் பெற்றவுடனேயே தபால் இலாகாவில் ஓர் உத்தியோகம் கிடைத்தது. ஆனால் தமது அறிவும் ஆற்றலும் பிரகாசிப்பதற்கும் தமது உயிராசையாகிய தமிழாராய்ச்சி பெருகுவதற்கும் இவ்வுத்தியோகம் ஏற்றதன்றென முதலில் நினைத்தாரெனத் தோன்றுகிறது. ஏனெனில் சட்டப் பரீக்ஷைக்குப் படித்து பீ. எல். பரீக்ஷையில் தேறி, ஓர் ஆண்டு ரஜாப் பெற்று, மதுரையில் வழக்கறிஞர் தொழிலிலும் இவர் அமர்ந்திருந்தாரென அறிகிறோம். இவ்வாறு அமர்தற்கு முன், மதுரையில் அமெரிக்கன் மிஷன் ஆஸ்பத்திரியிலிருந்த தமது அம்மானாகிய டாக்டர் பொன்னையாவின் புதல்வி ஸ்ரீமதி செல்லம்மாளை 1876-ல் மணம் புரிந்தார். மதுரையிலே ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்களுடைய நட்பையும் இவர் பெற்றனர்.

ஆனால், வழக்கறிஞர் வேலையிலுள்ள இடர்ப்பாடு இவரை மீண்டும் தமது பழைய உத்தியோகத்திற்கே திரும்பும்படி செய்துவிட்டது. ஓரளவு லௌகிக சௌகரியங்கள் இருந்தாலன்றி இலக்கிய ஆராய்ச்சி இயலாதல்லவா? இந்தச் சௌகரியங்களை இவ்வுத்தியோகம் தந்ததனால், ஒருவாறு இதில் திருப்தியுங் கொண்டார். தபால் இலாகாத்துறையிலேயே தமது ஆயுள் முழுதுங் கழிக்கவும், அவகாசம் நேர்ந்த பொழுதெல்லாம் தமிழாராய்ச்சிகள் செய்துவரவும், இவர் உறுதிபூண்டனர். சிந்தையின் நிறைவே சிறந்த செல்வமென்று எண்ணிவிட்டனர். தமது உத்தியோக முறையில் இவர் மேல்மேலும் சிறப்பெய்தி விளங்கினார். இவரது அறிவாற்றல் முதலிய தகுதிகளும், நேர்மையும், சிரத்தையும், இவரது முன்னேற்றத்திற்குக் காரணமாக அமைந்தன. அதிவிரைவில் டிவிஷனல் மேலதிகாரி என்ற பதவியை அடைந்தனர்.

இப்பதவியின் நிர்வாகமுறையில் தமிழ்நாட்டிலுள்ள பலஇடங்களுக்கும் இவர்சுற்றுப் பிரயாணம் செய்யும் படி நேர்ந்தது. இப் பிரயாணங்களால் தமிழாராய்ச் சிக்குரிய சில சில வசதிகள் எதிர்பாராத வண்ணம் இவருக்கு எளிதிற் கிடைத்தன.

அக்காலத்திற் சங்க இலக்கியங்களிற் பெரும் பாலன அச்சில் வெளிவரவில்லை ; ஏட்டுப் பிரதிகளா கவே சிற்சில ரிடத்தில் அருகி யிருந்தன. இவைக ளின்றி இலக்கியக் கல்வியும் இலக்கிய ஆராய்ச்சியும் நடைபெற இயலாது. ஆகவே, சென்ற இடங்களி லெல்லாம் அச்சில்வாராத தமிழ் நூல்களின் ஏட்டுப் பிரதிகளைத் தேடிப் பெறுகின்ற முயற்சியைக் கைக் கொண்டனர். ஏராளமான ஏட்டுப் பிரதிகளைத் தொகுத்து வைத்திருந்தனர். அவைகளைக் கடிதத்திற் பெயர்த்தெழுதுவதற்கு அப்பாவுப்பிள்ளையென்ற ஒரு வரை அமர்த்தித் தம்முடனே 20 ஆண்டுக் காலமாக வைத்துக்கொண் டிருந்தனர். அப்பாவுப் பிள்ளையும் ஏடுகளைப் பிரதி செய்தும், தம் எஜமானர் சொல்லும் விஷயங்களைக் குறித்து வைத்தும், அவர் எழுதிய வற்றைச் சுத்தப் பிரதி செய்தும் உதவி வந்தார். தாம் தேடிப்பெற்ற அரிய பிரதிகளைத் தட்டுத் தடை யின்றிப் பதிப்பாளர்களுக்குக் கொடுத்துப் பயன் பெறவும் செய்தார். உதாரணமாக, டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுக்குப் பத்துப் பாட்டு, புற நானூறு, சிலப்பதிகாரம் முதலிய பண்டை யிலக் கியப் பிரதிகளை உதவிப் பேருபகாரம் புரிந்தனர். கனகசபைப் பிள்ளை போன்று விரிந்த மனப்பான்மை தமிழறிஞர்களுக்கு அமைந்திருக்குமாயின், எத்தனை யோ அரிய பழந்தமிழ் நூல்களை நாம் இன்று இழந் திருக்க மாட்டோம். ஏட்டுப் பிரதிகள் கொடுத்து உதவி புரிந்ததே யன்றித் தாம் அருமையாகக் கண்டு

தெளிந்த ஆராய்ச்சி யுண்மைகளையும் தமிழறிஞர் களுக்குத் தாராளமாக வெளியிட்டு உதவிவந்தனர். உண்மையெனத் தெளிந்தவற்றை மறைத்து வைப்பதனாற் சிறிதும் பயனில்லை; ஆராய்ச்சி பெருகாது; தமிழறிவு பரவாது. இவ்விளைவினை நன்றாக உணர்ந்திருந்தனர் நம் கனகசபைப் பிள்ளை.

தமது 29-வது வயதில் (1884-ல்) தந்தையையும், அடுத்த ஆண்டில் தாயையும், இவர் இழந்தார். தமது குழந்தைகளில் இருவரையும் சில ஆண்டுகளின்பின் இழந்தனர். இத் துக்க நிகழ்ச்சிகள் இவரை மேன் மேலும் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்தன. உண்மையான தமிழுணர்ச்சிக்கும், சுதேச சரித்திர உணர்ச்சிக்கும், சிலாசாஸன அறிவு இன்றியமையாதென உணர்ந்து, சாஸனங்களைக் கற்கத் தொடங்கினர். சுற்றுப் பிரயாணங்களிற் பல கோயில்களைப் பார்வையிட்டும் ஆங்காங்குள்ள சிலாசாஸனங்களைக் குறித்தெழுதித் தொகுத்தும் வந்தனர். சிலாசாஸனங்கள் பலவற்றை அப்பாவுப் பிள்ளையைக்கொண்டு முறையாகப் பிரதி செய்வித்தனர். அன்றியும், தாம் செல்லுமிடங்களிலுள்ள சமுதாய வழக்க வொழுக்கங்களையும் மக்களினத்தாரின் சிறப்பியல்புகளையும், சரித்திர விஷயங்களையும் நேரிற் கண்டும் கேட்டும் விசாரித்தும் தெரிவதை வழக்கமாகக் கொண்டனர்.

தமது தமிழ்க் கல்வியின் ஈடுபாட்டில் ஆங்கிலக் கல்வியைப் புறக்கணித்தவரல்லர். ஆங்கில வியாசங்கள் அடிக்கடி எழுதிவந்தனர். தமிழ்ச் செய்யுட்களை ஆங்கிலத்திற் செய்யுள் நடையில் மொழிபெயர்த்து இயற்றியும் வந்தனர். இவர் மனத்தில்,

திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்

என்ற கருத்துத் தோன்றி ஆங்கில மொழிபெயர்ப்பு

முயற்சியில் இவரைத் தூண்டி யிருத்தல்வேண்டும். ஆங்கிலத்திலும் நல்ல செய்யுட்களை இயற்றவல்லவ ரென்பது எட்வர்ட் இளவரசர் நமது நாட்டுக்கு விஜயம் செய்த பொழுது இவர் ஆங்கிலத்தில் பாடிய வரவேற்புக் கவிதைகளால் விளங்கும். இவை இள வரசர் வந்த அன்று மெயில் (Madras Mail) பத்திரி கையில் வெளிவந்தன. இக்கவிதைகள் அக்காலத்திற் பல அறிஞர்களாலும் பாராட்டப்பட்டன.

கனகசபைப் பிள்ளை தமது தமிழ்க் கல்வி, தேச சரித்திர வுணர்ச்சி, சமுதாய சரித்திர ஞானம், சிலா சாஸன ஆராய்ச்சி, ஆங்கிலக்கல்வி முதலிய அனைத் தும் பயன்படத்தக்க சிறந்த நூலொன்றை எழுதித் தமக்கு அழியாய்ப் புகழும் தமது தாய்மொழிக்கு மறக்கவொண்ணுப் பெருந் தொண்டும் இயற்றினர். '1800 ஆண்டுகட்கு முந்திய தமிழர்' (The Tamils Eighteen Hundred Years Ago) என்ற ஆங்கில நூலே இங்கே குறிப்பிடப்படுவது. இந்நூலின் பகுதி கள் 1895 முதல் 1901 வரை Madras Review என்ற சிறந்த ஆங்கிலப்பத்திரிகையில் வெளிவந்தன. 1892-ல் ஸ்ரீ சாமிநாதையரவர்களால் பதிப்பித்து வெளியிடப் பட்ட சிலப்பதிகாரத்தைப் பெரும்பாலும் ஆதார மாகக்கொண்டு இவ் ஆராய்ச்சிப் பெருநூல் எழுதப் பட்டது. இந்நூலில் தமிழ் நாடு, தமிழ் இலக்கியத் தின் தொன்மை, சிலப்பதிகாரத்தின் காலம் முதலி யனவும், தமிழகத்தின் நில விவரணம், எல்லைப் புற நாடுகள் முதலியனவும், அயல் நாடுகளோடு நிகழ்ந்த வாணிபத்தின் தன்மை முதலியனவும், சோழர், பாண்டியர், சேரர், குறுநிலமன்னர் முதலியோர் சரித மும், தமிழ சமுதாயத்தின் வாழ்க்கை நிலைமை முதலி யனவும் விரிவாய் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன. குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை யென்ற நூல்க

ளின் இயல்பும், சங்கப்புலவர்கள் சரிதமும், தமிழ் நாட்டில் வழங்கிய தத்துவ தரிசனங்கள், சமய பேதங்கள் முதலியனவும் மிகத் தெளிவாய்க் கூறப்பட்டுள்ளன.

இப்பகுதிகளைக் கற்றுணர்ந்தோர் கனகசபைப் பிள்ளையின் அறிவாற்றலையும், கல்விப் பெருமையையும், ஆராய்ச்சித் திறத்தையும் எழுத்து வன்மையையும் பெரிதும் புகழ்ந்து பாராட்டினர். இவைகள் ஆராய்ச்சி நிரம்பியனவா யிருந்தபோதிலும், கற்போர் உள்ளத்தைக் கவரத்தக்க இனிமையான அழகிய நடையில் நயம்பெற எழுதப் பெற்றிருந்தன. தமிழாராய்ச்சியின் போக்கு இவ்வகையா யிருத்தல் வேண்டும் என அறிவுறுத்தி ஆராய்ச்சியாளரின் கண்களை இவை திறந்தன. பலரும் இவற்றில் கண்ட நெறியையே பின்பற்றி ஆராய்ச்சிகள் செய்து வரலாயினர். இவற்றிற் கூறிய முடிவுகளையே அடிப்படையாகக் கொண்டு பல ஆராய்ச்சிகளும் எழுந்தன. இவற்றின் நயங்களை முற்றும் அனுபவித்த ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் இவற்றைத் தொகுத்து நூல்வடிவில் வெளியிட வேண்டுமென விரும்பினர். அவ் விருப்பிற்கிணங்கி 1904 - ல் அச்சியற்றி நூலை ஸ்ரீ மணி ஐயரவர்களுக்கே கனகசபைப் பிள்ளை சமர்ப்பணம் செய்தார்.

மதராஸ் ரெவியூவில் வெளிவந்ததை வாசித்த சில அன்பர்கள் ஸர்வகலாசாலையோடு இவரைத் தொடர்பு படுத்த விரும்பினார்கள். பீ. ஏ., எம். ஏ. முதலியவற்றின் பரீக்ஷை அதிகாரியாகச் சில ஆண்டுகள் இவர் நியமனம் பெற்றனர். ஸர். வி. பாஷ்யமையங்கார், ஸர். ஸி. சங்கரன் நாயர் முதலிய பெரியார்கள் இவர்க்குஸர்வகலாசாலைத் துணையங்கத்தினர் (F. M. U.) என்ற பதவியை அளிக்க முயன்றனர்.

இம் முயற்சி நிறைவேறு முன்னர் விதி குறுக்கிட்டு விட்டது.

ஆனால், புலமை நிரம்பிய நன்மக்களது பேரவையாகிய மதுரைத் தமிழ்ச் சங்கம் இவரைப் போற்றிப் பாராட்ட முற்பட்டது. 1905 - ல் இச் சங்கத்தின் வருஷாந்தர மகாநாட்டில் இப்பேரறிஞர் தலைமை தாங்கினர். அப்பொழுது இவர் தாம் ஆற்றிய இனிய பிரசங்கத்தால் கேட்டோர்கள் மனத்தைக் கனிவித்தனர். இச் சங்கத்திலிருந்து வெளிவரும் செந்தமிழ்க்கு அரிய பல விஷயங்களைக் குறித்து ஆராய்ச்சியுரைகள் எழுதித் தமிழறிஞர்களை மகிழ்வித்தனர். ஆங்கிலத்திற் போலவே தமிழிலும் இவர் அழகிய நயமான நடை எழுதவல்லவரென்பதை இவ் அரிய கட்டுரைகள் தெளிவிக்கின்றன.

கனகசபைப் பிள்ளைக்குப் பெரும்புகழ் விளைத்த நூலினை வெளியிட்டதன் பின்னர், இவர் நீடித்த காலம் உயிர் வாழவில்லை. ஆனல் இவரது ஆராய்ச்சி யுள்ளமோ எத்தனையோ பொருள்களைப் பற்றி நூல்கள் எழுதவேண்டுமென்று கனவுகள் கண்டுகொண்டிருந்தது. சோழ வமிசத்தைக் குறித்து ஒரு சரித்திர நூல் எழுதவேண்டுமென்று எண்ணி, அதற்குரிய குறிப்புக்களை இவர் தயார்செய்து வைத்திருந்தனர். இவற்றிற் சில செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடப்பட்டன. சிலாசாஸனங்களை முறைப்பட ஆராய்ந்து குறிப்புக்கள் எழுதி வைத்தனர். இவற்றுள் ஒன்றும் இப்போது கிடைக்கவில்லை.

மேற்கூறிய முயற்சிகளெல்லாம் தமக்கு அவகாசம் கிடைத்தபோது செய்தனவேயாம். தமது உத்தியோகக் கடமையிற் சிறிதும் இவர் தவறியவரே

யல்லர். தபால் இலாகாத் தலைவர் இவரைச் சிலா கித்து இவருடைய பெருந்தகுதியை நன்கு மதித்திருந் தனர். தமது உத்தியோக முறையில் இவர் காஞ்சீ புரத்திற்குச் சென்றிருந்தபோது 21 - 2 - 1906-ல் திடீரென்று உலக வாழ்வை நீத்தனர். தமிழன்னை தனது அரும் பெறற் புதல்வருள் ஒருவரை இழந்து விட்டாள்.

சுமார் ஐந்தே முக்கால் அடி உயரம், பயிற்சியால் உரம் பெற்று இறுகிய தேகக்கட்டு; அகன்ற மார்பு; பரந்த முகம்; நெற்றியிற் சந்தனப்பொட்டு; நன்முக வளர்ந்து படிந்த மீசை; வெண்மையான உடை; அதாவது வெள்ளைக் கால் - சராயுடன் கழுத்துவரை யும் பொத்தானிட்டு மாட்டிய வெள்ளைச் சட்டை; ஜரிகைத் தலைப்பாகை. இவர் உருவத்தை ஒருவாறு நம் மனத்தில் நிறுவுவதற்கு இவை போதும்.

இவரது இனிய பண்புகள் மிகப் பல. கோபம் என்பதையே இவர் அறியாதவர். குழந்தைகளிடத்தில் மிக்க பிரீதி யுள்ளவர். தமது கீழ் உத்தியோகஸ்தர் களை மிக்க அன்போடு நடத்தி வந்தார். மிக்க தயாள சிந்தை யுடையவர். அவர்கள் துன்பப்படும்பொழுது பண முதலியன அன்புடன் கொடுத்து உதவிவந்தனர். சில ஆண்டுகளாக இவர் வலங்கிமான் ஜோஸியர் உபதேசத்தால் யோகாப்பியாசம் செய்தனர். இதனால் உளத்தை அடக்கி ஒருநெறிப் படுத்துதலில் நல்ல பயிற்சி பெற்றிருந்தனர்.

இவ் அரிய பண்புகளை யெல்லாம் நாம் காலகதி யில் மறந்துவிடலாம். ஆனால், இவர் செய்துள்ள அரும் பணியை நாம் மறக்க முடியாது. தமிழ் மக் களது பண்டை நாகரிகச் சிறப்பை முதல் முதலாகப்

புலப்படுத்தி, தமிழிலக்கியப் பெருமையைத் தெள்ளி தின் உணர்த்தி, தமிழர் சரித்திரத்தை நன்கு விளக்கி, தமிழ்ப் பெருநூல்களைத் தேடித் திரட்டி யுதவி, தமிழ் ஆராய்ச்சியையே தமது பொழுதுபோக்காகக் கொண்ட இந்த அருங்கலை விநோதர் தமிழன்னைக்கு ஊன்றுகோல் போலக் கைகொடுத்து உதவி அவளைத் தாங்கி யெடுத்தவருள் ஒருவர் என்பதில் ஐயமென்ன ?

## மகாமகோபாத்தியாய
## டாக்டர் சாமிநாதையர்

(19 - 2 - 1855 — 28 - 4 - 1942)

### தொண்டின் பெருமை

தமிழன்னையின் இளமைப் பருவத்தே அவள் புனைந்தருளிய சிறந்த பொற்பணிகள் பலவற்றைத் துருவித் தேடிக் கண்டு அவற்றை மாசு நீக்கி மீண்டும் அழகுறுத்தி அவள் தெய்வத் திருமேனியில் அணிவித்து மகிழ்ந்த தமிழ்ச் செல்வர் யாவர்? தமிழ்ப் புலமைக்கு உரையாணியாக விளங்கும் தமிழ்ப் பெருந்தகையார் யாவர்? தமிழ்க் கல்வி புதியதோர் மேம்பாடுற்று எவரும் போற்றத் தக்க நிலையிலே தற்காலத்து நிலவுதற்குக் காரணமாயுள்ள அருந்தமிழ்ப் பேராசிரியர் யாவர்? தமிழ்மக்கள் தங்களுடைய புராதன நாகரிகத்தையும், தொன்மை பெருமை முதலியவற்றையும் நன்கு உணர்ந்து களிப்புறும் வண்ணம் செய்வித்த தமிழ் மகனார் யாவர்?

இச் செயற்கரிய செயல்களை யெல்லாஞ் செய்த பெரியார் மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களே ஆவர்.

டாக்டர் சாமிநாதையரவர்கள் நம்மிடை நின்று மறைந்து *சில மாதங்களாயின. அவர்கள் குடும்பத்தினர் வடித்த கண்ணீர்த் துளிகள், அவர்கள் உறவுமுறையினர் சிலகாலம் அடைந்த அருந்துயரம், அவர்கள் நண்பர்களுடைய சிலகாலத் துக்கம், அவர்

* திருவல்லிக்கேணி ஹிந்து இளைஞர் சங்கத்தினர் டாக்டர் - சாமிநாதையரவர்களுடைய திருவுருவப்படத்தையும், பாரதியாருடைய திருவுருவபபடததையும் 1942-ன் இறுதியில் தஙகள் சங்கத்தில் அமைத்த விழாவிற்பேசிய குறிப்பினின்றும் எழுதியது

களைத் தெரிந்தவர்களின் மனத்துயரம், அங்கங்கே தமிழ்க் கழகங்களில் நிறைவேற்றப்பட்ட அநுதாபத் தீர்மானங்கள், பத்திரிகைகளிற் கறுப்புக் கோடுகளில் அடைத்த துக்கச் செய்தி: இவற்றோடு அவர்களைக் குறித்த ஞாபகம் மறைந்துவிடக் கூடியதா? அன்று. ஒருவேளை அவர்களுடைய திருவுருவப்படத்தை அங்கங்கே அமைத்துப் போற்றினால், அவர்களைப்பற்றிய நினைவு அத்தனை எளிதில் மாய்ந்துவிடாது. எனவே, இச்செயல் மிகவும் பாராட்டத்தக்கதே.

ஐயரவர்கள் பண்டைத் தமிழிலக்கியத்தின் பிரதிநிதி. தற்காலத் தமிழிலக்கியத்தின் பிரதிநிதி பாரதியார். இவ் இருவரும் திருவல்லிக்கேணியோடு தொடர்புடையவர்கள். பாரதியார் சென்னை மாகாணத்தில் தென்கோடியிலுள்ள திருநெல்வேலியைச் சார்ந்தவர்கள்; ஐயரவர்கள் இந்த மாகாணத்தின் வடபகுதியிலுள்ளவர்கள். பாரதியார் நம் தமிழன்னையின் உக்ரமூர்த்தமாகவுள்ளவர்; ஐயரவர்கள் நம் அன்னையின் சாந்தமூர்த்தமாக வுள்ளவர்கள். பாரதியாரின் சொற்கள், தேசபக்தியும் தமிழ்ப்பற்றும் கொழுந்துவிட்டெரியுமாறு, கேட்போரின் மனத்திலே அளவற்ற பக்திக்கனலை அள்ளியெறிந்து, அம்மனதைப் பற்றியெரியச் செய்கின்றன; ஐயரவர்களின் சொற்கள் ஆழ்ந்த தமிழறிவினால் பரிபக்குவமெய்திக் குளிர்ந்த நிலவொளியை வீசுகின்றன. பாரதியார் வாழ்க்கைப் போராட்டத்தில் துன்புற்று நைந்து வருந்தியவர்; ஐயரவர்கள் இவ்வகைப் போராட்டத்தால் துன்புறாது வாழ்ந்தமை நமது பாக்கியமே. பாரதியார் பெருங் கவிஞர்; ஐயரவர்கள் பெரும்புலவர்: இவ் இரு பெருந்தகைமையாளரின் திருவுருவங்களும் நமது இளைஞர்கள் எப்பொழுதும் தியானித்துவரத் தக்கன. இவ் இருவரது வாழ்க்கைகளும் நம்நாட்டு

இளைஞர்களுக்குப் பயன்படக்கூடிய பல உபதேசங்களைத் தரவல்லன.

ஐயரவர்கள் குறுந்தூறுநிரம்பிய குறுங்காட்டில் தனி நின்றோங்கிய பெருமரமல்லர். இவர்கள் காலத்தில் சிறந்த வித்துவான்கள் பலர் புகழ்பெருக வாழ்ந்தனர். உதாரணமாக ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை, ரா. இராகவையங்கார், திரு. நாராயண ஐயங்கார், வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், நாகை வேதாசலம் பிள்ளை (மறைமலை யடிகள்) சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை முதலிய பெரும்புலவர்கள் பெருஞ் சிறப்புற்று விளங்கியது இவர்கள் காலமேயாகும். ஆராய்ச்சியிற் சிறந்த கனகசபைப் பிள்ளையவர்களும், ஆராய்ச்சியிலும் கவித்துவத்திலும்சிறந்து விளங்கிய ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களும் இவர்கள் காலத்தினரே யாவர். இப்பெரும் புலவர் தொகுதிக்கு இப்போது பிரதிநிதியாக வாழ்ந்திருப்பவர்கள் ரா. இராகவையங்கா ரவர்களும், மறைமலை யடிகளுமே. இப்பெருமக்களிடையே வாழ்ந்து தமக்கென உரிய தனிப்பெருமையிற் சிறந்தோங்கியவர்கள் ஐயரவர்கள். இத்தனை பெரியோர்களுக்கிடையிற் சிறந்து வாழ்வதென்றால், ஐயரவர்களுடைய தனிப்பெருமை எவ்வளவாகவுள்ளதென ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

ஐயரவர்கள் சுமார் 60 ஆண்டுகளாகத் தமிழையே சிந்தித்து வந்தார்கள்; தமிழ் நூல்களையே ஓதிவந்தார்கள்; தமிழ் நூல்களையே போதித்துவந்தார்கள்; தமிழ் நூலாராய்ச்சிகளையே செய்துவந்தார்கள்; தமிழ்நூல்களையே பதிப்பித்து வந்தார்கள்; தமிழ்நூல்களையே தேடிப் பெற்றுத் தொகுத்து வந்தார்கள்; இவர்கள் இல்லத்தைத் தமிழ்த் தெய்வத்தின் திருக்கோயில் என்றுதான் சொல்லவேண்டும்.

எத்தனை அரிய நூல்களை இவர்கள், அழகுற, கல்வியாளர்கள் மெச்சும்படி, நல்ல முறையிற் பதிப்பித்துத் தந்திருக்கிறார்கள்! பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு, ஐம்பெருங் காப்பியங்களிற் கிடைப்பன: இவையெல்லாம் ஐயரவர்கள் நமக்குத் தந்த பண்டைத்தமிழ்க் கருவூலங்கள். பதிப்புப் பேராசிரியர் என்ற அருமைப் பெயர்க்கு இவர்களே தக்கவர்கள்.

இவர்கள் பதிப்புக்களால் தமிழன்னையின் நல்லணிகள் மாசு நீக்கப்பட்டு அவள் திருமேனியில் அணியப்பட்டன. தமிழரசர்கள் சரித்திரம், தமிழ்ப் புலவர் சரித்திரம், தமிழ் நாட்டுச் சரித்திரம்: இவைகள் எல்லாவற்றிலும் பல அம்சங்கள் தெரியவந்தன. இவைகளை முற்றும் பரிசோதனை செய்தால், தமிழுக்குரிய புராதன சரித்திரக் குறிப்புக்கள் இன்னும் பல புலப்படும் என்பது உறுதி.

இவர்கள் தேடித் தொகுத்து வைத்திருக்கும் அரியநூல்களைத் திருந்திய முறையிற் பதிப்பிடுவதானால், சிறந்த தமிழறிஞர்களுக்குப் பல தலைமுறைக்காலம் உளங்கூர்ந்த வேலை இருந்துகொண்டே யிருக்கும். ஐயரவர்கள் முயற்சியெடுத்துத் தொகுத்து வைக்காமற் போனால், நமது பழந்தமிழ்க் கருவூலங்களிற் பலவற்றை நாம் இழந்துபோக நேரிட்டிருக்கும். நமது நல்வினைப் பயனாகத்தான் ஐயரவர்கள் தோன்றினார்கள்.

தமிழிலக்கிய சரிதத்தின் காலப்பகுப்பில், ஐயரவர்கள் தொண்டுபுரிந்து வந்த சுமார் 50 ஆண்டுகளையும் ‘சாமிநாதையர் காலம்’ என்றுதான் பிற்காலத்தில் வரும் தமிழ்ச்சரித ஆசிரியர்கள் கூறுவார்கள்.

**தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்**
**தோன்றலிற் தோன்றாமை நன்று.**

## வாழ்க்கையும் மதிப்பும்

தமிழ் மொழியின் விளக்கு என்று சொல்லத் தகுந்த டாக்டர். உ. வே. சாமிநாதையர் நம்மிடையே நின்று மறைந்து இப்பொழுது ஆறு ஆண்டுகளாகின்றன. இவர் செய்துவந்த தமிழ்த்தொண்டு ஒருவாறாக இவருடைய புத்திரராகிய கலியாணசுந்தரம் ஐயரால் தொடர்ந்து செய்யப்பட்டு வருவது தமிழ் மக்களுக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடியது. மூவருலா முதலிய ஒருசில நூல்கள் சாமிநாதையர் இருக்கும் பொழுதே பதிப்பிடுதற்குத் தக்கவாறு எழுதி வைக்கப்பட்டிருந்தன. இவைகளை அச்சில் வெளிப்படுத்தியதோடு சிந்தாமணி முதலிய சில நூல்கள் மீண்டும் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளன. ஐயரவர்கள் தேடித் தொகுத்த நூல்களில் பெரும்பாலன அடையாற்றிலுள்ள கலாக்ஷேத்திரத்தில் இவர்கள் பெயரால் அமைந்த ஒரு நூல் நிலயத்தில் வைக்கப்பட்டுள்ளன. இக் கலாக்ஷேத்திரத்தின் தலைவியாராகிய ருக்மணி தேவியார் இந் நூல்களை வெளியிடுவதில் மிக்க ஊக்கங் காட்டி வருகிறார்கள். மேலும், ஐயர் பரிசோதித்து எழுதி வைத்துள்ள கம்பராமாயணம் குறிப்புரையுடன் வெளிவருதற்குச் சென்னை ஸர்வ கலாசாலையாரும் சைவ மடாதிபதிகளும் பொருளுதவி செய்திருக்கின்றார்கள்.

இதுவுமன்றி ஐயரவர்களது மாணாக்கர்களாலும் பிற அன்பர்களாலும் இவர்களுடைய உருவச்சிலையொன்று சென்னை அரசாங்கக் கல்லூரியின் முகப்பில் 6 - 3 - 1948 - ல் நிறுவப்பட்டுள்ளது. தமிழ் மக்கள் தம் இதயத்தில் நிலைபெற்று ஐயரவர்கள் வீற்றிருப்பதற்கு அறிகுறியாக இவ் வுருவச்சிலை விளங்குகிறது. இங்ஙனமாக, இவர்கள் மேற்

கொண்ட தொண்டு இப்பொழுது நடைபெற்று வருவதோடு, இவர்கள் புகழும் நம் தமிழ் மக்களால் மிக்க நன்றியுடன் போற்றப்பட்டு வருகிறது.

ஐயரவர்கள் ஜனனத்திலேயே அதிர்ஷ்டம் உள்ளவர் என்று சொல்லப்படுகிறது. இவர் பிறந்த வருஷத்தில் அரியலூரில் இவர் குடும்பத்தினர்க்கு ஒரு வீடு ஏற்பட்டது என்றும், அது இவருடைய அதிர்ஷ்டத்தின் பலன் என்றும், இவர் தாயார் கூறினாராம். இவர் பிறந்த ஊரின் பக்கத்திலிருந்த ஒரு சந்நியாசி 'ஆனந்த வருஷத்தில் இங்கே ஒரு அதிசயம் நடக்கப் போகிறது' என்று சொன்னாராம். அந்த அதிசயம் ஐயர் பிறந்ததுதான் என்று இவர் தாயார் கருதினாராம். வேறோர் நிகழ்ச்சியையும் இங்கே குறிப்பிடலாம். தமிழுலகத்தில் பெயர் சிறந்து விளங்கிய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை என்ற இவ்விருவரும் பிறந்த வருஷத்திலே (1855) ஐயர் பிறந்துள்ளார். இவைகளெல்லாம் காகதாலிய நியாயமாக அமைந்தனவே. என்றாலும், உண்மையிலேயே ஐயரவர்கள் அதிர்ஷ்டசாலி என்பது வேறு சில நிகழ்ச்சிகளால் நன்கு விளங்குகிறது.

முதலாவது நிகழ்ச்சி ஐயர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம பிள்ளையின் சிஷ்யராக அமைந்தது. இதற்கு முன்பு சங்கீதப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தனர். மகாவித்துவானது சிஷ்யரானதற்கு அப்புறம் தான் ஐயருடைய வாழ்க்கை தமிழுக்கென வரைந்து வகுக்கப்பட்டதாயிற்று. எளிதில் அகப்படாத சிறந்த தமிழ் நூல்களை முறையே பாடங் கேட்டல் தமிழறிவு உரம்பெறுதற்குத் தக்க உபாயமாகும். நூல்களைப் பிழையின்றிப் பிரதி செய்வதும் தமிழறிவு வரையறுத்த தன்மையெய்தி உறுதி பெறச் செய்கின்றது. பிறர்க்குப் பாடம் சொல்லுவதும் கல்வியை

வளம்பெறச் செய்வதோடு நினைத்த மாத்திரையில் பயன்படவும் அக்கல்வியை ஆக்குகிறது ; அன்றியும பொது அறிவையும் மிகுவித்து, மக்கள் உளப்பாங்கை எளிதில் உணர்ந்துகொள்ளும்படியாகவும் செய்கிறது. இவ்வகை அனுகூலங்களெல்லாம் மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்குச் சிஷ்யரான காரணத்தால்தான் ஐயருக்குக் கிடைத்தன. அன்றியும், தமிழ்க்கல்வி முதலியவற்றில் சிறந்தவர்களையும் தமிழ்மீது அன்புள்ள பலபெரியார்களையும், பிற அறிஞர்களையும் சந்தித்து உரையாடும் பேறும் ஐயருக்கு வாய்க்க இப்பொழுதான் இடமுண்டாயிற்று. சிலசமயங்களில் ஐயரிடத்தில் கேள்வி கேட்பதும் அதற்கு இவர் தக்க விடை கூறுவதும் நிகழ்ந்தன. ஐயர் தமது செய்யுளியற்றுந் திறமையை வெளிப்படுத்தும் சந்தர்ப்பங்களும் அடிக்கடி நேர்ந்தன. இவையெல்லாம் இவரது ஆற்றலைப் பல வழிகளில் அபிவிருத்தி செய்தன. ஆகவே, பிற்காலத்தில் ஐயர் செய்துவந்த தமிழ்த் தொண்டிற்கு இவரைப் பக்குவப்படுத்திய பள்ளிச்சாலையென்று இந்தக் குரு - சிஷ்யக் கூட்டுறவைச் சொல்லலாம். தமது குருவை எவ்வாறு பாராட்டினார் என்பது,

> பலகாலமாகத் தவம் புரிந்து ஒரு தெய்வ தரிசனத்திற்குக் காத்திருக்கும் உபாஸகனைப் போல நான் இருந்தேன் ; அவனுக்குக் காட்சியளிக்கும் அத்தெய்வம் போல அவர் (மீனாட்சிசுந்தரம் பிள்ளை) வந்தார்.

என்று இவர் கூறுவதனால் (என் சரித்திரம், அத். 27) விளங்கும். ஐயரது 17-வது வயதில் 1871-ல் இவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையை அடுத்து, 1876-ல் தம் பேராசிரியர் சிவபதம் அடையும்வரை அவரிடம் கல்வி கற்றுவந்தார்.

பின்னர், திருவாவடுதுறைச் சந்நிதானமாக அப்பொழுது விளங்கிய மேலகரம் சுப்பிரமணிய தேசிகரவர்கள் ஐயருக்கு அபயமளித்துப் பாடம் போதித்தனர். ஐயரும் பல மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லி வந்தனர். இத் திருவாவடுதுறை வாழ்வை இரண்டாவது பெருநிகழ்ச்சியென்று கூறலாம். இவரது கல்வி மிகவும் விளக்கம் அடைந்தது. தேசிகர் தாம் செல்லுமிடங்களுக் கெல்லாம் இவரையும் உடனழைத்துச் சென்று இவருடைய கல்வி கேள்வி அறிவாற்றலைப் பலரும் அறியும்படி செய்தனர். இவரது அரிய புலமை பண்டித சமூகத்திற் கொண்டாடப்படுதற்கு இத் தேசிகரே காரணமா யிருந்தனர்.

இதுவரையும் இவரது வாழ்வு ஆதீனத்துக்குள் அடங்கியிருந்தது. பலபல நன்மைகள் இதனால் இவருக்கு விளைந்த போதிலும், ஒரு பெரிய குறையும் இருந்தது. மேனாட்டுக் கல்வியின் பயனாய் வெளியுலகில், அறிவுலகில், ஒரு புதிய சக்தி தோன்றியிருந்தது. இப்புதிய சக்திக்கு முற்றும் புறம்பாகவே மடங்கள் முதலிய சமய ஸ்தாபனங்கள் ஒதுங்கி விட்டன. எனவே, நூதன அறிவின் விளக்கத்திற்கு இம் மடங்களில் இடமில்லாது போயிற்று. திருவாவடுதுறை மடத்தில் ஐயரது கல்வி கேள்வியும் பழைய சுருங்கிய நெறியிற் சென்றொழுகின. இவ்வாறே இவரது ஆயுள் கழிந்திருக்குமாயின், திருவாவடுதுறை ஆதீன வித்வான் என்ற பதவியை விளக்கமுறச் செய்திருக்கலாம். பாழடைந்த கோயில்களுள்ள பல ஊர்களுக்கு யமகம், திரிபு, சித்திரக் கவிகள் முதலியன செறிந்த புராணங்கள் பல இயற்றியிருக்கலாம். பல சிறந்த பிரபந்தங்கள் பாடியிருக்கலாம். தமது ஆதீனத்தின் சிறப்பைக் குறித்தும், கும்பாபிஷேகம் முதலிய பெருநிகழ்ச்சிகளைக் குறித்தும், பல பாடல்கள் இயற்றி

யிருக்கலாம். சைவ சித்தாந்த சாஸ்திரங்களை மிகவும் நன்ருக ஓதி யுணர்ந்திருக்கலாம். அருட்பா மருட்பா வியவகாரத்தில் தலையிட்டுச் சில கண்டனவுரைகள் எழுதியிருக்கலாம். வேதாந்த சித்தாந்தப் பொருள்கள் பற்றியும் சில சண்ட மாருதங்களைக் கிளப்பியிருக்கலாம். இந் நெறிகளிலே சென்று சாதாரண வாழ்வு வாழ்ந்து முடிந்திருக்கலாம். ஆனல் இவ்வாறு பயனற்று ஒழியாதபடி மீனுட்சிசுந்தரம் பிள்ளையின் முதல் மாணவராகிய சி. தியாகராஜச் செட்டியார் மூலமாகத் தெய்வம் அருள்புரிந்தது. செட்டியார், 1880-ல், தாம் தமிழ்க் கல்வி பயிற்றிவந்த கும்பகோணம் அரசாங்கக் கலாசாலையில் தமது ஸ்தானத்தில் ஐயரை அமர்த்தினர். தற்கால அறிவிற் சிறந்த பேராசிரியர்கள் கோபாலராவ், ஆர். வி. சீநிவாஸய்யர் முதலியவர்களோடு உறவாடும் நிலைமை ஐயருக்கு ஏற்பட்டது. மேலும் தற்கால மனப்பான்மை வாய்ந்த மாணுக்கர்களோடும் இவருடைய வாழ்வு நெருங்கிய தொடர்புடையதாயிற்று. இதனல் இவரது மனம் விரிவடையத் தொடங்கிற்று. சென்னை வாசமும் பிற்காலப் பெருவாழ்வும் பிற புகழ்களும் உண்டாவதற்கு, கும்பகோணம் கலாசாலையில் தமிழாசிரியராக இருந்ததே காரணமாயிற்று. இதனை ஐயரது வாழ்க்கைச் சரித்திரத்தில் மூன்ருவது பெருநிகழ்ச்சி என்று கூறலாம்.

ஐயர் கலாசாலையில் தமிழ் பயிற்றுவிக்கும் திறம் கலாசாலை ஆசிரியர்களுக்கே யன்றிப் பிற அறிஞர்களுக்கும் தெரிய வந்தது. இவ் அறிஞர்களுள் ஒருவர் கும்பகோணத்தில் முனிசீப்பாக இருந்த சேலம் இராமசாமி முதலியார். முதலியார் ஒருமுறை ஐயரைச் சந்தித்துத் தம்மிட மிருந்த சீவக சிந்தாமணிப் பிரதியொன்றைக் கொடுத்து அதில் சில

செய்யுட்களைத் தமக்கு நன்கு விளக்கவேண்டுமென்று விரும்பினார். ஐயர் அப்பொழுதுதான முதன்முதலில் சீவக சிந்தாமணியைப் பார்க்க நேர்ந்தது. அதனை முறைப்பட வாசித்துப் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பினர். அப்பொழுது முதலியார், ஐயர் அதனைப் பதிப்பிடுவதாயின், அதற்கு வேண்டும் பொருளுதவியைச் செய்வதாகவும் கூறி ஊக்கினர். ஐயரது உண்மைத் தமிழ்த்தொண்டும் இவரது பிறவியின் பயனும் அன்றுதான் தொடங்குவதாயிற்று. ஆகவே, இராமசாமி முதலியார் சிந்தாமணிப் பிரதியைப் பதிப்பிக்கும்படியாகக் கொடுத்தது ஐயரது வாழ்க்கையில் நான்காவது பெருநிகழ்ச்சி என்று கூறலாம். இதன்பின்பு தான் பண்டை நூல்களை முறையாக ஆராய்ந்து பதிப்பிக்க வேண்டும் என்ற கருத்து உண்டாயிற்று.

ஐயரது வாழ்வில் ஐந்தாவது பெரு நிகழ்ச்சி, பூண்டி - அரங்கநாத முதலியாரோடு இவர்க்கு ஏற்பட்ட நட்பு. முதலியார் பேரறிஞர்; கணிதப் பேராசிரியர்; தமிழ்ப் பெருஞ் செல்வர்; கச்சிக்கலம்பகம் இயற்றிய தமிழ்க் கவிஞர்; தமிழையும் தமிழ்ப் புலவர்களையும் பெரிதும் போற்றி வந்தவர். இப்பேராசிரியர் (1844 - 1893) ஐயரது கல்வி கேள்விகளையும், அரிய புலமைத் திறத்தையும், தமிழ் நூல்கள் பற்றி இடைவிடாது செய்துவந்த ஆராய்ச்சியையும் கண்டு, மிகவும் வியந்து, அன்பு கொண்டு, வேண்டுங்காலங்களில் வேண்டும் உதவிகள் செய்து வந்தனர். அன்றியும், சென்னையிலுள்ள பல பிரமுகர்களிடமும் அறிமுகப்படுத்தி ஐயரது புகழ் விளங்குதற்குக் காரணமாயிருந்தனர். எல்லாவற்றிற்கு மேலாக, இவருடைய கல்வி நலம் நிரம்பிய இன்னுரைகள் ஐயருக்குப் பெரிதும் ஊக்கமளித்து

பதிப்பு முதலிய முயற்சிகளில் மனவெழுச்சி உண்டாகும்படி செய்தன. இவர் அளித்துள்ள ஊக்கமும் உதவிகளும் பாராட்டுக்களும் இல்லாமற் போனால், ஐயர் மழைமுகங் காணாப் பயிர்போல் வாடியிருப்பர்.

> பல பேருடைய பாராட்டுக்களை நான் அடைந்தேன். இவ்வளவுக்கும் காரணம் அரங்கநாத முதலியார் என்பால் வைத்துள்ள அன்பே யென்பதை நினைக்கும்போது முதலியாருடைய கம்பீரமான குணத்தில் என உள்ளம் மூழ்கி உருகும். (நல்லுரைக்கோவை, பக். 132)

என்று ஐயர் தாமே கூறியுள்ளார்

இத்தனை பெரு நிகழ்ச்சிகளும் இவரிடம் ஓர் உயிராசையை முளைக்கச் செய்து, அவ் ஆசையை வளர்த்து, அதனை நிறைவேற்றி இவரது பிறவியைப் பயன் நிரம்பியதாக்கின என்பது உண்மை. ஆனால் இந் நிகழ்ச்சிகள் அநுகூலச் சூழ்நிலைகளென்றே கொள்ளத் தக்கன. இவைகளைப் பயன்படுத்தியது ஸத்து நிறைந்துள்ள நன்னிலம் என்பதை யெண்ணி நாம் மகிழ வேண்டும்.

> ... ... தன்னைத்
> தலையாகச் செய்வானும் தான்

என்றனர் ஒரு மூதறிஞர். ஐயரது இடையறாத கல்வியும், இடையிடில்லாத ஆராய்ச்சியும், சலிப்பறியாத ஊக்கமும் தான் இவருடைய பெருமைக்கு முக்கிய காரணம் என்பது நாம் மனங்கொள்ளுதற்குரியது.

சீவக சிந்தாமணி ஒரு ஜைன காவியம். முதன் முதலாகச் சீரிய முறையில் இவர் பரிசோதித்து அச்சிடுவதற்கு இந்த ஜைன காவியம் கிடைத்தது ஒரு பெரிய நன்மையாக முடிந்தது. மதச்சார்பு பற்றி

நூல்கள் மீது விருப்பு வெறுப்பு இல்லாதபடி, இலக்கியச் சிறப்பு ஒன்றையே கருதி, தமிழிலக்கியத் தொண்டு புரிய வேண்டும் என்ற மனப்பான்மையானது ஐயருக்கு உண்டாயிற்று. சமயத்தொண்டு வேறு, இலக்கியத்தொண்டு வேறு: என்ற பாகுபாட்டை இவர் மிக நன்றாக உணரும்படி நேர்ந்தது. ஆறுமுக நாவலர் சமயத் தொண்டில் ஈடுபட்டுச் சமய நூல்களையே அச்சில் வெளியிட்டுவந்தனர். நாவலர் பதிப்புக்கள் சிறந்தனவா யிருந்தாலும் அவை சமயக் கல்விக்கு மாத்திரம் பயன்பட்டு அமைந்து நின்றன. இங்ஙனமே வேறுசில பதிப்பாளர்கள் வைஷ்ணவ சமயத்தொண்டும, இன்னும் சிலர் ஜைன சமயத் தொண்டும் புரிந்துவந்தனர். இம்மனப்பான்மை இலக்கிய வுணர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் முரணாக நிற்பது. பஞ்ச காவியங்களுள் ஒன்றாகிய குண்டலகேசி இன்று நமக்கு அகப்படாமல் அழிந்துபோனது மேற்சொல்லிய குறுகிய மனப்பான்மையினால் தான். இக் காவியம் பௌத்தமதத்தின் சார்பாக வுள்ளது. இதற்கு மறுப்பாக எழுந்தது தான் நீலகேசி. எவ்வளவு பெரிய இலக்கியத்தை நாம் இன்று இழந்துவிட்டோம் என்பது இந்நூல்பற்றி அங்கங்கே கிடைக்கும் சில குறிப்புக்களால் அறியலாகும். இலக்கிய நெறியில் உழைத்து வருபவர்களுக்கு இலக்கியநயம் அறியும் மனப்பான்மை ஒன்றுதான் இருத்தல் வேண்டும். சிந்தாமணியின் தமிழ்ச் சுவையும், அதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய அரிய உரையும், இவ் இரண்டினாலும் வெளிப்படுகின்ற அகன்ற பெருங்கல்வியும் ஐயருக்கு மிக விரிந்த ஓர் மனப்பான்மையை உண்டுபண்ணின. தமிழ் நாட்டில் முற்காலத்தில் வழங்கிவந்த பௌத்த, ஜைன சாஸ்திர விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அவாவும், அவ்வச் சமயங்

களைச் சார்ந்த நூல்களுக்கு அவ்வவர் கொள்கைகளைக் கொண்டே உரைவிளக்கம் செய்தல் வேண்டும் என்ற முறை நேர்மையும் ஐயருக்கு விளங்கின. 'அறுநால்வ ராய்ப் புகழ்' என்று ஏலாதியில் வருகின்ற தொட ருக்கு, அது ஜைன தீர்த்தங்கரர்களை உணர்த்து கிறது என்பதைத் தெரிந்துகொள்ளாதபடி, சைவச் சார்பாய் எழுதி வெளியிட்ட உரையையும் பார்த்துள் ளோம். ஐயர்தாமே குறிப்பிட் டிருக்கிறபடி, பஞ்ச நமஸ்காரம் என்ற ஜைனமதச் சங்கேதத் தொடரை உணர்ந்து கொள்ளாமல் அதனைப் பஞ்சாட்சரம் என்று கருதிப் பிரதி செய்வோர் பிழைபட எழுதி வைத்துள்ளதும் தெரிந்துள்ளோம் (என் சரித்திரம். பக். 137). இவை போன்ற பிழைகளெல்லாம் தமிழ் நாட்டில் வைதிக சமயங்களே யன்றிப் பிற சமயங் களும் இருந்தன என்ற உணர்ச்சியே அற்றுவிட்டத னால் தோன்றியன.

இனி, ஐயரது பதிப்பு - முறையைக் குறித்துச் சில சொல்ல வேண்டுவது அவசியம். இவர்க்கு முன் பெல்லாம் நூல்களைப் பதிப்பிடும் தொழிலில் ஈடு பட்ட தமிழ் - அறிஞர்களிற் பெரும்பாலார் தமக்குக் கிடைத்த இரண்டொரு பிரதிகளைவைத்துக்கொண்டு, அவற்றிலுள்ள 'கரலிகித வழுஉக்களைக் களைந்து திருத்தியும் புதுக்கியும்' நூல்களை அச்சிடுதல் வழக் கமா யிருந்தது. ஆனால், ஐயர் இந்த முறையைப் பின் பற்றவில்லை. பல பிரதேசங்களி லிருந்தும் பல பிரதி களை முயன்று தேடிப் பெற்றுத் தொகுத்து வைத்துக் கொள்வது இவர் முதலாவது செய்த வேலை.

பின்னர், இவற்றுள் ஒரு பிரதியைக் கடிதத்தில் பெயர்த்தெழுதி மற்றைப் பிரதிகளோடு ஒப்பிட்டுப் பாடபேதங்களைக் குறித்துக் கொள்வர். இவ்வாறு குறித்துக்கொண்டபின் நூலைப் பலமுறையும் வாசித்

துப் பொருளையும் நன்கு தெரிந்துகொள்ள முயல்வார். இதற்குப் பின், இந் நூற்பொருள் பற்றி யெழுந்த பிற நூல்களையும் கற்றுப் பொருள் விளக்கம் செய்ய முற்படுவர். பினனும் தெரியாதன உளவாயின், வட மொழி தென்மொழி நூல்களிலே வல்லவர்களையும், நூல் எந்தச் சமயத்திற்குரியதோ அந்தச் சமய சாஸ் திரங்களில் வல்லவர்களையும், அடுத்து விசாரித்துப் பொருள் தெரிந்துகொள்வர். விளக்கத்திற்குரிய அனைத் தையும் முறைப்படக் குறித்து வைத்துக்கொண்டு அச்சிடுவதே தக்க முறை எனக் கருதி, அவ்வாறு செய்துவந்தனர். இங்கே கூறிய நெறிப்படியே முறை யாகப் பதிப்பு வேலை எப்போதும் நிகழ்ந்ததென்று எண்ணமுடியாது. ஆனால் இந்நெறிகள் பெரும்பாலும் கையாளப்பட்டன என்று கொள்ளலாம். ஒவ்வொரு நூலையும் இவ்வாறு செய்து முடித்தற்குப் பல ஆண்டு கள் சென்றன என்பதில் வியப்பில்லை. ஐயர் தமக் கிருந்த சௌகரியத்திற்குத் தக்கபடி மெல்லச் சாவதா னத்துடன் ஆராய்ந்து வெளியிடுவதே வழக்கமாயிருந் தது. ஒருமுறை ஸேது ஸம்ஸ்தான மகாவித்வானும் தமிழாராய்ச்சியிலும் தமிழ்க் கல்வியிலும் மிகச் சிறந்து விளங்கியவரும் தமிழ்ப் பேராசிரியர்களுள் உயரிய மதிப்பிற்குரியவருமான ஸ்ரீ ரா. ராகவையங் கார் 'தமிழ் நூல்களை நன்றாகப் பதிப்பிடுதற்கெனப் பிறந்தவர் சாமிநாதையரே' என்று என் நண்பர்கள் சிலரும் நானும் ஒருங்கிருந்த சமயத்துக் கூறினர். இது முற்றும் உண்மையாகும்.

எவ்வளவோ நுணுகி ஆராய்ந்து, எவ்வளவோ விசாரித்துணர்ந்து, எத்தனையோ பிரதிகளை ஒப்பு நோக்கி, எவ்வளவோ காலம் முயன்று நன்குஉழைத்து, சீவகசிந்தாமணியை ஐயர் பதிப்பித்தனர். என்றாலும் அதில் பல பிழைகள் உள்ளன என்று யாழ்ப்பாணம்

முதலிய இடங்களிலுள்ள அறிஞர்கள் ஆராய்ந்து சிறு கண்டன நூல்கள் வெளியிட்டனர். இவற்ருல், சீவக சிந்தாமணியை வெளியிடுவதற்கு ஐயரைப் போன்ற பெருந்தகுதியுடையவர் வேறு சிலரும் தமிழ் நாட்டில் இருந்தனர் என்பது விளங்குகிறது. அன்றியும், சீவகசிந்தாமணி முதலிய பண்டை இலக்கியங் களைக் கற்றுவந்தவர்கள் ஒருசிலர் தமிழ்நாட்டில் இருந்தனர் என்பதும் அறிந்துகொள்ளலாம். இங்கே குறித்த கண்டனப் பிரசுரங்களும் ஐயருக்கு நன்மையாகவே முடிந்தன. தாம் நூற்பரிசோதனை செய்தது போதாது என்பதனை நன்கு உணர்ந்தனர். இன்னும் மிக நுட்பமாக ஆராயவேண்டும் என்பதைக் கண்டனர். இப்பிரசுரங்களில் தமக்குச் சரியெனத் தோன்றியவற்றைத் தமது பிற்பதிப்புக்களில் உடன்பட்டுக் கொள்ளலாயினர். ஆனால் ஐயர் ஓரிடத்தேனும் இக்கண்டன வுரைகளால் இத் திருத்தமடைந்தது என்று தெரிவிக்கவேயில்லை. இதுவேயன்றி, தமக்கு முன்பு பிறர் பரிசோதித்துவெளியிட்ட பதிப்புக்களைப் பற்றியும் பெரும்பாலும் இவர் குறித்ததே இல்லை. உதாரணமாக, சீவகசிந்தாமணியை இவர் வெளியிடுவதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னர், 1868-ல் இக் காவியத்தின் நாமகள் இலம்பகத்தை அழகான முறையிலே, சிறந்த முன்னுரையோடு, ரெவரெண்ட் பவர் (Rev. Bower) என்பவர் பதிப்பித்துள்ளனர்.*

---

*சைவ சித்தாந்த மகாசமாஜப் பதிப்பு, சிந்தாமணி, முகவுரை பக். 7 :

The Chintamani, First Book, called Namagal Ilambagam ; with the Commentary of Nachinarkiniyar ; and with analysis and notes in English, Tamil and English Indexes, and an

இதனைத் தெரிவித்திருந்தால் மிகவும் நலமாயிருக்கும். இங்ஙனம் தெரிவித்தல் பதிப்பாசிரியரின் கடமை.

கண்டனப் பிரசுரங்கள் இவரிடத்தில் என்ன வகையான மன நிலையை உண்டு பண்ணின? முதன் முதலில் கண்டன வுரைக்கு மறுப்பு எழுதவேண்டும் என்று எண்ணுதல் முற்றும் இயற்கையோடு ஒத்ததே யாம். ஐயரும் மறுப்பு எழுதினர். ஆனால், அதனை அச்சில் வெளியிடுவதற்கு முன் மீண்டும் பரியாலோசனை செய்தனர். அப்பொழுது தமக்கு உற்ற நண்பர் களிடத்தில் இவர் கலந்துகொண்டனர். பின்னர், அம் மறுப்பை வெளியிடாதபடி நிறுத்திக்கொண்டனர். ஒன்றிரண்டு கண்டன வுரைகளுக்கு இவ்வாறு செய் தார். பின்னர், கண்டனப் பிரசுரங்களைப் பார்வை யிட்டு வேண்டியவற்றைக் குறித்துக்கொள்வாரே யன்றி, மறுப்பு எழுதும் கருத்தினையே விட்டுவிட்ட னர். இம்மனப்பான்மை ஐயருக்கு அடக்கத்தையும், மனவலிமையையும், சாந்தியையும் கொடுத்தது. எல் லாவற்றிற்கும் மேலாக, தமது அரிய காலம் வீண் முயற்சிகளால் பயனின்றிக் கழியாதவாறு, நல்ல முயற்சிகளிலே, தாம் மேற்கொண்ட தொண்டிலே, செலவாகுமாறு செய்தது.

ஆனால், கண்டனவுரைகளால் வேறு சில வேண்டா விளைவுகளும் நேர்ந்துவிட்டன. இவர் தாம் அறிந்த இலக்கியவிஷயங்களை அச்சில்வெளியிடும்வரை அடக்க

English Introduction explaining the Jaina system upon which the work is based; by Rev. H. Bower, with the assistance of E. Muttaiya Pillai, Madras. Printed by H. W. Laurie, at the Christian Knowledge Society's Press, No. 18, Church Street, Vepery. 1868.

மாக வைப்பாராயினர். தாம் செய்துவரும் தொண்டு களிலும் அடக்கத்தையே கைக்கொண்டனர். இவர் இல்லத்திலுள்ள சுவடி நிலயத்தைக் கண்டு களிக்கும் பேறுகூடக் கவி ரவீந்திரநாதர் முதலிய ஒரு சிலரே பெற்றுள்ளனர். பிறர் கண்களில்படும்படியாக நூல்-ஆராய்ச்சிசெய்வதை அறவே விட்டுவிட்டனர். அடக்க மாக, பிறரால் ஒன்றும் காண முடியாதபடி, தனியாக அமைந்த ஓர் அறையில் தாமும் தமது சிஷ்யர்களு மிருந்து நூற்பரிசோதனையைச் செய்து வரலாயினர். ஆகவே, பெரும்பாலும் இன்னகாலத்தில் இன்ன நூல் வெளிவரும் என்பது இவர் சிஷ்யர்களுக்கன்றி ஏனை யோர்களுக்குத் தெரியமாட்டாது. சிஷ்யர்களும் இந்த அடக்கத்தையே பெரும்பாலும் கையாண்டு வந்தனர். ஏட்டுப் பிரதிகளேயன்றி, இவர்கள் படித்து வந்த அச்சுப்புத்தகங்களைக்கூட இரவல் வாங்க முடியாது. ஒருவேளை, நூலின் பரிசோதனையில் தாம் ஈடுபட் டிருக்கும் சமயங்களிலே பிறர் வலிதின் வந்து, தமது தொண்டு இடையீடின்றி நிகழ்வதற்குத் தடையாவர் என்ற அச்சத்தினால் இவ் அடக்கம் மேற்கொள்ளப் பட்டதாகவும் இருத்தல்கூடும். அல்லது அக்காலத்தில் இவரோடு பழகியவர்களிற் சிலர் நேர்மையற்ற நோக் கத்துடன் இவரை அடிக்கடி தொந்தரவு செய்ததன் காரணமாக இந்த அடக்கமுறை கையாளப்பட்டிருக்க லாம். ஆனால், திறந்த மனத்துடன் தமது முயற்சியில் பிறர் மகிழ்வதைக் கண்டு, உற்சாகத்துடன் தமிழா ராய்ச்சி செய்யும் இன்பம் எல்லாருக்கும் எளிதில் வாய்ப்பதாகுமா? இல்லை. கல்வியாளர்பால் நம்பிக்கை கொண்டு அளவளாவுதலின் மகிழ்ச்சியும் எல்லார்க் கும் கிடைப்பதாகுமா ? இல்லை.

இங்ஙனமே, பிரதிகள் தேடிப் பண்டை நூல் களைப் பதிப்பிடுவதில் முயன்றுவரும் அறிஞர்களுக்கும்

பிரதிகளை ஈந்து உவக்கும் இன்பமும் எளிதில் கிடைப்பதா? இல்லை. ஐயருக்கு இந்த நல்லூழும் விதிக்கப்படவில்லை. இதனால் ஒருவருக்கும் இவர் தம்மிடமுள்ள பிரதிகளைக் கொடுத்ததில்லை என்பது என் கருத்தல்ல. எனக்குச் சில பிரதிகள் உதவியிருக்கிறார்கள் என்பதை நன்றியுடன் பாராட்டுகிறேன். நானும் இவர்களுக்குப் பிரதிகள் உதவியுள்ளேன். கேட்போர் தகுதியையும் நோக்கத்தின் தூய்மையையும் மாத்திரம் கருதி இவர் பிரதிகள் உதவுவதில்லை. விலக்க முடியாத நிர்ப்பந்தம் ஏற்பட்டால்தான் இவர் உதவுவர். அவ்வாறு தரும் பிரதிகளும் பெரும்பாலும் பயனற்றனவாகவே இருக்கும். தாம் பல ஆண்டுகளாக அரிதில் தேடி வைத்த பொருளை ஒருவர் கேட்டவுடனே கொடுத்துவிட எளிதில் மனம் வருமா? ஆனால், தாம் உதவாதது மாத்திரமே யன்றி, பிற பேரறிஞர்களும் நூலை பதிப்பிடுவோர்க்கு உதவுதல் கூடாது என்று இவர் கடிந்துரைத்ததை நான் நன்கு அறிவேன். கம்பர்விலாசம் இராஜகோபாலையங்கார் அகநானூற்றைப் பதிப்பிட எடுத்துக்கொண்டபொழுது, அவருக்கு ஸேது ஸம்ஸ்தான மகாவித்வான் ரா. ராகவையங்கார் பிரதிகள் கொடுத்தும் பிறவாறும் உதவக்கூடாது என்று இவர் தடை செய்தனர். அகநானூற்றை ஐயர் தாமே பதிப்பிடக் கருதியிருந்தனர். ஒருவேளை, இக்கருத்து இவரைக் கடுமையுள்ளத்தராகச் செய்திருக்கலாம். எனினும் இவ்வகையான மனப்பான்மைகள் ஐயருக்கு இருந்தமை தமிழ் மக்களது துர்ப்பாக்கியமே.

ஆனால், நிறைமதியின் ஒளி மறுவினால் குறைந்துவிடுமா? குறைகள் அனைத்தும் இவரது அரும்பெருந் தொண்டுகளுக்கு முன் மறைந்துவிடுகின்றன. தமிழ் நூற் பதிப்புக்களில் நாம் நம்பிக்கையாகக் கொள்ளக்

கூடிய பதிப்புக்கள் இவருடைய பதிப்புக்களே. இவர் ஒன்று எழுதிவைத்தால், அது பெரும்பாலும் தவருக மாட்டாது எனவே எப்பொழுதும் நம்மால் கொள்ளத் தக்கது. இவருடைய ஆழ்ந்த கல்வியும், தெளிந்ததமிழ் அறிவும், பரந்த உலகியலுணர்ச்சியும், இவற்றைத் தமிழ்மக்களுக்கு நூல்வாயிலாகப்பயன்படுத்தும் சீரிய முறையும் நம்மால் என்றென்றும் போற்றத்தக்கன.

ஐயர், தாம் ஆராய்ந்த பிரதிகளிற் கண்டா லல்லது, தாமாக ஒரு திருத்தமும் செய்வது வழக்க மில்லை. இவ்வாறு கூறிய அளவில் பண்டை இலக்கியங் களையும் உரைகளையும் பிரதியிலுள்ளவாறே சிறிதும் மாற்றுதலின்றி இவர் நமக்குத் தந்துள்ளார் என்று நினைப்பது தவறு. மாற்றித்தான் இருக்கிருர், ஆனல், இம் மாறுதல்கள் பெரும்பாலும் விளக்கத்திற்கு வேண்டிச் செய்தனவே. உதாரணமாக, சீவகசிந்தா மணியில், 'பண்ணுலாங்கிளவி' (1481) என்பது முதல் 'கலைத்தொகை' (1489) என்பது ஈருக ஒன்பது செய்யுளும், ஒரு தொடராகும் என்று பிரதிகளிற் காணப்படுகிறது. ஐயர் பதிப்பிலும் 'ஒன்பதும ஒரு தொடர்' என்ற குறிப்புக் காணப்படுகிறது. இதற் கேற்ப இவ் ஒன்பது செய்யுளும் தொடர்ச்சியாகவே பிரதிகளிற் கொடுக்கப்பட்டுள்ளன; உரைகளும் ஒருசேர இவற்றின் பின்னர் எழுதப்பட்டுள்ளன. இம்முறையை மாற்றி, ஐயர் ஒவ்வொரு செய்யுளையும் அதன் உரையையும் தனித்தனியே தம்முடைய பதிப் பில் கொடுத்துள்ளார்.

இவர் பதிப்பில் திருந்த வேண்டிய இடங்கள் இல்லையென நினைப்பதும் தவறு. சீவகசிந்தாமணியில் நான்கு பதிப்புக்கள் வெளிவந்துவிட்டன; என்ருலும் பல இடங்கள் திருத்தம்பெற வேண்டியனவாக உள் ளன. ஒருசில, சைவசமாஜப் பதிப்பின் முன்னுரையில்

(1941), என்றுற் காட்டப்பட்டுள்ளன. உதாரணத்தின் பொருட்டு இங்கே வேறுசில காட்டுகிறேன். 'நெட்டிருங் கூந்தலாடன் நேர்வளை முன்கைபற்றி' என்ற அடி சிந்தாமணியில் 835-ம் செய்யுளில் வருகின்றது. இதற்கு நச்சிஞர்க்கினியர் 'நெட்டிருங்குழல்: நெடு, பண்புதொகு மொழியாதலிற் புணர்க்கப்படாதாயிற்று' எனக் குறிப்பு எழுதினர். ஆகவே, அவர் கொண்ட பாடம் 'நெட்டிருங் குழலினுள்' என்பதாதல் வேண்டும். இப்பாடம் ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படுகிறது. ஆகவே, ஐயர் தமது பதிப்பில் 'நெட்டிருங் கூந்தலாள்' என்று கொண்ட பாடம் பொருந்தாமை எளிதில் உணரலாம். இங்ஙனமே 1375-ம் செய்யுளில் 'துனிவாயின' என்பது பிழை; 'துனியாயின' என்றிருத்தல் வேண்டும். 1922-ம் செய்யுளில் 2-ம் அடியும் 3-ம் அடியும் தம்முள் மாறி வைக்கப்பட்டுள்ளன. உரையை நோக்கினுல் இம் முறை பிழையாதல் அறியலாம். பிரதிகளிற் காணு மாறு மூன்றும் அடி இரண்டாவதாகவும இரண்டாம் அடி மூன்றுவதாகவும் வைக்கப்பெறுதல் வேண்டும்.* 1821-ல் 'வந்துவிட்டார்' என்பது 'சென்றுவிட்டார்' என்று திருந்துதல் வேண்டும். 964-ல் 'நலங்கெழு' என்பது 'நலந்தகு' எனத் திருத்தமடைதல் வேண்டும். 1182-ல் 'எறித்திட் டன்னதோர்' என்பது 'எறித்த தன்னதோர்' என்று பதிப்பிக்கப்பெறுதல் வேண்டும். 1642-ல் 'சென்றகோல்' என்பது 'சென்றுகோல்' என்று திருந்துதல் வேண்டும். இங்ஙனம் பல. இன்னும், இவர் பதிப்பில் பாடபேதங்கள் அனைத்தும் தரப்படாமையும் ஒரு குறையாம். 1941-ம் செய்யுளில்

---

*இத்திருத்தம் நான்காம் பதிப்பில் (1942) செய்யப்பட்டுள்ளது.

'நெடுங்கணூர்' என்ற பாடமும், 1912-ம் செய்யுளில் 'வாளவா' என்ற பாடமும், 1800-ம் செய்யுளில் 'ஆழ்துயர் விடுத்தற் கொத்த' என்ற பாடமும் காட்டப்படவில்லை. இங்ஙனம் பல.

இக்குறைகள் தமிழாராய்ச்சி சிறந்தோங்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இங்குக் காட்டப்பட்டன. ஐயரது முயற்சி யாரேயெனினும் ஒருவரால் தாமாகவே செய்து முடிக்கக் கூடும் அளவினதன்று. பலவகையிலும் உதவி செய்யத்தக்க வித்துவான்கள் வேண்டியதாயிருந்தது. இவ்வகை உதவியும் இவருக்கு நிரம்பக் கிடைத்திருந்தது என்பதை நாம் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளலாம். இங்ஙனம் உதவியவர் பெயர்களுள் ஒருசில தமிழ் அறிஞர்களால் பெரிதும் போற்றப்படுவனவாகும். சிலர்* சிற்சில நூல்கள் வெளியிடும் பொழுது அவற்றிற்கு மாத்திரம் உதவி புரிந்து வந்தனர். வேறுசிலர்† ஐயர் செய்துவந்த பற்பல வெளியீட்டு முயற்சிகளிலும் நெடுங்காலம் உடனிருந்து உதவியுள்ளார்கள். ஐயரது அருமைத் தம்பியாராகிய வே. சுந்தரேச ஐயரும் இப்பெருந் தொண்டில் உடனிருந்து பெரிதும் உழைத்து வந்தனர்.

---

*தேரழுந்தூர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், மகாமகோபாத்தியாய ம. வி. இராமாநுஜாச்சாரியார், வை. மு. சடகோபராமாநுஜாச்சாரியார், பின்னத்தூர்-அ. நாராயணசாமி ஐயர், எம்பல்-பொன்னுசாமிப் பிள்ளை, திருவாவடுதுறை-பொன்னுசாமிச் செட்டியார், மணலூர் - சொக்கலிங்கத் தம்பிரான், சிதம்பரம் - சுவாமிநாத ஐயர், வே. வேங்கடராஜுலு ரெட்டியார் முதலியோர்கள்.

† இ. வை. அனந்தராமையர், திருமானூர் - கிருஷ்ணையர், கி. அருணசல ஐயர், ம. வி. துரைசாமி ஐயர், கோ. சேஷாத்திரி ஐயர், சு. கோதண்டராமய்யர், வி. மு. சுப்பிரமணிய ஐயர், கி. வா. ஜகந்நாதையர் முதலியோர்கள்.

வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியாரும் சில காலம் ஐயருக்கு உதவியாயிருந்ததுண்டு. உடனிருந்து உதவியவர்கள் பொருட்டு மாதநிவேதனமாக ரூபாய் ஐம்பது சேதுபதிகள் கொடுத்து வந்ததும் நாம் நன்றியுடன்பாராட்டத்தக்கது. முன்குறித்தவர்களது உதவியேயன்றி, வடமொழி நூற்பொருள், சிலாசாஸனம், பிறசமயப் பொருள்கள் முதலியவற்றைக் குறித்துத் தக்க பெரியோர்களிடம் ஐயர் விசாரணைசெய்து பயன் பெற்றிருக்கின்றனர். இவர்களுள்ளே ராவ்பகதூர் வி. வெங்கையா, து. அ. கோபிநாத ராவ், வி. கனகசபைப் பிள்ளை, பெருகவாழ்ந்தான் மகாமகோபாத்தியாய ரங்காச்சாரியார், ஈச்சம்பாடி சதாவதானம் ஸ்ரீநிவாஸாச்சாரியார், மகா வித்வான் ரா. ராகவையங்கார் முதலிய பெரியோர்களைக் குறிப்பிடலாம்.

இவர்களெல்லாம் நூற்பரிசோதனைக்கு உதவியவர்கள். நூல்களைப் பிரதி செய்து கொடுத்தோர்களுள் கிருஷ்ணசாமி நாயுடு என்பவரைத் தனிப்படக் கூறுதல்வேண்டும். நூற்பிரதிகளைக் கொடுத்து உதவியவர்களுடைய ஞாபகம் தமிழ்மக்களால் என்றும் போற்றத்தக்கது. இவர்கள் திருநெல்வேலி, தூத்துக்குடி, ஆழ்வார் திருநகரி, தென்காசி, ஆறுமுகமங்கலம், மதுரை, மழவராயனேந்தல், மிதிலைப்பட்டி, திரிசிரபுரம், வீடூர், சென்னை, சேலம், யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலேயுள்ள பரம்பரைத் தமிழ் வித்வான்களுடைய குடும்பத்தினர். இவர்களேயன்றி, வேறு சிலரும்* பிரதிகள்பெற்று ஐயருக்கு உதவியிருக்கின்றனர். நம் நாட்டிலுள்ள ஆதீனங்கள் முதலியவும் பிரதிகள்

* மயிலை அருணாசல உபாத்தியாயர், அ. சண்முகம் பிள்ளை, பாங்கிப்பேட்டை லக்ஷ்மண பிள்ளை, சுவாமிநாத பண்டிதர் முதலியோர்கள்.

கொடுத்து உதவியுள்ளன. திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், செங்கோல் மடம், மந்தித்தோப்பு மடம், போரூர் சிதம்பர சுவாமிகள் மடம், மதுரைத் தமிழ்ச்சங்கம் முதலியன சிறப்பாகக் கூறத்தக்கன. மேற்குறித்த இடங்களிலுள்ள தமிழ்நூற் கருவூலங்களை ஐயர் நன்ருகப் பயன்படுத்தியுள்ளார். இவர் கையில் சங்கநூல்கள் முதலியன கிடையாமற் போயிருந்தால், இப்பொழுது அந்நூல்கள் சிதல்வாய்ப்பட்டுப் பெரும்பாலும் அழிந்திருக்கும் என்பது திண்ணம். அவ்வாறு அழிந்தொழியாதபடி பிரதிகளைப் பாதுகாத்து, அவற்றைத் தமிழ் மக்களுக்குச் செம்மையாக்கியுதவிய ஐயருக்கு நாம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிருேம்.

இங்ஙனம் தமிழ்த் தொண்டு புரிதற்குப் பெரும் பொருள் வேண்டும் என்பது சொல்லாமலே அமையும். பொருளுதவி செய்தோரும் பலர். பூண்டி அரங்கநாத முதலியார், சேலம் இராமசாமி முதலியார், சேதுபதிகள், பாண்டித்துரைத் தேவர், சிறுவயல் முத்துராமலிங்கத் தேவர், அ. இராமநாதச் செட்டியார், கே. சுந்தரராம ஐயர், பெரும்பன்றியூர் பெரியசாமி முத்தைய உடையார், ப. ஐ. சின்னசாமிப் பிள்ளை, கொழும்பு பொ. குமாரசாமி முதலியார், பொ. இராமநாத முதலியார், ஸ்ரீகாந்த முதலியார், இராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார், ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர், T. C. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், திருச்சி பட்டாபிராம பிள்ளை முதலியவர்கள் தமிழ் மக்களால் என்றும் நன்றியுடன் பாராட்டுதற்குரியர். இவர்களேயன்றி, திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், செட்டி நாட்டுச் சபைகள், சென்னை ஸர்வகலாசாலைமுதலியனவும் தக்கவாறு பொருளுதவி செய்து ஐயரவர்களைப் பாராட்டி

யுள்ளன. இவ்வாறாக ஏற்பட்ட பொருளுதவியால் தான், நாம் இன்று ஐயரது பதிப்புக்களைப் பெற்றுப் படித்து இன்புறுகிறோம்.

ஐயர் இறுதிவரை தமிழின் பொருட்டுத் தம் காலத்தை முழுதும் பயன்படுத்திவந்தனர். என்றாலும், இவர் தாமாக முழுப்பொறுப்பையும் ஏற்று நன்றாக உழைத்து வந்தது சுமார் 1930 வரை என்று தான் நாம் சொல்லுதல் வேண்டும். இதற்குப்பின் தளர்ச்சி மேலீட்டினால் ஐயர் தமது சிஷ்யர்களையே முற்றும் நம்பிவிட வேண்டியதாயிற்று. இதனால், முன் பதிப்பித்த நூல்களின் செம்மைப்பாடு பின் வெளிவந்தன வற்றுள் இல்லை. இதற்கு உதாரணமாகக் குறுந் தொகைப் பதிப்பைக் கூறலாம். இதன்கண்ணே பாட நிச்சயத்திலும், பொருளுணர்ச்சியிலும் பிழைகள் பல உள்ளன என்பது தமிழறிஞர்கள் நன்குஉணர்ந்ததே.

இப்பிற்காலத்தில் பல வசன நூல்களும் ஐயரவர் களால் வெளியிடப்பெற்றுள்ளன. இவைகள் இவர் நெடுங்காலமாகத் திரட்டி வைத்துள்ள குறிப்புக்களி னின்றும் எழுதப்பட்டவை. இவர் எழுதியது என நாம் நன்கறிந்துள்ள உரைநடைக்கும் இவ்வசனநூல் களிலுள்ள உரைநடைக்கும் பெரிதும் வேறுபாடுள்ளது. ஆங்கில மணமும், இளமை எழுச்சியும், கலை யுணர்ச்சியும் இவற்றில் பெரிதும் காணப்படுகின்றன. ஆனால், இவற்றிற் காணும் பொருள்கள் அனைத்தும் ஐயர்க்கேயுரியன என்பதில் சிறிதும் ஐயப்பாடில்லை.

ஐயரது வாழ்வு நிரம்பிய வாழ்வு. காலத்தால் நிரம்பிய வாழ்வு ; கல்வியாலும் ஆராய்ச்சியாலும் நிரம்பிய வாழ்வு ; பலதிறப்பட்ட பெருமையாலும், பரந்த புகழாலும் நிரம்பிய வாழ்வு. தமிழ்ப் புலமை யுலகில் ஐயர் தம் காலத்தில் தனியாட்சி புரிந்தார் என்றே சொல்லவேண்டும். இந்நிரம்பிய வாழ்விற்கு

மேலே குறித்த சில வாய்ப்பான நிகழ்ச்சிகள் காரண மாயின என்று சிலர் கருதலாம். இக்கருத்துச் சிறிய தோர் அளவில் உண்மையே. அவ்வாய்ப்புக்களிற் பல வேறு சிலர்க்கும் உளவாயிருந்தன. அவர்கள் பெயர் களையேனும் தற்காலத்தவர்கள் அறிவார்களா? அறிய மாட்டார்கள். இவ்வாய்ப்புக்களைப் பயன் படுத்தி, தமது ஊக்கத்தாலும், சலிப்பறியாத உழைப் பினாலும், இடைவிடாத கல்வியினாலும், ஆராய்ச்சியி னாலும், தமது வாழ்வை நிரம்பிய வாழ்வாக ஐயரே செய்துகொண்டனர் என்பதுதான் உண்மை. 1935-ம் ஆண்டு மார்ச்சுமாதம் 9-ம் தேதியன்று இவரது சதா பிஷேகத் திருவிழாவைத் தமிழ்நாடு முழுதும் மகிழ்ந்து கொண்டாடியது ; பொன் முடிப்பும் அளித்தது.

இந் நிரம்பிய வாழ்வினால், தமிழன்னைக்கு மதிப் பரிய பெருந் தொண்டியற்றிய பெரும் பேராசிரியர் டாக்டர் சாமிநாதையர். இவருடைய பூதவுடம்பு இப்பொழுது மறைந்து விட்டது. ஆனால் இவர் புக ழுடம்பு சென்னைக் கடற்கரையிலே, அரசாங்கக் கல் லூரியின் முகப்பிலே, சிலைவடிவாக நின்று காட்சி யளிக்கிறது. தமிழ்க்காதல் நிரம்பியமைந்த திருமேனி; தமிழ்ச் சுவடிகள் இருக்கும் இடங்கட்கெல்லாம் ஓடி யோடிச்சென்ற திருவடிகள்; ஏட்டுச்சுவடிகள் பெற்று ஆனந்தாதிசயத்தால் விதிர்விதிர்க்கும் திருக்கரங்கள்; தமிழின் பெருமையையும் தமிழின் தொன்மையையும் நினைத்த மாத்திரையில் உள்ளத்தே ஓங்கி வருகின்ற உவகையால் ஓங்கியமைந்த திருப்புயங்கள் ; தமிழ் - ஒளியும், தமிழ் - அறிவும் ஒருங்கு விளங்குகின்ற திரு நயனங்கள் ; தமிழ்த்தொண்டு என்னும் தவத்துறை யிலே நெடுங்காலம் ஒழுகி முதிர்ந்த திருக்கோலம் : இவை நமது கண்ணுக்கு விருந்தாய் அமைந்து நிற் கின்றன.

# மகா வித்வான் ரா. ராகவையங்கார்

சேது ஸம்ஸ்தான மகாவித்வான் ஸ்ரீ ரா. ராகவையங்கார் அவர்கள் சென்ற ஆனி மாசம் 27-ம் தேதி வியாழக்கிழமை (11-7-46) ஆசாரியன் திருவடிகளை அடைந்தார்கள். இவரது மறைவு தமிழறிஞர்கள் அனைவரும் பெரிதும் வருந்துதற்கு ஏதுவாயுள்ளது. சென்ற ஐம்பது ஆண்டுகளாக இவர் தமிழ் அன்னைக்குச் செய்துவந்த தொண்டுகள் மிகப் பல.

இளமையிலேயே கல்வி யறிவும் மதிநுட்பமும் மிக்கு, பாஸ்கரசேதுபதி அவர்களின் அரசவையிலே பெரும் புலவராய் ராகவையங்கார் விளங்கினார். இப்பேரவைக்கு வடமொழி, தமிழ், இசை முதலிய பல துறைகளிலும் வல்ல பேரறிஞர்கள் பலர் அடிக்கடி வந்து தமது கல்வியைப் புலப்படுத்திப் புகழொடும் பொருளொடும் திரும்பிச் செல்லுதல் வழக்கமாயிருந்தது. அக் காலங்களில் ஐயங்காரும் உடனிருந்து மகிழ்ந்து தமது கல்வி நலனைப் பலரும் வியக்குமாறு வெளிப்படுத்தி வந்தனர். இவ் அனுபவம் பிற்காலத்தில் இவருக்குப் பெரியதோர் துணையாய் அமைந்தது.

பல புலவர்களும் ஒருங்கே கூடித் தமிழாராய்தற்கு ஒரு சங்கம் நிறுவ வேண்டும் என்று சேதுபதியவர்கள் உணர்ந்தார்கள். இக் கருத்து வலியுறுவதற்கும் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவுதற்கும் பெருங் கருவியாக நின்றவர்களில் ஒருவர் ராகவையங்கார். இச்சங்கத்தின் தலைமையை ஸ்ரீ பாண்டித்துரைத் தேவரவர்கள் ஏற்றுக்கொண்டபொழுது, அவர்களுக்கு உறுதுணையாய் நின்று நன்கு உதவிவந்தவரும்

இவரே. அக் காலத்து இவரது புகழ் மிகவும் வளர்ந் தோங்குவதாயிற்று.

தமிழ் நாட்டிலுள்ள தமிழறிஞர்கள் பலரும் இவரது புலமையைக் கேள்வி மூலமாய்த் தெரிந்து வியந்துவந்தபோதிலும், அதனை நேரில் அறிந்துகொள் வதற்குத் தக்க வாய்ப்பில்லாமல் இருந்தது. சங்கத்தில் செய்துவரும் ஆராய்ச்சிகளையும் பிறஅறிஞர்களுடைய ஆராய்ச்சிகளையும் வெளியிடுவற்குச் சிறந்த பத்திரிகை ஒன்று தொடங்கவேண்டு மென்று 1902-ல் சோப கிருது வருஷத்தில் தீர்மானிக்கப்பட்டது. இதன் முதல் பகுதி அவ் ஆண்டில் கார்த்திகை மாசத்திலே வெளிவந்தது. இதன் பத்திராசிரியராக ராகவை யங்கார் தாம் அமைந்தனர். இவரது அரிய ஆராய்ச்சி யுரைகள் பலவற்றையும் கற்று, இவருடைய பெரும் புலமையைத் தமிழ்நாட்டறிஞர் பலரும் அறிந்து பெரி தும் கொண்டாடலாயினர்.

மதுரைத் தமிழ்ச் சங்கமும் செந்தமிழ்ப் பத்திரி கையும் பெரும்புகழ் பெற்று விளங்குவதற்கு இவரே காரணமாயிருந்தார். இலக்கியஆராய்ச்சியும் சரித்திர ஆராய்ச்சியும் இவரால் பெரிதும் ஊக்கப்பட்டன. வி. கனகசபைப் பிள்ளை, து. அ. கோபிநாத ராவ், மு. இராகவையங்கார், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், அ. குமாரசுவாமிப் பிள்ளை, நாகை. வேதா சலம்பிள்ளை, அ. சண்முகம் பிள்ளை முதலிய சிறந்த ஆராய்ச்சியாளர்கள் அரிய கட்டுரைகளைச் செந்தமி ழில் வெளியிட்டு வந்தனர். பத்திராசிரியராக இவர் அமர்ந்து அதுவரை தெரியாதிருந்த பல பொருள் களைப்பற்றி ஆராய்ச்சி யுரைகள் செவ்விய முறையில் எழுதிவந்தார். இவருடைய ஆழ்ந்த கல்வியும், நுணு கிய ஆராய்ச்சித் திறனும், பொருள்களை முறைப்படப்

பாகுபடுத்திப் பிரித்து விளக்கும் பேராற்றலும், அக் கட்டுரைகளில் புலனாகின்றன.

பத்திரிகை வாயிலாக மட்டுமன்றி, பிரசங்க வாயிலாகவும் இவர் தமிழறிஞர்களை இன்புறுத்தி வந்தனர். சங்கச் செய்யுட்களின் நயங்களை எடுத்து விளக்குவதிலும், கம்பராமாயணச் செய்யுட்களின் நயங்களைப் புலப்படுத்துவதிலும் இவர் தம் காலத்தில் ஒப்புமையற்று விளங்கினர்.

இவரது அரிய பெரிய பிரசங்கத்தைக் கேட்பதன் பொருட்டுப் பெருந்திரளாகத் தமிழறிஞர்கள் கூடுவது வழக்கமாயிருந்தது. தமிழ் நாட்டிற் கலாசாலை முதலியவற்றில் இவரை ஆசிரியராகக் கொண்டு போற்ற வேண்டுமென்ற கருத்துப் பலர்க்கும் எழுந்தது. திரிசிரபுரத்தில் தேசீய கலாசாலையில் (National College) சில மாதங்கள் தமிழாசிரியராகவும் விளங்கினர். என்றாலும், சேது ஸம்ஸ்தானத்திலேயே இவருடைய வாழ்வின் பெரும்பகுதி கழிந்துவிட்டது.

சில ஆண்டுகளுக்கு முன்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டபொழுது, ரா. ராகவையங்கார் தமிழாராய்ச்சித் துறையில் தலைவராக நியமனம்பெற்றார். அங்கிலையில் இவர் அரிய தொண்டுகள் சில ஆற்றியிருக்கிறார். அவற்றுள் மிகச் சிறந்தது இவரது குறுந்தொகையுரை என்று சொல்ல வேண்டும். இவ் அரிய தொகை நூலின் பாடங்கள் திருத்தமின்றியிருத்தலைக் கண்டு, பிரதிகளின் உதவியாலும் தமது நுட்ப மதியினாலும் ஆராய்ச்சித் திறத்தாலும் உண்மைப் பாடங்களைக் கண்டு அமைத்து நயம்சிறந்த உரையையும் இவர் எழுதி முற்றுவித்தனர். முழுதும் அச்சிடப்பெற்று இவ்வுரை வெளிவாராதது வருந்தத்தக்கதாம். இதுவேயன்றி, தமிழ்வரலாறு என்ற ஓர்

ஆராய்ச்சி நூலும் இவர் எழுதியிருக்கின்றார். இதன் முதற் பகுதியே இப்போது வெளிவந்துள்ளது. இதில் கூறப்படும் முடிவுகளிற் சிற்சில அறிஞர்களால் கொள்ளத் தகாதனவா யிருக்கலாம். எனினும், இவரது ஆராய்ச்சித் திறமும் இவரது வடமொழி அறிவும் இதிலே சிறந்து தோன்றுகின்றன. இவர் எழுதியுள்ள வேறு ஆராய்ச்சி நூல்களில் இங்குக் குறிக்கத் தக்கன 'சேதுநாடும் தமிழும்,' 'வஞ்சிமா நகரம்' என்பனவாம். கம்பர் காலத்தைக் குறித்து இவர் செந்தமிழில் எழுதியுள்ள கட்டுரைகள் ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படும். இவர் இயற்றி வெளியிட்டுள்ள கட்டுரைகள் அனைத்தும் படிக்கப் படிக்க அறிவை வளர்த்து இன்பந்தருவனவாம்.

ஆராய்ச்சி - நூல்களே அன்றி, வடமொழியிலிருந்து ஒருசில நூல்களை இவர் மொழிபெயர்த்து இயற்றியுள்ளார். இவற்றுள் குறிப்பிட்டுக் கூறத் தக்கன பகவத்கீதையும், சாகுந்தலமும் ஆம். கீதையின் மொழிபெயர்ப்பு மயிலாப்பூரிலே அரங்கேற்றியமை பலர்க்கும் ஞாபகத்தில் இருக்கலாம். இந்நூல் தாழிசையால் அமைந்தது ; அச்சில் வெளிவரின் பலரும் கற்றுப் போற்றத்தக்கதாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. இவைகளே அன்றி, வால்மீகி இராமாயணத்திலிருந்தும் வியாச பாரதத்திலிருந்தும் பல அரிய சுலோகங்களைத் தெரிந்தெடுத்து இவர் மொழிபெயர்த்திருக்கின்றனர்.

ஆராய்ச்சி நூல்களும் மொழி பெயர்ப்பு நூல்களும் ஒரு புறம் இருக்க, இவரது அரிய புலமைத் திறன் தோன்றும்படி இவர் இயற்றிய செய்யுள் நூல்களும் சில உள்ளன. இவற்றுள் 'பாரி காதை' ஒன்று. இக் காதை அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் மிக்க சிறப்புடன் அரங்கேற்றப்பட்டது. தமிழ்

நாட்டறிஞர்கள் பலரும் திரள் திரளாக அங்குக் கூடி யிருந்து தங்கள் நன்மதிப்பைத் தெரிவித்தார்கள். செட்டிநாட்டு அரசரவர்கள் அதற்குச் சிறந்த பரிசி லும் உதவினார்கள்.

இச்செய்யுள் நூல் மிகச் செவ்விய உரையோடு வெளிவந்துள்ளது. கருத்து நுட்பங்களை விளக்கும் இவ்வுரையின் நயம் தனிப்பட எடுத்துப் பாராட்டத் தக்கது. நூலின் முன்னுரை சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரையாக விளங்குகிறது. இந்நூலேயன்றி, புவி எழுபது, திருவடி மாலை முதலிய செய்யுள் நூல்களும் இவரால் இயற்றப்பட்டன. சமயோசிதப் பாடல்கள் பலவும் இவர் இயற்றியுள்ளார். இவற்றில் புலப்படும் கற்பனைத் திறமும், கருத்துப்பெருமையும், கவித்துவ மும், பிற நயங்களும் அறிஞர்களது புகழ்ச்சிக் குரியனவாய் விளங்குவன.

ஐயங்காருடைய பிரசங்க வன்மையைக் குறித்து மேலே கூறினோம். சென்னை ஸர்வ கலாசாலையில் இராமாயணம் பற்றி இவர் அருமையான விரிவுரை கள் நிகழ்த்தினார். சென்னை நகரிலுள்ள பிரமுகர்கள் பலரும் வந்திருந்து கேட்டு இன்புற்றார்கள். மகா கனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள், ஸர் எஸ். வரதாச் சாரியார் முதலிய சிறந்த மேதாவிகள் இவரது அரிய சொல்வன்மையையும், மதிநுட்பத்தையும், ஆராய்ச்சித் திறத்தையும் மெச்சி வியந்தார்கள்.

ராகவையங்காரது பல இனிய குணநலன்களையும் வாயாரப் புகழாமல் இருக்கமுடியாது. தாம் கற்ற கல்வியைத் தம்முடன் மாய்ந்து போக விடாதபடி, பிற அறிஞர்க்கு உதவவேண்டும் என்னும் பேரவாக் கொண்டவர் இவர். தாம் அரிதில் ஆராய்ந்து வைத்திருக்கும் துணிபுகளைப் பிறர் விரும்பினராயின் யாதொரு தட்டுத் தடையுமின்றி அவர்க்குக் கூறி

விளக்கிவந்தனர். டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களைப் போலவே, இவரும் நமது பண்டை நூற் கருவூலங்களைத் தேடித் தொகுத்துவைத்தலில் பேரூக்கம் கொண்டவர். இவர் நூற்பதிப்பு முயற்சியை மேற்கொண்டிருந்தால், அந்த நெறியிலும் இவர் தலைசிறந்தவராயிருப்பார் என்பதில் ஐயமில்லை. அகநானூற்றின் ஒரு பகுதியை இவர் பதிப்பித்து வெளியிட்டிருக்கும் அருமைப்பாடே இதற்குச் சான்றும். இத் தொகைநூல் முழுமையும் தாமே பதிப்பித்தற்கெனச் சித்தப்படுத்தியதனை, சென்னை கம்பர்விலாசம் ராஜகோபால ஐயங்கார் வெளியிட விரும்பியபோது அன்புடன் கொடுத்து உதவினுர். 'கைந் நிலை'ப் பிரதியையும் இ. வை. அனந்தராமையர் விரும்பிய போது இவர் மனமுவந்து அளித்தனர். இங்ஙனமே, இளம்பூரணம் செய்யுளியல் உரைப் பிரதியையும், நவநீதப் பாட்டியல் உரையையும், இவர் யாதொரு வகைக் கைம்மாறும் கருதாதபடி எனக்குக் கொடுத்து வெளிவரச் செய்தனர்.

இவர் அரிதில் தொகுத்த ஏட்டுச் சுவடிகள் இப்பொழுது பலர்க்கும் பயன்படுமாறு அண்ணுமலைப் பல்கலைக் கழகத்து நூல் - நிலயத்தில் வைக்கப்பட்டுள்ளன. பிறர்க்கு உதவும் இவ் அருங் குணமேயன்றி, இவருடைய பெருந்தன்மையும் பிற நல்லியல்புகளும் அனைவரையும் வசீகரிக்கத் தகுந்தன. இப்பெரியாரை நாம் என்றும் மறக்க முடியாது. இவரது ஞாபகத்தை நாம் தக்கவாறு போற்றுதல் வேண்டும்.

# தேசியகவி சுப்பிரமணிய பாரதி

(11-12-1882 - 11-9-21)

## வாழ்க்கை

தமிழ்நாட்டுப் பெருங்கவிஞருள் ஒருவர் சி. சுப்பிரமணிய பாரதி. இவர் திருநெல்வேலி ஜில்லாவில் பிரதான ஜமீன் நகராகிய எட்டையபுரத்தில் 1882-ம் ஆண்டு கார்த்திகை மாதம் மூலநாளில் (11-12-1882) பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சின்னசாமி ஐயர்; தாயார் பெயர் லட்சுமி அம்மாள்.

முன் காலத்தில் ஒவ்வொரு ஜமீனிலும் அந்தந்த ஜமீன்தாருடைய ஆதரவில் பல புலவர்கள் வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் ஜமீன்தார்களைப் பற்றிப் பாடல்களும் பிரபந்தங்களும் இயற்றி வந்தனர். அன்றியும், பரம்பரைத் தமிழ்க் கல்வியையும் காப்பாற்றி, அடுத்த தலைமுறையார்க்கு வழங்கியும் வந்தார்கள். இவ்வாறு கல்வி நிலையமாக விளங்கிய ஜமீன்களில் எட்டையபுரம் மிக முக்கியமானதாகும். பாரதியினுடைய இளமைப் பருவம் இந்த நகரிலே தமிழ்ப் புலவர்களிடையே கழிந்தது. இதனால் இவரிடம் தமிழ்ப் புலமை மிக்க இளம் பருவத்திலேயே தோன்றலாயிற்று. தமது பதினோராவது வயது முதற்கொண்டே இவர் பாடல்கள் இயற்றத் தொடங்கினர்.

ஆனால், பள்ளிப் படிப்பில் பாரதி மேன்மை பெறவில்லை. இவரது தந்தையார் திருக்குறள், கம்பராமாயணம், தாயுமான சுவாமி பாடல் முதலிய நூல்களைச் சொல்லி வைத்தார். இந் நூல்களிலே பாரதிக்கு மிகவும் ஆழ்ந்த பற்று ஏற்பட்டிருந்தது.

இவற்றைப் படிப்பதிலும், சுயமாகக் கவி பாடுவதி லும் மனமுழுவதையும் செலுத்தி வந்தார். இவ ருடைய கவித்திறத்தைக் கண்டு நண்பர் சிலர் கூடி 'பாரதி' என்று பட்டப்பெயர் சூட்டியதாகக் கூறப் படுகிறது. இவர், தமது ஊரைவிட்டு, திருநெல்வேலி இந்து கலாசாலையிற் கற்கும்படி அங்கே போக நேர்ந் தது. அங்கே சென்றதும் தமிழ்மீது ஆர்வமுள்ள பல நண்பர்கள் இவருக்குத் துணைவரானார்கள். இவ ருடைய கவித்வமும் தங்குதடையின்றித் தானே சுரந்து பெருகி வந்தது.

இந்து கலாசாலையில் ஐந்தாவது பாரம் முடியத் தான் இவர் கல்வி பயின்றது. பிறகு தமது அத்தை வசித்து வந்த காசிநகருக்குச் சென்றார். அங்கே அலகாபாத் ஸர்வகலாசாலையில் பிரவேச பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினார். அக்காலத்தில் தமது ஸம்ஸ்கிருத அறிவை அபிவிருத்தி செய்துகொண்டார்.

பாரதி பிறந்த நகரத்தின் தலைவராகிய எட் டையபுரம் ஜமீன்தார் 1901-ல் பாரதியாரை வர வழைத்து, ஜமீனில் ஓர் உத்தியோகம் கொடுத்தார். இந்த உத்தியோகத்தை 1904-வரைதான் பாரதி வகித்து வந்தார். அப்பொழுதுங்கூட, தமிழ்க் கவி இயற்றுதலையே தம்முடைய வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார். அண்ணாமலை ரெட்டி யார் இயற்றிய காவடிச் சிந்து அக் காலத்தில் மிகவும் பிரபலமடைந்திருந்தது. அதைப் போலவே, பாரதி யாரும் ஒரு காவடிச் சிந்து இயற்றியுள்ளார். அந் நூலில் சில சரணங்களே இப்போது நமக்கு அகப்படு கின்றன.

தமிழ்மீது பாரதியாருக்கு இருந்த ஆர்வமானது உத்தியோகத்தை அவர் விட்டுவிட்டு, மதுரைக்குச் செல்லும்படி செய்தது. அங்கே தமது கவித்திறமை

யையும், கல்வித் திறமையையும் பலரும் மெச்சும்படியாகச் சில காலம் வாழ்ந்து வந்தனர். மூன்று மாதங்கள் மதுரைச் சேதுபதி கலாசாலையில் தமிழாசிரியராகவும் இருந்தார்.

தமிழ் - ஒளி சிறந்துவிளங்கிய இக்கவிஞருடைய உள்ளத்திற்குப் பண்டைப் பழம்பாடல்களைச் சொல்லிக்கொடுத்து நாள் கழிப்பது வெறுப்பாகத் தோன்றிற்று. கலாசாலையை விட்டுச் ‘சுதேசமித்திரன்’ பத்திரிகைக்கு உதவி ஆசிரியராகச் சென்னைக்கு வந்தார்.

அப்பொழுது நாடெங்கும் தேசபக்திக்கனல் ஜொலித்துக் கொண்டிருந்தது. பாரதியின் உள்ளம் இக்கனலில் உருகி மெழுகுபோல் ஆகிவிட்டது. பாரத மாதாவை வணங்கி அவள்மீது அழியாப்புகழ் மாலைகள் பலவற்றைப் பாடினார். தமிழ் நாட்டைப் பற்றியும் உணர்ச்சி ததும்பும் அழகிய பாடல்கள் பலவற்றைப் பாடியிருக்கிறார். அவற்றுள் ஒன்று வருமாறு :

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே

இவரது கவிதைகளிலுள்ள வேகமும், உணர்ச்சியும் இவர் எழுதிய வசனநடையிலும் புகுந்து அதற்குப் புதியதான ஓர் ஒளியைக் கொடுத்தன. பல அரிய கட்டுரைகள் எழுதிச் சுதேசமித்திரன் வாயிலாக வெளியிட்டு வந்தார். இவர் இயற்றி வெளியிட்ட பாடல்கள் அப் பத்திரிகைக்குத் தனிப்பட்ட பெருமை அளித்துவந்தன.

பாரதி உத்தியோக நியதிகளைப் பொருட்படுத்தாதவர். அந்நியதிகள் தம்முடைய சுதந்திரத்திற்கு விலங்குகள் என்று நினைத்தார். இதனால் 'இந்தியா' என்றபெயரோடு கூடிய ஒரு வாரப் பத்திரிகையைத் தாமே தொடங்கினார். அக் காலத்தில்தான் பாரதியாரின் புகழ் தமிழ் நாட்டில் எங்கும் பரவலாயிற்று. இவருடைய எழுத்திலும், கவியிலும் செறிந்துள்ள வல்லமையை அப்போதுதான் தமிழ் மக்கள் உணர ஆரம்பித்தனர். இப் பத்திரிகை 1909-வரை நடைபெற்று வந்தது.

பின்னர் இவர் புதுச்சேரிக்குச் செல்லும்படி நேர்ந்தது. அங்கே இவர் சுமார் எட்டு வருஷ காலம் வாழ்ந்து தமதுகருத்துக்களைப் பயமின்றி வெளியிட்டு வந்தார். அங்கே இருந்த காலத்தில் ஸ்ரீ அரவிந்த கோஷ் என்னும் பெரியாரோடு பழகி அவரது தத்துவக் கொள்கைகளில் ஈடுபட்டார். புதுச்சேரியினின்றும் 1918-ல் மீண்டு வந்தார். தமது மனைவியின் ஊராகிய கீழக்கடையத்தில் சில காலம் இருந்தனர். பின் 1920-ல் சென்னைக்கு வந்து மீண்டும் சுதேசமித்திரன் பத்திரிகையின் உதவியாசிரியராக அமர்ந்தார்.

அவர் சென்னையில் வாழ்ந்து வந்தது திருவல்லிக்கேணியிலாகும். அவர் தினந்தோறும் கோயிலுக்குச் செல்லுவது வழக்கம். அப்பொழுதெல்லாம், தேங்காய், பழம் முதலியவற்றைக் கோவிலின் வாசலிற் கட்டியிருந்த யானைக்குக் கொடுத்துவிட்டு உள்ளே சென்று தரிசனம் செய்து திரும்புவார். அந்த யானைக்கு ஒரு நாள் மதம் பிடித்துவிட்டது. பாரதியார் வழக்கம் போல் யானையின் அருகில் வந்து அதை அன்போடு அழைத்துத் தேங்காயையும் பழத்தையும் கொடுத்தனர். யானை அவரைத் துதிக்

கையால் தள்ளிவிட்டது. பாரதியார் கீழே விழுந்து விட்டார். இவ் அதிர்ச்சியினின்றும் மீளாமல் 1921-ம் ஆண்டு, செப்டம்பர் மாசம் 11-ம் தேதி இரவு சுமார் ஒன்றரை மணிக்கு, திருவல்லிக்கேணி தெளிசிங்கப் பெருமாள் கோவில் தெரு, 67-ம் இலக்கமுள்ள வீட்டில் மரணமடைந்தார்.

பாரதியின் பூதவுடம்பு மறைந்துவிட்டாலும், இவர் புகழ் தமிழ்மொழி உள்ளவரையிலும் நிலை பெற்று நிற்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

## உள்ளமும் கவிதையும்

கிரீஸ் தேசத்துச் சரித்திரத்தில் ஒரு நிகழ்ச்சியை நினைவூட்ட விரும்புகிறேன். ஒரு காலத்தில் போர் ஒன்று நடைபெற்றது. அப்பொழுது ஒரு கிரேக்கப் புலவர் வீரம் ததும்பும் பல பாடல்களை இயற்றினாராம். இவை காட்டுத்தீப்போல மக்களிடையே பரவின. யுத்தவீரர்களும் ஊக்கத்துடன் இவற்றைக் கற்று ஆவேசங்கொண்டு போர்புரிந்து வெற்றி பெற்றனராம். சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னர் தூரதேசத்திலே இது நிகழ்ந்தது. பாடல்களின் ஆற்றலால் அவற்றைக் கற்பவர்கள் துணிவு கொண்டு அரும்பெருஞ் செயல்களை இயற்றவல்லவர்கள் ஆவார்கள் என்பதற்கு இதுசான்று. தற்காலத்திலே நமது நாட்டிலே நமது கண்முகப்பிலேயும் ஒரு சான்று நிகழ்ந்தது. பாரதியாரின் தேசிய கீதங்களின் விளைவே நான் இங்கே கருதியது.

நாம் வாழும் தென்னிந்தியப் பகுதியை 'இருள் செறிந்த மாகாணம்' என்று குறிப்பிடுவது வழக்கம். அரசியல் பற்றிய அளவில் நமது மாகாணம் மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருந்தது என்பது இதன் கருத்து. நமது நாட்டுச் சரித்திரத்தை அறிந்தவர்கள் இதனை ஒப்புக்கொள்ளாமல் இருக்கமுடியாது. ஆங்கில துரைத்தனத்தாருக்கு மிதமிஞ்சிய பரிவும், ஆதரவும் காட்டியவர்கள் நமது தென்னிந்திய மக்களே. அத்துரைத்தனத்தார் செய்யும் சிற்றுதவியைக் கூடப் பெரிதாக நினைத்து அவர்களுக்கு அடிமை பூண்டு வாழ்தலிலேயே நம்மவர்கள் மகிழ்ச்சிகொண்டிருந்தார்கள். என்றென்றும் அடிமையாக வாழவும் ஒப்பினர். "தினைத்துணை நன்றி செயினும் பனைத் துணையாக் கொள்வர் பயன் தெரிவார்" என்ற

குறளைத் தவருன முறையிலே பொருள்பண்ணிக் கொள்ளுதல் நம்மவர்களுக்கு எளிதுதானே !

அடிமை வாழ்வில் நம்மவர்கள் மோகம் கொண்டிருந்ததுபோலவே, ஆங்கிலமொழிக்கும் அடிமையாக இருந்தனர். மேல் நாட்டு அறிவு நூல்கள் முதலியவற்றைக் கற்று, திருந்திய மனப்பண்பு உடையர்தல் இன்றிமையாதது. இதற்கு மாருக, ஆங்கில மொழியை மாத்திரம் கற்று, அதில் ஒருவாறு பேசக் கற்றுக் கொண்டவுடனே ஆங்கிலப் பெரும் புலவர் என்று தம்மை மதித்து, இவ்வாய்ப்புப் பெருத மற்றவர்களை இகழ்ந்து நகையாடினர். ஆங்கிலத்திலுள்ள பேரிலக்கியங்களையும் இவர்கள் கற்றவரல்லர். அம்மொழியிலுள்ள சொற்களை ஆங்கிலேயர் உச்சரிக்கும் முறைப்படியே தாமும் உச்சரிப்பதே தமது வாழ்வின் பயனெனக் கருதினர்.

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினற் போலுமே
கல்லாதான் கற்ற கவி

என்ற கவிக்குத் தக்க உதாரணமாக இவர்கள் அமைந்தார்கள். இந்த உச்சாரணத்தை நன்ருகத் தெரிந்து கொள்வதற்குவேண்டி, ஓர் அறிஞர் ஆங்கில அகராதி முழுமையும் உச்சரிப்பு முறையுடன் கற்ருராம்! பயனற்ற வீண் முயற்சிக்கு இதனைக் காட்டிலும் சிறந்த உதாரணம் எங்கேனும் காணமுடியுமா ?

மேற்குறித்த ஆங்கில மோகம் ஒரு புறம் இருக்க, நம்மவர்கள் நமது தாய்மொழியை எவ்வாறு போற்றினர் என்பதைக் கவனிப்போம். எல்லாத் துறைகளிலும் ஆங்கிலத்திற்கே முதலிடம். கல்வித் துறையிலும்கூட அப்படித்தான். தமிழ்க்கல்வி நாட்டு

மொழிக் கல்விதானே என்று ஒரு புறமாக ஒதுக்கி வைக்கப்பட்டது. இதனைக் கற்பித்து வந்தவர்கள் தமிழின் சரித்திரத்தையும், அதன் தற்கால நிலையையும், அதன் வளர்ச்சியையும், மேற் கதியையும் தெரிந்து கொள்வதில் சிறிதும் ஊக்கமற்றவர்கள். இவர்களுக்குப் பண்டைக் காலத் தமிழில் ஒருவாறு பயிற்சி உண்டென்று சொல்லலாம். ஆனால் அப் பண்டைக்காலத்து வாழ்க்கை வரலாறுகளையும் சரித்திரங்களையும் தெரிந்துகொள்ளத்தானும் இப்பயிற்சி உதவவில்லை. 'பண்டைக் காலத் தமிழ்தான் சிறந்தது. அதனையே சுமார் 2000 ஆண்டுகளுக்குப் பிற்பட்டு வாழும் நாமும் கையாள வேண்டும்' என்ற கருத்துக் கொண்டவர்கள். தொல்காப்பிய இலக்கணம்தான் தமிழ்மொழியின் ஆயுட்கால முழுமையும் அதனை அடக்கி ஆளவேண்டும் என்ற கொள்கையும் உடையவர்கள். இவர்களோடு ஒரு வகையில் வேறுபட்ட கொள்கை யுடையவர்களும் நம் நாட்டில் இருந்தனர். இந்திய மொழிகள் அனைத்திற்கும் தாய் என்று தாம் கருதும் வடமொழியும் அம்மொழியிலுள்ள நூற் கருத்துக்களும் நம் நாட்டில் தனியாட்சிபுரியவேண்டு மென்று இவ்விரண்டாவது வகுப்பினர் கொண்டனர். வடமொழி வழக்கற்ற பண்டைமொழி யென்பதை இவர்கள் உணரவில்லை. இம்மொழியிலுள்ள நூற் கருத்துக்கள், அவை தோன்றிய காலத்து மிக்க பெருமையுடையனவாய் இருந்தாலும், தற்காலத்துக்கு ஒவ்வாதவை என்பதனையும் இவர்கள் தெரிந்து கொள்ளவில்லை. இவற்றை மட்டும் தனித்து நம்மவர்கள் கற்று அமைவார்களாயின், நமக்கு உய்தியில்லை யென்பதையும் இவர்கள் அறியவில்லை.

கல்வித்துறை இங்ஙனமாக அமைந்தது. சமுதாயத் துறையை நோக்குவோம். ஒவ்வொரு சமுதாயத்

திற்கும் அதற்கே தனித்து உரிய பழக்க வழக்கங்கள் பலபல உண்டு என்பதை அறிஞர் அனைவரும் ஒப்புக் கொள்வர். நீண்டகால சரித்திர வாழ்வுடைய எந்தச் சமுதாயமும் இதற்கு விலக்காக மாட்டாது. நமது தென்னாட்டுச் சமுதாயங்களும் விலக்கானவை அல்ல. இப் பழக்க வழக்கங்களிலெல்லாம் மிகக்கொடியது சாதிப் பிரிவு என்று உறுதியாகக் கூறலாம். நால் வகைச் சாதி வடநாட்டில் உண்டென்பர். இது ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் அங்கிருந்த நிலையாக இருக்கலாம். ஆனால் காலம் செல்ல செல்ல, பல வேறு சரித்திர காரணங்களால் வடநாட்டிலே யும் சாதிகள் மிகப் பலவாயின.

நமது தென்னாட்டிலோ இந்தச் சாதிகள் இன்னும் எத்தனையோ மடங்கு அதிகமாகப் பிரிந்து விட்டன.

ஆயிரம் உண்டு இங்குச் சாதி

என்று கூறியதெல்லாம் சாதிப்பிரிவுகள் கணக்கில் அடங்கமாட்டா என்ற கருத்துக் கொண்டே ஆகும். சாதிப் பிரிவினையால் தென்னிந்திய சமுதாயம் பெரி தும் அல்லற்பட்டு வந்தது. அற்ப விஷயங்களிற்கூட ஒற்றுமை என்ற பேர்போலும் நமக்குள் இல்லாம லாக்கியது. எங்கும் செருக்கு, பொறாமை, உட்பகை.

சமயத்துறையை நோக்குக. ஈண்டும் நம் நாட்டில் மிகக் குறுகிய எண்ணங்கள் தலைமை கொண்டிருந் தன. புண்ணிய ஸ்தலங்களுள் ஒன்றாகக் கருதக் கூடிய காசியில் அங்கே எழுந்தருளியுள்ள விஸ்வேஸ் வரரை இந்தியர்கள் எல்லோரும் கையினால் தீண்டி வழிபாடு செய்ய இயலும். இது வடநாட்டினரது விரிந்த மனப்போக்கை உணர்த்துகிறது. நமது தென் னாட்டிலோ என்றால், அர்ச்சகர் விபூதி முதலிய பிர

சாதங்களைக் கூட வழிபடுவோரது கையிலிடாது தூரத்தே எறிந்து, அவர்கள் எடுத்துக்கொள்ளும்படியாகச் சில இடங்களிற் செய்கிறார்கள். இது தென்னாட்டவர்களுடைய மனப்போக்கை நன்கு தெரிவிக்கிறது.

ஆகவே, வடநாட்டைக் காட்டிலும், தென்னாட்டில் அஞ்ஞான இருள் மிக அதிகமாகப் பரவியிருந்தது. இத் தென்னாட்டை 'இருள் செறிந்த மாகாணம்' என்று குறிப்பிட்டது தவறாகுமா?

நமது மாகாணத்தில் ஆங்கிலத் துரைத்தனம் வலிமை பெற்று நீடிப்பதற்குத் தகுதியான சூழ்நிலை அமைந்துவிட்டது. அவர்களும் தங்கள் அதிகாரத்தைப் பூரணமாகச் செலுத்தி வந்தனர். நம்மவர்களும் அடிமை வாழ்வில் மோகம் கொண்டு அதில் திளைத்து இன்புற்று வந்தனர். "இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?" என்ற உதாசீன மனப்போக்கு நமக்கு இயற்கையாகி விட்டது. நாம் அடிமை என்ற உணர்ச்சியே நமக்குச் சிறிதும் ஏற்படவில்லை.

ஆனால் இவ்வுதாசின புத்தியும் மறதியும் நீடித்திருக்கவில்லை. காங்கிரஸ் என்று வழங்கிவரும் தேசீயத் திருக்கூட்டம் நமது அடிமை வாழ்க்கையைச் சிறிது சிறிதாகப் புலப்படுத்தி வந்தது. ஆங்கிலேயரது தந்நலம் பேணும் முயற்சிகளும், அரசியல்பற்றி அவர்கள் செய்து வந்த அநீதிகளும், கையாண்டு வந்த அடக்கு முறைகளும் நாம் அடிமைகளே என்பதை மிகத் தெளிவாக்கி விட்டன. அவர்கள் கொள்ளக் கருதிய லாபத்திற்கு நாம் குறுக்கிடுவோமானால், நம்மைப் பலியிடத் தயங்கமாட்டார்கள் என்பதும் வெட்ட வெளிச்சமாயிற்று. நாம் அவ்வாறு குறுக்கிடாமல் இருத்தற்கு வேண்டும் உபாயங்களையும் அவர்கள் கையாளத் தலைப்பட்டனர். பஞ்சதந்திரங்

களில் ஒன்றுகிய மித்துருபேதம் (divide and rule) அவர்களுக்கு உகந்த தந்திரமாயிற்று. 1905-ல் நிகழ்த்திய வங்காளப் பிரிவினை இதனை நன்கு காட்டியது. அவர்கள் லாபத்திற்கு விரோதமாக நமது தென்னுட்டில் முயற்சி செய்தவர்களுள் தலை சிறந்தவர் வ. உ. சிதம்பரம் பிள்ளை. நமது நாட்டிற்கும் இலங்கைக்கும் போக்கு வரவு நிகழ்வதற்கு, நம்மவர்களுடைய உதவி பெற்று, கப்பல் கம்பெனி யொன்றை இவர் 1906-ல் அமைத்தார். இந்தக் கம்பெனிக்குச் சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி என்று பெயர். பரம்பரையாக வர்த்தகத் துறையிலேயே வாழ்ந்து பொருளீட்டி வந்த ஆங்கிலேயருக்கு இது பொறுக்க முடியாத செயலாக இருந்தது. ஆங்கில சமூகமே சிதம்பரம் பிள்ளையை அடக்கக் கருதியது என்று கூறலாம். ஆனுல் கப்பலோட்டிய தமிழ வீரரை எளிதில் அடக்கமுடியுமா? அவரை அடக்கினுலும், அவர் ஏற்றிவைத்த சுதந்திர வாஞ்சையை அடக்க முடியுமா? அவருடைய சொற்பொழிவுகள் தமிழ் மக்கள் உள்ளத்தில் என்றும் அவியாத நெருப்பை மூட்டிவிட்டன. அவருக்கு ஆங்கிலேயர்கள் விளைத்த துன்பங்கள் இந் நெருப்பைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தன. என்றுலும் தீவிரமாகத் தேசத்திற்கு உழைக்கவும் ஆங்கில துரைத்தனத்தை எதிர்க்கவும் மக்கள் அஞ்சினர். தமிழ் நாடெங்கும் மிதவாதிகளே நிரம்பியிருந்தனர். சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர், நம்முடைய சென்னை மாகாணத்தில், உண்மையான தீவிர தேசீய வாதிகள் வாழமுடியாத நிலைமையும் வெளியாயிற்று.

அக்காலத்தில் சுப்பிரமணிய பாரதியாருக்குச் சுமார் இருபத்தைந்து வயது; கட்டிளமைப் பருவம்; தீவிர தேசபக்தி அவர் உள்ளத்தே ஒளிவிட்டுச்

சுடர்ந்தது. தேசமக்கள் மீது ஆராத காதல் கொண்டவராயினர். சாதிப்பிரிவினை முதலிய தீய பழக்கங்களை முற்றும் அழிக்கக் கருதினர். பெண்களின் விடுதலை அவசியம் என்று உணர்ந்தனர். நமது நாட்டிலுள்ள அஞ்ஞான இருளைப் போக்குவதே தமது முதற் கடமை எனக்கொண்டனர். அடிமை வாழ்வை முற்றும் வெறுத்தனர். அத் தளையை அறுப்பதற்கு வேண்டும் முயற்சிகளை எல்லாம் செய்யத் துணிவு கொண்டனர். ஆனால் தீவிர அரசியல் முயற்சிகளை இவர் மேற்கொள்ளவில்லை. இம்முயற்சியால் விளையும பயனை நேர்முகமாக அன்றிப் பிறிதொரு வழியால் மிகவுறுதியாக அடையலாமென்று இவர் தீர்மானித்தனர். சமுதாயச் சீர்திருத்த முயற்சியிலும், அறிவின் சீர்திருத்த முயற்சியிலும் இவர் முனைந்து நின்றனர். இம் முயற்சிகளை இவர் உள்ளத்தில் தேசபக்தியோடு ஒன்றித்து மூண்டெழுந்த கவித்துவக் கனலே நிறைவேற்றியது. இருளடர்ந்த நாட்டில் அறிவு விளக்கு ஏற்றியவர் பாரதி.

இங்ஙனமாக, தேசபக்தி என்ற பண்ணையில் வளர்ந்தது பாரதியின் கவிதை. ஆனால், பாரதி பிறவியிலேயே கவித்துவம் படைத்தவர். இவரது பிறப்பிடமாகிய எட்டையபுரத்தில் இவரைச் சூழ இருந்தவர்கள் எல்லாரும் இவரது கவித்துவத்தைத் தெரிந்து போற்றிவந்தனர். சம்ஸ்தான வித்துவான்களும் பாரதியைப் பாராட்டினர், எட்டையபுரம் அரசர் அவர்களும் இவரை மெச்சி இவரது கவிதைகளை மிகவும் அநுபவித்து வந்தார். என்றாலும், இக் கவிதைகளெல்லாம் பழைய நெறிகளையே பின்பற்றியவை. காதல், மடல் முதலிய சிருங்காரப் பாடல்களே பெரும்பாலும் சம்ஸ்தானத்தில் வேண்டியவையாய் இருந்தன. இவைகளை இயற்றுவதில் பாரதியின்

இளமைப் பருவம் ஒருவாறு கழிந்தது. அக் காலத்தில் மிகுதியும் புகழப்பட்டு வந்தது அண்ணாமலை ரெட்டியாரது காவடிச் சிந்து. அதைவிடச் சிறந்ததாக ஒரு காவடிச் சிந்து இயற்ற முடியாது என்று ஒருவர் கூறினர். பாரதியார் ஒரு நாளிலேயே மிகச் சிறந்த காவடிச்சிந்து ஒன்று இயற்றி ஸம்ஸ்தான அரசர் முன்பு அதனை வாசித்துக் காட்டினர். இச் செய்தி அவருடைய தீவிரமான கவித்துவ சக்தியையும், அசாதாரணமான சொல்வளத்தையும், கடினமான சந்தங்களை வகுத்துப் பாடும் ஆற்றலையும நமக்கு நன்றாகத் தெரிவிக்கின்றது. பாரதியாரின் தந்தையார் சின்னசாமி ஐயர் இக் கவிதை வாழ்வை விரும்பவில்லை. கூரிய அறிவுடைய தமது குமாரர் ஆங்கிலம் கற்றுச் சிறந்த பதவியில் வாழவேண்டுமென்று கருதினர். எனவே பாரதியைத் திருநெல்வேலி இந்து கலாசாலைக்குக் கல்வி பயில அனுப்பினர். ஆனல், பாரதியின் மனம் ஆங்கிலக் கல்வியில் செல்லவில்லை. ஆங்கிலக் கல்வி தேசபக்தியைக் கெடுப்பது என்றும் உண்மையில் பயனற்றது என்றும், அவ் இளம் பருவத்தில் எண்ணிவிட்டனர். அவர்,

கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர், பின்
　கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார் ;
அணிசெய் காவியம் ஆயிரங் கற்கினும்,
　ஆழ்ந்தி ருக்குங் கவியுளம் காண்கிலார் ;
வணிக மும்பொரு ளூநூலும் பிதற்றுவார்,
　வாழு நாட்டிற் பொருள்கெடல் கேட்டிலார் ;
துணியும் ஆயிரஞ் சாத்திர நாமங்கள்
　சொல்லு வார், எட் டுணைப்பயன் கண்டிலார்.

என்று தமது சுயசரிதையில் பாடியுள்ளார். தமது தந்தைக்குச் செலவு மேன்மேலும் ஏறிக்கொண்டு

சென்றது. தமக்குத் தீங்கும் மேன்மேலும் வளர்ந்து வந்ததென்று கருதினர். அவர்,

*செலவு தந்தைக்கோ ராயிரஞ் சென்றது ;*
*தீதெனக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன ;*
*நலமொ ரெட்டுணை யுங்கண்டி லேன்; இதை*
*நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்*

என்று கூறியுள்ளார். இவ் ஆங்கிலக் கல்வியினின்றும் பிழைத்து வெளியேறுவதற்குத் தருணத்தை எதிர்பார்த்திருந்தனர்.

இவரது தந்தையார் இவரது பதினன்காம் ஆண்டில் இவருக்கு மணவினை முடித்தனர். அடுத்த ஆண்டில் அவர் தாமும் நோயுற்று இறந்தார். அவர் தமது குடும்பத்தை வறுமையிலேயே ஆழ்த்திவிட்டுச் சென்றனர். உற்ருர் உறவினர் முதலியவருடைய உதவி பாரதிக்குச் சிறிதும் இல்லாது போயிற்று. ஒருவாறு நல்ல நிலைமையில் இவருடைய அத்தை காசியில் வாழ்ந்து வந்தனர். அங்கே இவர் செல்லும்படி நேர்ந்தது.

இவரது அத்தையின் கணவனுர் கிருஷ்ண சிவன் இவரை மீண்டும் ஆங்கிலக் கல்வி கற்கும்படி வற்புறுத்தினர். இவரும் அலஹபாத் சர்வகலாசாலையில் பிரவேச பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினர். தமக்குச் சிறிதும் பயிற்சியில்லாத இந்தி மொழியைப் பாடமாகக் கொண்டு மேற் கூறியபடி தேர்வில் சிறந்து விளங்கினது இவரது அறிவின் ஆற்றலை நன்ருக உணர்த்துகின்றது. ஆனல் இவரது உள்ளம் ஆங்கிலக் கல்வியிலே தளைப்பட்டுவிட மறுத்தது. சீர்திருத்த விஷயங்களில் அது தீவிரமாக முனைந்து வந்தது. கிருஷ்ண சிவன் இதனைப் பொறுத்திருக்க முடியுமா? அவர் ஒரு பக்திமானுகவும், வைதிக-

ஒழுக்கத்திற் சிறந்தவராகவும் விளங்கினர். தமது உறவினருள் ஒருவன் வைதிகத்திற்கு விரோதமாக இருப்பதைப் பிறர் கண்டால் தம்மை மதிக்கமாட்டார்கள் என்று கருதினர். எனவே, பாரதி தம்மோடு கூடி வாழ்வதற்கு அவர் இணங்கவில்லை. தம் அத்தையின் அன்பினாலே தான் பாரதி அகதியாய் விடவில்லை. இந்த நிலையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியானது மிகவும் சுவையுள்ளது.

ஓர் ஆண்டிலே மார்கழிமாதம் திருவாதிரை நாள் வந்தது கிருஷ்ணசிவன் இவ் உற்சவத்தைச் சிறப்பாகக் கொண்டாடி வருவது வழக்கம். இவரது மடத்தில் யாத்திரீகர்களும், பக்தர்களும் கூடி இருப்பார்கள். திருவெம்பாவையை ஓதுவார் பாட, அனைவரும் சிரத்தையுடன் கேட்டுப் பக்தியில் மூழ்குவார்கள். இவ் ஆண்டில் ஓதுவார் குறித்த நேரத்தில் வந்து சேரவில்லை. கிருஷ்ணசிவன் மிகவும் வருந்தினர். அப்பொழுது அவரது மனைவி 'என்ன இவ்வளவு யோசனை? நம் சுப்பையா (பாரதி) இல்லையா, ஓதுவாரைக் காட்டிலும் திருத்தமாகப் பாடுவதற்கு?' என்று சொல்லி, பாரதியின் கிருப்புத் தலையை மறைத்துப் பட்டுத் தலைப்பாகை கட்டி, விபூதியைப் பட்டை பட்டையாக இட்டு, ருத்திராக்ஷ கண்டிகையையும் இவர் கழுத்தில் அணிவித்து, அழைத்து வந்து பாடச் செய்தனர். முறைப்படி திருவெம்பாவையைப் பாரதியார் பாட, தீபாராதனை முடிந்தது. பின்பு பாரதியாரும், அவர் உறவினரான மூதாட்டி ஒருவரும் சேர்ந்து "பார்க்க பார்க்கத் திகட்டுமோ - உன்தன் பாத தரிசனம்" என்ற நந்தன் சரித்திரக் கீர்த்தனையை உருக்கமாகப் பாடினர். கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் உளங்கரைந்து நெக்குருகிப் பரவசம் அடைந்தார்கள். இப்பாடல்களை யெல்லாம்

கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணசிவன் பாரதியாரை அன்போடு தழுவி "அப்பனே, இவ்வளவு சிறு வயதில் இவ்வளவு ஞானம் ஏற்பட்டு விட்டது. நாங்கள் வெறும் ஆஷாடபூதிகள். எங்களுக்குத் தான் குடுமியும் வேதியர் வேஷமும் வேண்டியது. உன்னைப் போன்ற உண்மையான ஞானிகளுக்குக் குடுமியும் வேண்டாம்; பூணூலும் வேண்டாம்." என்று உளங்குழைந்து புகழ்ந்தார். இந்தச் சரித்திரக் குறிப்பினால் பாரதியின் உண்மையான இயல்பும், கவிதையின் கருத்துக்களில் ஆழ்ந்து ஈடுபட்டுப் பரவசம் எய்தி அநுபவிக்கும் திறமும், இவ்அநுபவத்தைப் பிறருக்கும் ஊட்டி நுகரச் செய்யும் அற்புத சக்தியும் நமக்குப் புலனாகின்றன.

பிறருக்குப் பாரமாகக் காசிப்பதியில் வாழ்ந்த வாழ்க்கை பாரதியாருக்குத் திருப்தியாக இல்லை. இதினின்றும் பிழைத்து வெளியேறுவதற்கு எட்டையபுரம் அரசர் உதவி புரிந்தனர். தமது ஸம்ஸ்தானத்திற்கே திரும்ப வந்து ஆஸ்தானக் கவிஞராகப் பாரதி அமர்ந்திருக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். அவ்விருப்பத்திற்கு இணங்கி, காசி வாழ்க்கையை உதறித்தள்ளி விட்டு, பாரதியார் எட்டையபுரத்திற்கு மீண்டனர்.

இவ்வாழ்க்கையும் பாரதியாருக்கு வெறுப்பையே விளைவித்தது. காசி வாழ்வில் இவர் பிறருக்குப் பாரமாக இருந்தார். எட்டையபுர வாழ்வில் இவர் பிறருக்கு அடிமையாக வாழ நேர்ந்தது. அரசருக்கு வேண்டும் வினோதப் பாடல்களைப் பாடுவதும், அவரது யாத்திரையின்போது உடன் சென்று, தமது சுவை நிரம்பிய பாடல்களால் அவரை மகிழ்விப்பதும், இவர் மேற்கொண்ட வேலையாக முடிந்தது. பூரண சோபையுடன் விளங்கவல்ல இவரது ஆத்மா குன்றிப்

பொலிவிழந்துவிடும் நிலை அடைந்தது. எனவே, இவ் வாழ்க்கையினின்றும் பிழைத்து வெளியேறும் தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். செந்தமிழ்க்கு உறைவிடமாகிய மதுரைக்கு இவர் ஒருமுறை சென்றனர். அங்குள்ள சேதுபதி உயர்தரப் பள்ளிச்சாலையில் தமிழாசிரியர் பதவியை ஏற்று உயிர் வாழத் தொடங்கினர். ஆனால், இவ்வாழ்க்கையும் நீடித்து நிற்கவில்லை. நவநவமாகக் கவிதைகளைப் பொழியும் ஆற்றல் வாய்ந்த இவருக்குப் பண்டைப் பழஞ் செய்யுட்களுக்குப் பதவுரை, பொழிப்புரை, இலக்கணக் குறிப்பு முதலியவற்றை மாணாக்கர்களுக்குப் போதித்து வருவது தமது அரிய காலத்தை வீணாகக் கழிப்பதாகும் என்று தோன்றிற்று. அன்றியும் தற்காலத்துள்ள தமிழைக் கற்பியாது பெரும்பாலும் பண்டைத் தமிழைக் கற்பிப்பது மாணாக்கர்களுக்குக் கேடு விளைப்பதாம் என்றும் கருதினர். இவற்றை யெல்லாம் கருதி மனச்சாட்சியுடன் இவர் போரிட்டுக் கொண்டிருந்தனர் அச் சமயத்தில் இவ் வாழ்க்கையினின்றும் வெளியேறுவதற்கு ஒரு வசதி ஏற்பட்டது. சுதேசமித்திரன் பத்திரிகாசிரியர் ஜி. சுப்பிரமணிய அய்யர், பாரதியின் அரிய ஆற்றலையும் தீவிர தேச பக்தியையும் கண்டு மகிழ்ந்து, இவரைச் சென்னைக்கு வரவழைத்து, தமது பத்திரிகை நிலையத்தில் அமர்த்திக் கொண்டனர்.

பாரதியின் உண்மையான வாழ்வு சுதேசமித்திரன் நிலையத்தில் தொடங்கியது என்று கூறலாம். தமது நாட்டிலும் பிற நாடுகளிலும் நிகழ்ந்துவரும் அரசியல் நிகழ்ச்சிகளை யெல்லாம் அவ்வப்போது அறிந்து, அவற்றிலே ஈடுபடும்படியான நிலைமை இப்போது உண்டாயிற்று. அரசியல் விஷயங்களைக் குறித்துத் தமது உள்ளத்தில் நிரம்பிவரும் கருத்துக்

களை எழுத்து வடிவமாகத் தினந்தோறும் வெளி யிடும் சௌகரியமும் இப்போது தான் கிடைத்தது. தேசபக்தி காரணமாகத் தம்மைப்போல் அடிமை வாழ்வில் அகப்பட்டுத் துன்பப்படும் மக்கள் மீது எழுந்த பரிவினால், இவரது உள்ளம் அனலிற்பட்ட மெழுகு போல் உருகுவதாயிற்று. உருகிய சமயங் களில் இவரது ஆத்மாவின் அடிப்பள்ளத்தினின்றும் வெளிவந்த பாடல்கள் கேட்போர் மனத்திலெல் லாம் ஒரு நூதன உணர்ச்சியையும் வேகத்தையும் உண்டுபண்ணின. தாம் இயற்றிய கவிதைகளை இவர் பாடும்போது இவரது ஆத்மசக்தி முழுவதும் அப்பாட லில் பிரதிபலிக்கும். ஆயிரக்கணக்கான மக்கள் சென் னைக் கடற்கரையில் கூடியிருந்து இவருடைய அபூர்வ மான பாடல்களைக் கேட்டு, இவரது ஊக்கத்தை வளர்த்துவந்தனர். தாங்களும் தேசபக்தியில் ஈடு படுவாராயினர். பிஜித் தீவில் நமது தேசத்திலிருந்து கொண்டு போகப்பட்ட ஏழைப் பெண்-தொழிலாளர் கள் படும் சொல்லொணுத துன்பத்தைத் தமது சொற் களிலே அமைத்து ஒரு பாடலைப் பாடினர். கேட் டிருந்தோர் அனைவரும் உள்ளம் கலங்கி, கண்ணீர் வார்த்துச் சோகமயமாக மாறிவிட்டனர். அதுதான்,

பல்லவி

கரும்புத் தோட்டத்திலே—ஆ!
கரும்புத் தோட்டத்திலே

சரணம்

கரும்புத் தோட்டத்திலே—அவர்
கால்களும் கைகளும் சோர்ந்து விழும்படி
வருந்துகின்றனரே!—இந்து
மாதர்தம் நெஞ்சு கொதித்துக் கொதித்துமெய்

சுருங்குகின் றனரே!—அவர்
துன்பத்தை நீக்க வழியில்லையோ? ஒரு
மருந்திதற் கில்லையோ?—செக்கு
மாடுகள் போலுழைத் தேங்குகின்றார் அந்தக்
(கரும்புத் தோட்டத்திலே)

என்று தொடங்கும் பாடல். எல்லையற்ற சோகமும் எல்லையற்ற இதய தாபமும், கோபமும் ஒருங்கு புலப்படும் இச்செய்யுள் நம்மையும் பிஜித் தீவில் நிகழ்ந்த கொடுமையில் ஆழ்த்தி விடுகிறது மிதவாதிகளா யிருந்து நன்மை புரிந்துவந்த ஆனரபில் வி. கிருஷ்ணசாமி ஐயர் முதலிய பெரியோர்கள் இவர் பாடல்களால் உருகி, இப் பாடல்களை அச்சிட்டுப் பலரும் கற்றுப் பயன் பெறுமாறு செய்தனர். இது போன்ற பாடல்கள் ஆங்கில ஸாம்ராஜ்யத்தையே அதிரும்படியாகச் செய்துவிட்டன. ஆங்கிலத் துரைத்தனத்தார் இவரைத் தங்கள் அரசியலின் பெரும்பகைவர் எனக்கொண்டார்கள்.

தமது தீவிரவுணர்ச்சியால் சுதேசமித்திரனுக்கும் தடையுத்தரவு பிறந்து விடுமோ என்ற அச்சம் உண்டாயிற்று. அன்றியும், தாமும் அஞ்சி யஞ்சி எழுத வேண்டியதா யிருந்தது. எவ்விதமான அச்சமுமின்றி, சுதந்திரவுணர்ச்சிகளைக் கொட்டி, அடக்குமுறை முதலிய அநீதங்களைக் கண்டித்து, எழுதுவதற்கு வேறு பத்திரிகை தொடங்கவேண்டு மென்று கருதினர். இதன் முடிவாக, இந்தியா என்ற பத்திரிகையைப் பாரதி வெளியிடத் தொடங்கினர். தமிழ் மக்கள் இதயத்தில் சண்டமாருதம் சுழற்றி யடித்தது. இவரது இச்செயல் குறித்துத் தமக்கு விரோதமான பிரசுரங்களை வெளியிடாமல் தடுப்பது தங்கள் கடமையெனத் துரைத்தனத்தார் சூழ்ந்து துணிந்தனர். இவர்மீது வாரண்டுகள் பிறந்தன. இவற்றினின்றும்

தப்பிச் செல்லவேண்டும் அவசியமும் இப்போது நேர்ந்தது.

இந்நிலைமையில் இவர் மனத்தில் நிகழ்ந்திருக்கும் போராட்டத்தைக் குறித்து நாம் அறிந்துகொள்ள யாதொரு சான்றும் அகப்படவில்லை. மற்றத் தேச பக்தர்கள் போல, பாரத தேவியைச் சிறை மீட்டு வதற்குத் தாமும் சிறை புகவேண்டுமென்ற அவா ஒரு பக்கம் இவர் மனத்தை அலைத்து இழுத்திருக்க வேண்டும். தேசபக்தியை ஊட்டுவதற்கும், பரப்பு வதற்கும் சிறந்த கருவியாய் அமைந்து தம் இதய முழுவதையும் ஆட்சி புரிந்து வந்த கவித்துவத்தின் பொருட்டுச் சிறை புகாமல் வெளியே சுதந்திரமாக இருக்க வேண்டுமென்ற அவா இவரை மற்றொரு பக்கம் ஈர்த்திருத்தல் வேண்டும். இவர் சிறைபுகாது சுதந்திரத்தையும் கவித்துவத்தையும் பாதுகாக்க வேண்டுமென்று இவரது நண்பர்கள் வற்புறுத்தினர். இதற்கிணங்கிச் சென்னை நகரை விட்டு மறைவாய்ப் புறப்பட்டுப் புதுச்சேரியாகிய சுதந்தர பூமிக்குச் சென்றனர். அங்கும ஆங்கிலத் துரைத்தனத்தார் இவரைப் பின்பற்றித் துன்புறுத்தினர். என்றாலும் சுமார் ஒன்பது ஆண்டுகளுக்கு மேலாக அங்கே வாழ்ந்து, தமது கவித்வத்தையும், சமுதாய நோக்கங்களையும் இவர் பேணிவந்தனர்.

தேசபக்தி என்ற பண்ணையில் வளர்ந்தது இவர் கவிதை என்று முன்னே கூறினேன். பாரதியார் தாமும் தமது கவிதைப்பூஞ்சோலையிலே பாரததேவி தெய்விக மாமலர் சூடி நர்த்தனம் புரிகின்றாள் எனப் பாடியுள்ளார்.

தீஞ்சொற் கவிதையஞ் சோலை—தனில்
தெய்வீக நன்மணம் வீசும்

தேஞ்சொரி மாமலர் சூடி—மதுத்
தேக்கி நடிப்பள்எம் அன்னை

என்னும் பாடலே இதனைப் புலப்படுத்துகின்றது. இங்கு அன்னை என்பது பாரததேவியை. இவர் பாடல்கள் அனைத்திலும், எழுதியன எல்லாவற்றி லும், தேசபக்தி என்ற நறுமணம் கமழ்கின்றது. நாமும் நமது முன்னோர்களும் தொழுது வந்த தெய் வங்கள் எல்லாம் பாரததேவியின் மூர்த்தங்களே என்று பாரதியார் கொண்டுள்ளார். இத் தெய்வங்க ளெல்லாம் சுதந்திரத்தின் பொருட்டாகவே புகழ்ந்து ஏத்தப்படுகின்றன. பாரதம், இராமாயணம் முதலிய வீர காவியங்களில் வெளிப்படும் ஸ்த்ரீ புருஷர்கள் அனைவரும் பாரததேவியின் அம்சங்களே என்று கொள்ளப்படுகின்றனர். பாரததேவியும் பராசக்தி யின் சொரூபமே. அவளுடைய உக்கிர மூர்த்தம் நமது பகைவர்களையெல்லாம்வேரோடு அழித்துவிடக்கூடிய பேராற்றல் வாய்ந்தது. அவளை வணங்கும் வீர சுதந்திர மதமே தமதுமதமெனப் பாரதியார் கொண் டனர் ஆனால் இம் மதம் நமது தேசத்தின் அளவில் மட்டும் சுருங்கி அமைந்துவிட்டதாக அவர் கருத வில்லை. இம்மதம் காலதேச வர்த்தமானங்களைக் கடந்தது; உலக முழுவதும் பரந்துள்ளதாகவே பாரதியார் கருதினர். கிறிஸ்து, முகம்மது முதலிய மத ஸ்தாபகர்களெல்லோரும் நமது இந்திய மக்கள் அனைவரும் வணங்கவேண்டும் பெருந் தெய்வங்க ளென்றே இவர் கொண்டனர். இவரது உடல் பொருள் ஆவி மூன்றனையும் திறை கொண்டது இச் சுதந்திர உணர்ச்சியே. சுதந்திரமே இவரது பிரா ணன் என்று கூறலாம். இவர் இயற்றியுள்ள சுதந்தி ரப் பாடல்களிலே மேற்கூறிய பொருள்களெல்லாம்

மிகத் தெளிவாக ஆழ்ந்த உணர்ச்சியோடு, மிக்க ஆற்றலோடு, வெளியிடப்பட்டுள்ளன.

உண்மையான தேசபக்தர்களைப் பாரதியார் முடிதாழ்த்திப் பணிகின்றனர். காந்தியடிகள், லஜபதிராய், திலகர் முதலியவர்களைக் குறித்து இவர் பாடியுள்ள பாடல்கள் மேற்கூறியதற்குச் சான்றாகும். மிதவாதிகளை இவர் மதித்ததில்லை. வெளி வேஷங்களை இவர் முற்றும் வெறுத்தனர். நம் நாட்டிலும் பிற நாடுகளிலும் உள்ள உண்மைத் தேசபக்தர்களின் செயல்களைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டுகின்றார். ஆங்கிலேயரின் அதிகார மனப்பான்மையையும, நமது இந்தியரின் மனப்பான்மையையும் தெளிவாக எடுத்து விளக்குகின்றார். இவ்வாறு விளக்குமிடங்களில் இவரது நாடகத் திறமையானது நன்றாகப் புலப்படுகின்றது.

வெளி நாட்டவரால் புகுத்தப்பட்ட அடிமைத்தனத்தைப் போல, நமது நாட்டினரால் பண்டைக் காலந்தொட்டு மேற்கொள்ளப்பட்ட பல வகையான அடிமைத்தனங்கள் நமது வாழ்வைக் கட்டுப்படச் செய்துள்ளன. சாதிபற்றிய பிரிவினையால் நம்மவர் அடைந்துள்ள அல்லற்பாடுகளும் பாரதியாரின் கவிதைக்குத் தக்க விஷயங்களாயின. அது முற்றும் அழிந்தாலன்றித் தேசத்திற்கு விடுதலை இல்லை என்பதை இவர் தெளிவாக உணர்த்துகின்றார். சுதந்திரத்தின் நிலைமை எவ்வாறிருக்கவேண்டும் என்று தமது மனோபாவனையால் கண்டு தமது தலைமைக் கொள்கைகளை,

ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்மம் இத் தேசத்தில் எய்தின ராயின்
வேதிய ராயினும் ஒன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினும் ஒன்றே

* * * *

ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?

என்ற அருமைப் பாடல்களால் இவர் உணர்த்தியிருக்கின்றனர். சாதிப் பிரிவு ஒழிய வேண்டு மென்று இவர் கருதியதுபோல, பெண்களின் அடிமைத் தனமும் ஒழிய வேண்டு மென்று இவர் வற்புறுத்திக் கூறினர். நாகரிகத்தின் அளவுகோல் பெண்களின் நிலைமை என்ற உண்மையை இவர் நன்குணர்ந்தவர். இவ் விடுதலையைப் பற்றி இவர் பாடும் பொழுது தனிப்பட்ட எக்களிப்பும் உற்சாகமும் இவருள்ளத்தில் ததும்புகின்றன.

மாதர்க் குண்டு சுதந்திரம் என்று நின்
வண்மலர்த்திரு வாயின் மொழிந்த சொல்
நாதந் தான்அது நாரதர் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ?
வேதம் பொன்னுருக் கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச் சொல்வதோ?
சாதல் மூத்தல் கெடுக்கும் அமிழ்தமோ?
தையல் வாழ்க பல்லாண்டு பல்லாண் டிங்கே!

* * * *

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்:
அமிழ்ந்து பேரிரு ளாம்அறி யாமையில்
அவலமெய்திக் கலையின்றி வாழ்வதை
உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணறம் ஆகுமாம்:
உதய கன்னி உரைப்பது கேட்டிரோ!

இவை போன்ற பாடல்களிலே இந்த எக்களிப்புக் கூத்திடுவதைக் காணலாம்.

பாரதியாருக்குக் கலைச் செல்வம் நிரம்பியிருந்தது. ஆனால், பொருட் செல்வம் இவருக்குச் சிறிதும் இல்லாது போயிற்று. எப்பொழுதும் வறுமைதான். இவரது மனைவியும் புதுச்சேரிக்கு வந்து குடும்ப வாழ்க்கையில் அமர்ந்த பிற்பாடு இவ்வறுமை மிக மிகக் கொடியதாய் முற்றிவிட்டது. இவர் எப்படி உயிர் வாழ்ந்தார் என்று நினைக்குமளவில், நமது நெஞ்சம் வெடித்து விடுவதுபோல் தோன்றுகிறது. இவ் வறுமையையும் தமது கவிதைக் குரிய பொருளாக்கி, தாம் வறுமை வீரராய் விளங்கினர்.

தனியொருவனுக்கு உணவிலையெனில்
சகத்தினை அழித்திடுவோம்

என்று பாடும்போது வறுமையின் கொடுமையை இவர் எவ்வளவாக அநுபவித்துள்ளார் என்பது புலப்படுகிறது.

வறுமையின் சந்நிதியிலே இவர் கவித்துவம் வளர்ந்து முதிர்ந்தது. இவரது ஆத்மா தனது பூரண ஆகிருதியை அடைந்தது. இவரது ஞானம் சுருங்கி வற்றிவிடாது விரிந்து பேராருகப் பெருகி அகண்டத்தின் எல்லையைத் தொட்டு ஒழுகியது. வீரசுதந்தர முழக்கமும், வீரபராசக்தியின் நர்த்தன ஒலியும் இவர் செவிகளில் சப்தித்துக்கொண்டே யிருந்தன. அகத்தே நிகழ்ந்த இம்முதிர்ச்சிக்கு இணங்க, புறத்தேயும் வாய்ப்பான சில சூழ்நிலைகள் அமைந்து விட்டன. அரவிந்தர், வ. வே. சு. ஐயர் முதலியவர்களுடைய நட்பைத்தான் நான் இங்கே குறிப்பிடுவது. அரவிந்தர் சிறந்த மேதாவி; பாரததேவிக்குத் தம்மை அர்ப்பணம் செய்துவிட்ட தேசபக்தர்; கல்வி கேள்விகளில் உலகம் ஒப்பிய ஒரு பெரியார்; சிறந்த ஞானி; நமது தேசத்தில் அதிபுராதன காலத்திலே

வாழ்ந்து ஞானக் களஞ்சியம் எனக் கொண்டாடப் பட்டுவரும் ரிஷிகளுடைய பரம்பரையைச் சார்ந்தவர் என்று கூறும் தகுதி வாய்ந்தவர். வ. வே. சு. ஐயர் அஞ்சாத நெஞ்சு படைத்த தீவிர தேசபக்தர்; திலகர் முதலிய பெரியோர்களின் துணைவர் என்று கூறத் தகுந்த பெருமைவாய்ந்தவர்; மேல்நாட்டு இலக்கியங் களிலே பெரும்பயிற்சி யுடையவர்; தமிழிலே பெருங் கல்வியாளர்; தூய சிந்தை படைத்தவர்; தூய ஒழுக்கம் உடையவர். இவ் இரண்டு பெரியாரது நட்பும் நம் பாரதியாருக்கு வாய்த்தது பெறற்கு அரிய பேறென்றே சொல்லுதல் வேண்டும்.

புதுவை வாசம் பாரதியாரின் சமூதாய நோக்கங்கள் நிறைவேறுவதற்கும் தக்க வாய்ப்புக்களைத் தந்தது. பாரதியாரது அமிர்தமயமான பாடல்களைக் கேட்கும் பாக்கியம் பெற்ற புதுவை மக்கள் அனைவரும் இவரைப் பெரிதும் போற்றிவருவாராயினர். ஏழை மக்களும், இழிந்த சாதியார் என்று கருதப் படும் கபடற்ற பெருமக்களும் இவரைத் தெய்வம் போலவே பாவித்து வந்தனர். நந்தனாரை அந்தணருக்கித் தமது சோதியில் கலந்து கொள்ளுமாறு சிவ பெருமான் செய்த அற்புதத்தைப் பற்றி நாம் படித்திருக்கின்றோம். திருப்பாணாழ்வாரை அந்தணர்கள் தோளின் மீதேற்றி வந்து பெருமாள் சந்நிதியில் கொண்டு நிறுத்த, ஆழ்வாரும் பக்தி பரவசராய்ப் பாடி ஸ்ரீரங்கநாதர் திருவடிகளிலே மறைந்தருளிய சரித்திரமும் கேட்டுள்ளோம். பாரதியார் செய்த புண்ணியச் செயல்கள் இவைகளுக்குச் சிறிதும் தாழ்வு பட்டன அல்ல. ஹரிஜன இனத்தைச் சேர்ந்த ஒருவருக்குப் பூணூல் இடுவித்து அந்தணருக்கிய வரலாற்றை "என் குருநாதர் பாரதியார்" என்ற நூலிலே விவரமாகக் காணலாம். இது போன்ற

துணிகரச் செயல்கள் பலவற்றைப் பாரதியார் செய்து தமிழ்நாட்டையும் தமிழ் மக்களையும் உய்தி நெறியிற் கூடும்படி செய்துவந்தனர். இச் செயல் களுக்கெல்லாம் உடன் இருந்து உதவிய நண்பர்கள் மண்டையம் ஸ்ரீநிவாஸாச்சாரியார், திருமலாச்சாரி யார், குவளை கிருஷ்ணமாச்சாரியார் முதலிய பேரன் பர்களாவர். பிறந்த இடமாகிய எட்டயபுரத்திற்கும், தொழில் புரிந்த இடமாகிய சென்னைக்கும், புகல் புகுந்த இடமாகிய புதுவைக்கும் பெருமை அளித் தவர் பாரதியார். புதுவையில் இவர் வாழ்ந்த இடத்தைத் தமிழ் மக்களின் பொதுவுடைமையாக்கி இந்திய மக்களனைவரும் சென்று தரிசிக்கத் தகுந்த புண்ணிய க்ஷேத்திரமாக அமைப்பது தமிழ் மக்களு டைய கடமையாம்.

மேற்கூறியபடி, பாரதியார் புது நோக்கங்களைப் போற்றினர்; ஆனால் பழமையை அறவே ஒதுக்கியவ ரல்லர். ஒரு நிகழ்ச்சியால் அதனை உணரலாம். மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரை இவர் சிலமுறை சந்தித்திருக்கின்றனர்.* இவ் இரு வரும் திருவல்லிக் கேணியிலேயே அடுத்தடுத்துச் சில ஆண்டுகள் வாழ்ந்துவந்திருக்கின்றார்கள். இருவரும் சந்தித்ததில் வியப்பு யாதும் இல்லை. மிக நெருங்கிப் பழகாமற் போனாலும் சாமிநாதையர் மீது பாரதியார் மிகுந்த பக்தி கொண்டிருந்தார் என்று தெரிகிறது. சிலப்பதிகாரம் முதலிய பெருநூல்களைப் பதிப்பிட்டுத் தந்த தமிழ்ப் பெருவள்ளலும் தமிழ்ப்பேராசிரியரும் ஆகிய உ. வே. சாமிநாதையருக்கு 'மகா மகோபாத்தி யாய'பட்டத்தினை ஆங்கில அரசாங்கத்தினர் அளித்த

---

* இச்செய்தியைச் சாமிநாத ஐயரவர்களது சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ ம. வே. துரைசாமியையர் எனக்குத் தெரிவித்தனர்.

போது, பாரதியார் இயற்றிய பாடல் இங்கே நினைவு கூரத்தக்கது.

'நிதியறியோம் இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தந் துய்க்கும்
கதியறியோம்' என்றுமனம் வருந்தற்க;
குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியுங்
காலமெலாம் புலவர் வாயில்
துதியறிவாய்; அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்;
இறப்பின்றித் துலங்கு வாயே.

இப்பாடல் ஐயர்மீது பாரதியார் கொண்டிருந்த பேரன்பை நமக்கு நன்கு தெரிவிக்கிறது. பட்டம் அளித்ததைக் குறித்து அரசாங்கக் கல்லூரியில் நிகழ்ந்த பாராட்டுக் கூட்டத்திற்குப் பாரதியாரும் சென்றிருந்தனர். ஆனால் இவர் இயற்றிய பாடல் களை இவர் படிப்பதற்கு அனுமதிகொடுக்கப்பட வில்லை. இவர் அரசாங்க விரோதி; வர்ணாச்சிரம ஒழுக் கத்தைத் தூவென்று தள்ளியவர். எனவே சாமிநாத ஐயர் பாரதியாரைச் சந்தித்துப் பழகுவதற்குத் துணிவு கொள்ளவில்லை யெனவே தோன்றுகிறது. இவரையும், இவருடைய கொள்கைகளையும், இவரது தமிழையுங்கூட, ஐயர் மதித்திருந்தனர் என்பதற்குச் சான்று யாதும் இல்லை.

இது பழமைக்கும் புதுமைக்கும் இருந்த பெரிய தோர் பிரிவை நமக்கு உணர்த்துகிறது. புதுமை ஒருவாறு பழமையைப் போற்றிவந்தது. ஆனால், பழமை புதுமையைப் பெரும்பாலும் அஞ்சி வெறுத்து வந்தது. சிறுபான்மை, ஓரளவு உதாசீனபுத்தியுடன் ஒதுக்கிவந்தது என்றுகூடச் சொல்லலாம். பழமை தற்கால அநுபவத்தில் இல்லாத பொருள்களைப்

போற்றி வந்தது; தற்கால வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பற்ற புராதன வாழ்க்கையை நினைத்து மகிழ்ந்துவந்தது; பண்டைப் பழங்காலத்துப் பழம் பொருளைப்பற்றி ஆராய்ச்சி செய்வதிலேயே தோய்ந்து நின்று, நிகழ்காலத்தையும் பின்வரும் எதிர்காலத்தையும் சிறிதும் கருதாது, புது ஞாயிற்றின் ஒளி அறியாது, சிலசில ஒதுக்கிடங்களில் பதுங்கி யிருந்தது. இதற்கும், உயிர்த் தத்துவம் நிரம்பி, ஒளிச்சிறப்பில் மலர்ந்து, புதுப் பொருள்களைக் காணும் மகிழ்ச்சியில் திளைத்த புதுமைக்கும் வெகுதூரமாம். இவ் இரண்டிற்கும் சான்றாக உள்ளவர்கள் சாமிநாத ஐயரும் பாரதியாரும்.

இவ் இருவருக்கும் இருந்த இவ்வேற்றுமை பாரதியார் கவிதைக்கும் அவருக்கு முன்பு தோன்றியுள்ள கவிஞர்களின் செய்யுளுக்கும் உண்டு என்பது தேற்றம். உதாரணமாக, சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன்பு தோன்றிய செய்யுட்களையும், பிரபந்த வகைகளையும் எடுத்து நோக்குவோம். அந்தாதிகள், கலம்பகங்கள், கோவைகள் முதலிய சிறு பிரபந்தங்கள் தமிழ்நாட்டில் அக்காலத்தில் மிகுதியாக இயற்றப் பட்டன. இவைகளில் எல்லாம் உயிர்-ஆற்றல் என்பது மருந்துக்கும் கிடையாது. பழைய மரபுகளைத் தவறாதபடி கையாண்டு, புத்துணர்ச்சி சிறிதும் கலவாதபடி இயற்றிய பிரபந்தங்களே இவைகள். புத்துணர்ச்சி அறவே இல்லை என்று நான் கூறியது அத்துணையாகப் பொருத்தமுடையது அன்று; ஒருவகையான புத்துணர்ச்சி இச் சிறு பிரபந்தங்களிலும் காணப்பட்டது. பெரும்பாலும் காமக் குறிப்புள்ள பாடல்களே இவற்றில் அடங்கியிருந்தன. இப்பாடல்களில் அருவருக்கத்தக்க வருணனைகளும், போக விவரங்களும் நிரம்பி இருந்தன. இவைபற்றி எழுந்தனவே புத்துணர்ச்சி

களாக இப் பாடல்களில் வெளிப்பட்டன. விடு கவிகள் பலபலவும் தோன்றின. இவைகளிலும் உண்மையான கவித்துவம் காணப்படவில்லை. அஷ்ட நாகபந்தங்களும், கூட சதுக்கங்களும், கரந்துறைச் செய்யுட்களும் நம் கண்ணில் எதிர்ப்படுகின்றன. இத்தனிப் பாடல்கள் பெரும்பாலும் ஜமீன்தார்கள் முதலிய பிரபுக்களைப் பற்றியன. ஓர் உதாரணம் தருகின்றேன் :

பாதாதி யாகமெ லாங்காணி ஞணிப் பதுமையுமப்
பாதாதி யாக விவட்கேவல் செய்வள் பெண்பால்குறும்
பாதாதி யாகவ விழகமை யானம்பு பாய்ந்திடில்வெம்
பாதாதி யாகந் தருமித யாலய பாண்டியனே.

ஜமீன்தார்கள் பெரும்பாலும் சிற்றின்பப் பிரியர்களாய் இருந்தனர். ஆகவே, காதல், உலா, மடல், சித்திரமடல் முதலிய சில்லறைப் பிரபந்தங்கள் மிகுதியாகத் தோன்றின. இவைகள் தமிழ்ப் பயிரைக் கெடுத்து வந்த விஷப்பூண்டுகள் என்றே சொல்லுதல் வேண்டும். புராணங்களும் தோத்திரங்களும் பல பல அக்காலத்தில் தோன்றின. இவைகளும் பெரும்பாலும் கவித்துவத்தின் உண்மையியல்பினை உணராதபடி இயற்றப்பட்ட நூல்களே என்று நாம் மதிப்பிடலாம்.

மேற் கூறியவை போன்ற செய்யுள் - நூல்கள் பிரசாரத்திலிருந்த காலத்தில் பாரதியின் நவயுகம் உதயமாயிற்று; இந்நவயுகத்தின் உதயத்திற்குத் துணைபுரிந்தன யாவை? அதாவது பாரதியை அவர் கவித்துவத்தில் ஊக்கியவை யாவை? அவரது கவித்துவம் மலர்வதற்குத் துணைபுரிந்தன யாவை?

முற்கூறிய சில்லறைப் பிரபந்தங்களும் கவி பாரதியாருக்கு ஒருவாறு பயன்பட்டன. யாப்பி

லக்கண நூல்களிலே வகுத்து இலக்கணம் கூறப்பட்ட செய்யுள் வகைகளைக் காட்டிலும் இப்பிரபந்தங்களில் புதிய செய்யுள் வகைகள் பல உள்ளன. இவற்றைப் பாரதி அபூர்வத் திறமையுடன், நூதனவேகத்துடன், ஆட்சியில் கொண்டுவந்தனர். உதாரணமாக, சிந்து முதலியற்றைக் கூறலாம்.

இச்சிந்துகளைப் பழைய முறையில் ஆண்டதேயன்றி, புதுப்புது வடிவங்கள் கொடுத்தும் இவர் பாடியிருக்கின்றார். உதாரணமாக,

*தீரத்திலே படை வீரத்திலே—நெஞ்சில்*
*ஈரத்திலே உப காரத்திலே*
*சாரத்திலே மிகு சாத்திரம் கண்டு*
*தருவதிலே யுயர் நாடு.*

* * *

*சிந்து நதியின் மிசை நிலவினிலே*
*சேர நன் னாட்டிளம் பெண்களுடனே*
*சுந்தரத் தெலுங்கினிற் பாட்டிசைத்துத்*
*தோணிகளோட்டி விளையாடி வருவோம்.*

* * *

*முன்னை யிலங்கை அரக்கர் அழிய*
*முடித்தவில் யாருடை வில் ?—எங்கள்*
*அன்னை பயங்கரி பாரத தேவி நல்*
*ஆரிய ராணியின் வில்.*

முதலிய பாடல்களைக் காட்டலாம். பொதுமக்களுக்கு உகப்பான பலவேறு கவிஞர்களையும் பாடல் வகைகளையும் இவர் பின்பற்றி யுள்ளார். உதாரணமாக, 'நொண்டிச் சிந்து' மெட்டில் பாடுவதிலே பாரதி மிக்க பிரீதி கொண்டவர். 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்ற பாடலை அறியாதாரில்லை. பாஞ்

சாலி சபதத்தில் பல பகுதிகள் இம்மெட்டிலேயே அமைந்துள்ளன.

இராமலிங்க சுவாமிகள் 'களக்கமறப் பொது நடனம் கண்டுகொண்ட தருணம்' என்று பாடிய பாட்டைத்திரித்து, 'களக்க முறும் மார்லி நடம் கண்டுகொண்ட தருணம்' என்று பாரதி பாடியுள்ளார். தத்துவராய சுவாமிகள் முதலியோர் பாடிய ஒரு பாடல் வகையைப் பின் வரும் செய்யுளில் காணலாம்.

இத்தரை மீதினி லேயிந்த நாளினில்
இப்பொழு தேமுக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவ ராமென்றிங் கூதேடா சங்கம்.

இங்ஙனமே அண்ணாமலை ரெட்டியாரும் கோபால கிருஷ்ண பாரதியும் இவரது பாடல்களின் சுவையை மிகுவித்திருக்கின்றார்கள். மகர்காளியின் புகழைக் காவடிச் சிந்து மெட்டுக்களில் ஒன்றிலே பாரதியார் பாடுகிறார். 'கண்ணன் என் ஆண்டான்' என்ற பாடற் பகுதியில் கோபால கிருஷ்ண பாரதியின் பாடல் மெட்டுத் தோன்றுகிறது.

தஞ்ச முலகினில் எங்கணு மின்றித்
தவித்துத் தடுமாறி
பஞ்சைப் பறைய னடிமை புகுந்தேன்
பாரமுனக் காண்டே; ஆண்டே,
பாரமுனக் காண்டே.

'தொண்டு செய்யும் அடிமை'

'ஓய் திலகரே, நம்ம ஜாதிக் கடுக்குமோ?'

'நாம் என்ன செய்வோம் துணைவரே? - இந்தப்
பூமியிலில்லாத புதுமையைக் கண்டோம்'

'அன்னியர் தமக்கடிமை யல்லவே'

'வீர சுதந்திரம் வேண்டிநின்றார் - பின்னர்
வேறொன்று கொள்வாரோ?'

முதலியன பாரதியை நந்தனார் கீர்த்தனை முற்றும் ஆட்கொண்டு விட்ட தன்மையை உணர்த்தும். தாயுமானவரும் பாரதியாருக்குப் பாடல்வகைகளை உதவியிருக்கின்றனர். இவரது ஆனந்தக்களிப்புச் சந்தம் 'ஆதி சிவன்பெற்று விட்டான்' என்பதில்கையாளப் பட்டுள்ளது. 'பரசிவ வெள்ள'த்தில் வரும்

உள்ளும் புறமுமா யுள்ளதெலாந் தானாகும்
வெள்ளமொன் றுண்டாமத் தனைத்தெய்வமென்பார்
[வேதியரே

என்பது முதலிய கண்ணிகள் தாயுமானவரது பராபரக் கண்ணி முதலியவற்றை நினைப்பூட்டுகின்றன. இந்தச் சுவாமிகளைக்குறித்தே பாரதியார் ஒரு செய்யுள் இயற்றியுள்ளார். ஆழ்வாராதியர்களும் பாரதியின் உள்ளத்தைப் பக்குவப் படுத்தியதோடு, செய்யுளினங்களையும் உதவியுள்ளனர். பாரதி,

கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணம் தருமே

என்று 'மனமே' என்பதிற் பாடியது நம்மாழ்வார் அருளிச்செய்த,

கண்ணன் கழலிணை
நண்ணும்மன முடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே (10, 5, 1)

என்ற திருவாய் மொழிப் பாசுரத்தை அடியொற்றியது. அன்றியும்,

அகத்தினிலே அவன்பாத மலரைப் பூண்டேன்
அன்றே யப்போதே வீடதுவே வீடு.

என்று 'பாரதி அறுபத்தா'றில் வருவது 'நன்றாய் ஞானங் கடந்துபோய்' எனவரும் திருவாய்மொழியின் (8, 8, 6) ஈற்றடியைத் தன்னகத்தே கொண்டதாம். இங்ஙனமே பாரதியின் கண்ணன் பாட்டில், 'கண்ணன் என் விளையாட்டுப்பிள்ளை' முதலிய சில பகுதிகளில் பெரியாழ்வார் திருமொழியைப் படிப்பது போன்ற உணர்ச்சி நமக்கு உண்டாகின்றது. உதாரணமாக,

அங்காந் திருக்கும் வாய்தனிலே - கண்ணன்
ஐந்தாறு கட்டெறும் பைப் போட்டு விடுவான்

என்பது,

'கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டால்' (பெரியாழ்வார் 2, 4. 2) என்பதனை நினைவிற் கொண்டு கூறப்பட்டது. 'கண்ணனுடைய செயல்களும் திருவிளையாடல்களும் அவர் (பாரதி) மனத்தைப் பூரணமாக ஆகருஷித்தன. இவ் ஆகருஷணத்திற்கு நாலாயிரப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் அருளிச்செய்த திருப்பாசுரங்களின் அனுஸந்தானம் முக்கிய காரணமாக இருந்திருக்கிறது' என்றனர் வ. வெ. சு. ஐயர். பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி தொண்டரடிப் பொடியின் திருப்பள்ளியெழுச்சியையும் மாணிக்க வாசகரின் திருப்பள்ளியெழுச்சியையும் பின்பற்றியது. திருவாசகத்தில் திருத்தசாங்கம் பாரத தேவியின் திருத்தசாங்கத்திற்கு வழிகாட்டியது.

கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பனது ராமாயணத்தி லிருந்தும் எதிரொலிகள் பாரதி பாடல்களில் கேட்கப் படுகின்றன. மாயையைப் பழித்தலில்,

நீ தரும் இன்பத்தை நேரென்று கொள்வனோ
மாயையே!—சிங்கம்
நாய்தரக் கொள்ளுமோ நல்லரசாட்சியை
மாயையே!

என்று வரும் செய்யுள்,

நீதரக் கொள்வேன் யானே
இதற்கினி நிகர்வே றெண்ணின்
நாய்தரக் கொள்ளும்சீயம்
நல்லரசென்று நக்கான்

என்ற அங்கதன் தூதுப்படலச் செய்யுளைக் கருதியது. கம்பன் பாரதியைப் பெரிதும் வசீகரித்திருக்க வேண்டும். இதற்கு,

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை;
உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை

என்ற பாடலும்,

கம்பன் இசைத்த கவியெலாம் நான்
காருகர் தீட்டும் உருவெலாம் நான்

என்ற பாடற் பகுதியும் சான்றுகளாம்.

வள்ளுவர் திருக்குறளும் பாரதியின் உள்ளத்தை மிகவும் கவர்ந்திருத்தல் வேண்டும்.

பொருளி லார்க்கிலை யிவ்வுல கென்றநம்
புலவர் தம்மொழி பொய்ம்மொழி யன்றுகாண்

என்று ஸ்வயசரிதையில் வருவதும்

எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே யெண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்தநல் லறிவு வேண்டும்

என்று 'மஹாசக்திக்கு ஸமர்ப்பணம்' என்பதில் வருவதும் மேற் கூறியதைப் புலப்படுத்தும்.

வள்ளுவன் தன்னை யுலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு

என்ற அடிகள் பாரதி எத்துணை யளவாக வள்ளுவரைப் போற்றிவந்தாரென்பதை உணர்த்துகிறது.

தமிழ்க் கவிதைகளில் நல்ல பயிற்சி பெற்றிருந்ததைப் போலவே, வடமொழிக் கவிதைகளையும் காவியங்களையும் பாரதியார் கற்று அவற்றின் பேரழகில் ஈடுபட்டிருந்தனர். காளிதாசனது சாகுந்தலம் இவருள்ளத்தைத் திறைகொண்ட நூல்களில் ஒன்று.

தெய்விகச் சாகுந்தலமெனும் நாடகம்
செய்த தெவர் சரிதை? அயன்
செய்வ தனைத்தின் குறிப்புணர் பாரத
தேவி யருட் சரிதை

என்று 'பாரதமாதா'வில் கூறியுள்ளார். அக்னி ஸ்தோமம், சூரியஸ்தோமம், முதலியவற்றை இவர் மொழிபெயர்த்துள்ளனர். காந்தியடிகள், திலகர் முதலிய தேசபக்தப் பெரியோர்கள் தங்கள் வாழ்க்கையை நெறிப்படுத்தும் வேதமாகக் கருதிப்போற்றிய

பகவத் கீதையை வசனத்தில் நமது பாரதியார் தமிழ்ப் படுத்தினர். ஈசா வாஸ்யோபநிஷத்து, பதஞ்சலியோக சூத்திரம் முதலியவற்றையும் தமிழ்ப் படுத்தினர். இவரது வேறு சில மொழிபெயர்ப்புக்கள் 'வேதரிஷிகளின் கவிதை' என்ற தொகுதியிற் காணலாம். பூலோக குமாரி என்ற ஒரு கீர்த்தனத்தையும் வடமொழியில் இவர் இயற்றியிருக்கின்றனர். இவையெல்லாம் இவரது வடமொழியுணர்ச்சியின் பெருமையை நமக்குத் தெரிவிக்கின்றன. இங்ஙனம் வடமொழியில் மட்டுமன்றி, வங்காள மொழியிலும் இவர்க்குப் பயிற்சியிருந்தது. பங்கிம் சந்த்ர சட்டோபாத்தியாயர் வங்காளியில் இயற்றிய 'வந்தே மாதரம்' கீதத்தினை இவர் மொழிபெயர்த்திருக்கின்றனர்.

தமது இளம் பிராயத்தில் பாரதி ஆங்கிலக் கல்வியை இகழ்ந்து வந்தனர் என்று மேலே கூறினேன். ஆனால் காலம் செல்லச் செல்ல, அம்மொழியின் பெருமையையும், அம்மொழிப் பயிற்சியால் நம் நாட்டினர்க்கு உளவாம் நன்மைகளையும் செவ்வனே உணர்ந்தனர்.

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்

என்று நம்மவர்க்கு அறிவுறுத்துகிறார். இங்ஙனம் அறிவுறுத்தியதே யன்றி, தாமும் ஆங்கில மொழிப் பயிற்சியில் ஈடுபட்டுவந்தனர். நாட்டுக்கல்வியைக் குறித்து ரவீந்த்ரநாதர் ஆங்கிலத்தில் இயற்றிய செய்யுட்களைத் தமிழ்ச் செய்யுட்களாக அமைத்தனர். இயேசு கிறிஸ்து கல்லறை புகுந்த மூன்றும் நாளில் அவர் உடம்போடு விண்ணுலகுஎய்தியதை மேரி மக்தலேன் கண்ணாரக் கண்டு வியந்து பிறருக்கு அறிவித்ததாய் பைபில்கூறும் கதையை இவர் ஆங்கிலமூலத்தைத்

தழுவித் தமிழில் இயற்றினர். ஜான் ஸ்கர் என்ற ஆங்கிலக் கவிஞர் இயற்றிய கவிதையை 'கற்பனையூர்' என்று பெயரிட்டுப் பாரதியார் தமிழிற் பாடினர். ஷெல்லியின் கவி ஹிருதயமும் தமது உளப்பாங்கும் ஒத்திருத்தல் கண்டு, அப் பெருங்கவிஞரின் கவிதைகளில் பெரிதும் ஈடுபட்டனர். அவரது இராணி மாப் (Queen Mab) என்னும் காவியத்தை அற்புதமான தமிழ் வசனத்தில் பாரதி அமைத்தனர். தாமும் ஆங்கிலத்தில் செய்யுட்கள் முதலியன இயற்றினர். பலதேசத்துஞானிகளின் வசனங்களை 'ஆர்ய' பத்திரிகையில் ஒரு ப்ரான்ஸ்தேசத்து வித்வான் தொகுத்தெழுதியதை 'ரத்னமாலை' என்று பெயரிட்டு இவர் மொழி பெயர்த்தனர். இதனால் பிரெஞ்சு மொழியிலும் இவர்க்குப் பயிற்சியுண்டென்று தெரிகிறது.

இங்ஙனமாக, தமிழ், வடமொழி, ஹிந்தி, வங்காளம், ஆங்கிலம், பிரெஞ்சு முதலியவற்றிலுள்ள இலக்கியங்களில் பாரதியார் நல்ல பயிற்சி பெற்றிருந்தனர். இவரது உள்ளமும் இவ்வகைப் பயிற்சிகளால் விரிந்து பண்புதிருந்தியது. இவரது கவித்துவமும் பெரிதும் உரம்பெற்றிருந்தது. ஆனல் நூற் பயிற்சியினலும் மொழிப்பயிற்சியினலும் பெறமுடியாத சில கவித்துவ அம்சங்கள் பாரதியாருக்கு இயற்கையாய் அமைந்திருந்தன. இவற்றுள் முதலாவது கூறத்தக்கது உணர்ச்சியாற்றல் (Emotion). எப்பொருளை நோக்கினும், எச் செய்தியை நினைக்கினும், அதனை உணர்ச்சி வாயிலாகவே அணுகினர். ஐம்பொறிகளுக்கு விஷயமான சாதாரண பௌதிகப்பொருள் அதன் இயற்கைத் தன்மை யொழிந்து உணர்ச்சியாற்றலால் வேறொரு தன்மையை எய்தி அபூர்வ வசீகர சக்தியுடன் தோன்றுகிறது. காக்கையின் கருநிறச் சிறகு சாதாரணப் பொருள்; அழகுடையதாக

இதனைக் கருத மாட்டோம். இதனிடத்தே ஒரு புத்தழகைப் பாரதியார் கண்டனர். கண்ணனுடைய இளந்திருமேனியின் கருமை யழகு இங்கே இவருக்குப் புலப்பட்டுவிடுகிறது.

காக்கைச் சிறகினிலே நந்தலாலா - நின்தன்
கரிய நிறந் தோன்றுதையே நந்தலாலா

என்ற எளிய இனிய கவிதைஉதயமாகிவிட்டது. ஓர் உவமானம் தானே இது என்று பலரும் கருதலாம். உவமானமட்டும் அல்ல என்பதை நாம் வற்புறுத்திச் சொல்லவேண்டும். உவமானத்தின் அடியாக இக்கவிதை பிறந்தது; ஆனால் இவ்வுவமானத்துக்கு முன் ஓர் உணர்ச்சியுலகம்; ஓர் ஆத்மானுபவம்; இங்ஙனமே இவ்வுவமானத்துக்குப் பின் ஓர் உணர்ச்சியுலகம்; ஓர் ஆத்மானுபவம்; உணர்ச்சிகளுக்கு இடையே தெறித்தெழுந்த ஒரு தீச்சுடர் என்று இவ்வுவமானத்தைக் கூறலாம். உணர்ச்சியுடன் ஒன்றி யெழுந்த ஆத்மானுபவமே கவிதையாக இங்கே உருவெடுத்துள்ளது.

இரண்டாவது கவித்துவ அம்சம் பாவனசக்தி அல்லது கற்பனையாற்றல் ஆகும். நமது நாட்டில் 'கற்பனை' என்பது தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி முதலிய அணிகளைப் புனைந்தியற்றும் ஆற்றல் என்று கருதப்படுகின்றது. இவ்வகை ஆற்றலை யன்று நான் இங்கே கருதுவது. ஒவ்வொரு கவிஞனுக்கும் கவித்துவக் காட்சியுண்டு. இக் காட்சி தொழிற்படுதலினாலே பொருள்கள், செய்திகள் முதலியவற்றைத் தனது மனக்கண்முன் உருவெடுத்து நிற்கச் செய்கிறான். பொருள்கள், செய்திகள் மட்டுமல்ல; அவற்றின் உண்மையியல்புகள், அமைப்புக்கள், அவற்றின் சூழ்நிலைகள், முன்வரலாறுகள், பின்வரலாறுகள், உலகப்

பொருள்களில் அவற்றிற்குரிய நிலையானமதிப்பு; இவை முதலிய எல்லாவற்றையும் கவிஞன் தன்மனக் கண்ணுற் பார்க்கிருன். கவிஞனது பெருமைக்குத்தக்க படி இக்காட்சியின் உண்மையும், பெருமையும், அள வும் விளங்குவனவாகும். இக்காட்சியின் வன்மையை, 'கதிரவன் அறியாத பொருளையும் கவிஞன் அறிவான்' என்று பொருள்படும் தெலுங்குப் பழமொழி உணர்த் துகிறது. வெளியுலகின் காட்சியிலே ஓர் ஒற்றுமை தோன்றுகிறது; ஒரு முழுமை விளைகின்றது. கவிஞ னது ஆன்மாவே வெளிப் பொருளைச் சென்று பற்று கின்றது; அகவுலகும் புறவுலகும் சந்திக்கின்றன. இக் காட்சியிலே அகக்கரணங்கள் புறக்கரணங்கள் முதலிய அனைத்தும் தொழிற்படுகின்றன. நூதன சிருஷ்டிகள் விளைகின்றன. இச்சிருஷ்டிகள் வெளிப் பொருள்களைப் படம் பிடித்துக் காட்டுவன அல்ல; அவற்றை வியக்கத்தக்க முறையில், இன்பம் விளைக் கும் நெறியில், புதிதாக அமைக்கின்றன.

இப்புத்தமைப்புக்கள் பற்றிய குறிப்பினை,

கணந்தோறும் வியப்புக்கள் புதிய தோன்றும்;
  கணந்தோறும் வெவ்வேறு கனவு தோன்றும்;
கணந்தோறும் நவம் நவமாங் களிப்புத் தோன்றும்;
  கருதிடவும் சொல்லிடவும் எளிதோ? ஆங்கே
கணந்தோறும் ஒருபுதிய வண்ணங் காட்டிக்
  காளிபரா சக்தியவள் களிக்குங் கோலம்
கணந்தோறும் அவள் பிறப்பாள் என்று மேலோர்
  கருதுவதன் விளக்கத்தை இங்குக் காண்பாய்

என்ற பாடலிலே நன்கு தெரியலாம். கற்பனையாற்ற லின் உண்மை யியல்பு இது என்பதை நன்குணர்தல் வேண்டும். பஞ்சாலி சபதத்தில் இக் கற்பனையாற்றல் நிரம்ப விளங்குகிறது. இங்கே ஒவ்வொரு நிகழ்ச்சி

யும் கற்பனையாற்றலால் தெளிவாய் உண்மையாய்க் காட்சியளிக்கின்றது; ஒவ்வொரு பாத்திரமும் தத்தம் இயல்புகளை நன்றாக வெளிப்படுத்தி, விவித வர்ணங்களுடன் அற்புத சித்திரமாய் அமைந்துள்ளது ; ஆற்றல் முழுமையும் விரிவாக இச் சபதத்தில் திகழ்கின்றது. இதிலுள்ள ஒரு சில செய்யுட்களை நோக்கினாலும் இது புலனாகும். துரியோதனன் சபை யொன்று நிருமித்ததைக் காணுங்கள் :

வல்லவ னாக்கிய சித்திரம் போலும்
 வண்மைக் கவிஞர் கனவினைப் போலும்
நல்ல தொழிலுணர்ந் தார் செயல் என்றே
 நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறக்
கல்லையும் மண்ணையும் பொன்னையுங் கொண்டு
 காமர் மணிகள் சில சில சேர்த்துச்
சொல்லை யிசைத்துப் பிறர் செயு மாறே
 சுந்தர மாமொரு காப்பியம் செய்தார்

துச்சாசனன் துரௌபதியின் துகிலைஉரிந்து வாங்க வாங்க, அத்துகில் வளர்ந்த விந்தையைப் பாருங்கள் :

வையகங் காத்திடுவாய் ! — கண்ணா !
 மணிவண்ணா ! என்றன் மனச் சுடரே !
ஐய! நின் பதமலரே - சரண்
 ஹரி ! ஹரி ! ஹரி ! ஹரி ! ஹரி ! என்றாள்

பொய்யர் தம் துயரினைப் போல் - நல்ல
 புண்ணிய வாளர் தம் புகழினைப் போல்.
தையலர் கருணையைப் போல் - கடல்
 சல சலத் தெறிந்திடும் அலைகளைப் போல்

பெண்ணொளி வளர்த்திடுவார் - அந்தப்
 பெருமக்கள் செல்வத்திற் பெருகுதல் போல்
கண்ண பிரானருளால் - தம்பி
 கழற்றிடக் கழற்றிடத் துணி புதிதாய்

வண்ணப் பொற் சேலைகளாய் - அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே !
எண்ணத்தி லடங்காவே ! அவை
எத்தனை, எத்தனை நிறத்தனவோ !

இக்கற்பனையாற்றல், மிகச் சுருங்கிய அளவிலே, 'கண்ணன் பாட்டு' என்பதன் ஒவ்வொரு பகுதியிலும் வெளியாகின்றது. உதாரணமாக, 'கண்ணம்மா-என்காதலி'யில் 'மாலைப் பொழுதிலொரு மேடைமிசையே' என்ற பகுதியை வாசியுங்கள். மாலைப் பொழுதில் கடற்காட்சி; இங்கே காதற்சித்திரமொன்று தோன்றுகிறது. இதனை நோக்கிய அளவில், பகற் கனவு கண்டு தன்னை மறந்த லயந் தன்னில் ஒருவன் நிற்கின்ருன். ஒருத்தி அவன் பின்புறத்தில் மெதுவாக வந்து நின்று அவன் கண்ணைப் பொத்துகின்ருள். கை தீண்டிய மாத்திரையிலே, பட்டுப் புடவையின் நறுமணம் உயிர்ப்பிற் பட்ட அளவிலே, உள்ளத்தே மகிழ்ச்சி ஓங்கிப் பெருகிய மாத்திரையிலே, கண்ணைப் பொத்தியவள் தன் காதலி கண்ணம்மா என்று உணர்கிருன். கோபிப்பதுபோற் காட்டிக் கையை எடுத்துவிடச் சொல்லுகிருன். கையை முதலில் எடுத்து விட்டாள். அவன் சிரிக்கின்ருன். மீண்டும் அவனைக் கட்டிப் பிடிக்கின்ருள். என்ன செய்தியென்று அவன் வினவ, 'கூர்ந்து நோக்கி யின்புற்றுக் கொண்டிருந்தாயே, அது யாது?' என்றுகேட்கின்ருள்.

சிரித்த ஒலியிலவள் கைவிலக்கியே
திருமித் தழுவ, 'என்ன செய்தி ? சொல்' என்றேன்
நெரித்த திரைக்கடலில் என்ன கண்டிட்டாய் ?
நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய் ?

திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய் ?
 சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய் ?
பிரித்துப் பிரித்துநித மேகம் அளந்தே
 பெற்ற நலன்கள் என்ன ? பேசுதி ' என்றாள்.

'உன் அருமை முகம்தான் எங்கும் தோன்றுகிறது' என்று விடை கூறுகின்றான். கேளுங்கள் :

நெரித்த திரைக் கடலில் நின்முகங் கண்டேன் ;
 நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன் ;
திரித்த நுரையினிடை நின்முகங் கணடேன் ;
 சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்;
பிரித்துப் பிரித்துநித மேக மளந்தே
 பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை ;
சிரித்த ஒலியினிலுன் கை விலக்கியே
 திருமித் தழுவியதில் நின்முகங் கண்டேன்.'

காதற்காட்சி என்ற அளவில் இச் செய்யுட்கள் மிகவும் சிறந்து விளங்குகின்றன. இவற்றிற்கு அடிப் படையாக ஓர் ஆழ்ந்த தத்துவம் உள்ளது என்றதனை அறிந்ததும், நமது கவித்துவ அனுபவம் பன்மடங்கு முதிர்ந்து விடுகின்றது. இத் தத்துவம் செய்யுட்கள் அனைத்திலும் கரந்து உறைந்து நின்று, அவற்றிற்கு வரம்பில்லாத ஆற்றலை அளிக்கின்றது.

பாரதியின் கவித்துவ அம்சங்களில் மூன்றாவதாக நாம் கூற வேண்டியது ஸௌந்தர்ய க்ராஹ்ய சக்தி அல்லது அழகுக்கலை யாற்றல். " சுந்தரமா மொரு காப்பியஞ் செய்தார் " என்ற அடியில் இது குறிக்கப் படுகின்றது. இவ் ஆற்றல் பாரதியின் பாடல்களிற் பெரும்பாலும் காணப்படுகின்றது. 'கண்ணம்மா-என் குழந்தை ' என்னும் பாடற்பகுதி இதற்கு ஒரு சிறந்த உதாரணமாம்.

நான்காவதாக நாம் கூறவேண்டிய கவித்துவ-அம்சம் நிர்மாண சக்தி அல்லது ரசனையாற்றல் ஆகும். ரசனை வேறு, ரஸனை வேறு. இவ் வேறுபாட்டினை நன்குணர்தல் அவசியம். ரசனை யென்பது அமைப்பு; ரஸனை யென்பது சுவை. முதல் (அங்கி), உறுப்பு (அங்கம்) என்ற கூறுபாடுகளைத் தெரிந்து முறைப் பட, அழகுபெறச் செய்யுளை அமைத்தல் வேண்டும். முழுமை (oneness), ஒற்றுமை (artistic unity of harmony) என்ற உணர்ச்சியும் பாடல்களில் விளங்குதல் வேண்டும். இந்த ரசனையாற்றலும் பாரதி பாடல்களில் சிறந்து புலப்படக் காணலாம். 'கண்ணன் - என் காதலன்' என்பதில் 'திக்குத் தெரியாத காட்டில்' என்ற பகுதி ஒரு சிறந்த உதாரணமாம்.

இவ்வாறாக, கவித்துவ அம்சங்கள் பலவும் பெற்றுப் பெருங்கவிஞராய் விளங்கினர் பாரதியார். இவரது தமிழைக் குறித்துச் சில சொல்ல எண்ணுகிறேன். பாரதியார் தமிழ் தற்காலத்தமிழ்; தினந்தோறும் நாம் பேசுந்தமிழ்; உயிராற்றல் நிரம்பியிருக்கும் தமிழ்; நெருநல், இஞ்ஞான்று, பிறுண்டு, அற்றேல் அஃதாக-முதலிய பண்டைக்காலத்துச் சொற்களும் தொடர்களும் இவர் வசனத்தில் இல்லை; பாடல்களிலும் இல்லை. வழக் கொழிந்த சொற்களை இவர் அறியாதவரல்லர்; ஆனால் அவைகளைத் தம் நூலில் இவர் வழங்கியதே இல்லை. தற்காலத்துச் சொற்களையே இவர் எடுத்தாளுவர். இச்சொற்கள் எளியவையாயிருக்கும்.

'எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு: இவற்றினையுடைய காவிய மொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்

மொழிக்குப் புதிய உயிர்தருவோன் ஆகின்றான் எனப்பாஞ்சாலி சபத முகவுரையில் பாரதியே கூறுகின்றார். இக்கொள்கையை ஓர் இடத்தும் கைந்நெகிழ விடாது இவர் பாடலும் வசனமும் இயற்றியிருக்கின்றார். இவ் எளிமையோடு, நேர்மையும் இவர் தமிழிலே காணப்படுகின்றது. தாம் சொல்லக்கருதியவற்றைச் சொல்லாகிய திரையை யிட்டு மறைத்துவிடாது நேர்படக் கூறுவதே இவரது இயல்பு. இவர் கருதும் பொருளுக்கும் கற்பவர் மனத்திற்கும் இடையே யாதொரு மறைவுமில்லை. கருத்துடன் ஒன்றிச் செல்லாது சொல்வேட்டை யாடுதல் இவர் வழக்கமன்று. பண்டை நூல்களிலுள்ள அழகான தொடர்களையும் கருத்துக்களையும் தேடிக் கண்டு புகுத்துதலும் இவர் செய்யார். அழகான சொற்றொடர்களைத் தாம் எழுதுவனவற்றிற் சேர்த்து இழைத்துவிடக் கருதி, அதன் பொருட்டு இவர் முயன்றதும் இல்லை. இவர் கருத்து நேரே நமது மனத்துட் பாய்ந்துவிடுகின்றது. புதுமைப் பெண்ணை பற்றிக் கூறுமிடத்து,

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்

உடையவள் அவள் என்கின்றனர். இச்செய்யுளின்அடி இவரது தமிழின்இயல்பையும் நன்கு தெரிவிக்கின்றது.

எளிமையும் நேர்மையும் உள்ள தமிழில் தெளிவு காணப்படுதல் இயற்கையே. இத் தெளிவு சொல்லையும் நடையையும் மாத்திரம் பற்றியதன்று. சிந்தையிலே கருத்துத் தெளிவுபெற நிகழ்வதன் அறிகுறியே இத்தெளிவு. இதனைப் பாரதியார்,

தெளிவுறவே அறிந்திடுதல் ; தெளிவுதர
 மொழிந்திடுதல் ; சிந்திப் பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
 கனவு பல காட்டல் ; கண்ணீர்த்

துளிவர உள்ளுருக்குநல் இங்கிவை யெல்லாம்
நீ யருளுந் தொழில்கள் அன்றோ ?
ஒளிவளருந் தமிழ் வாணி, அடியனேற்கு
இவை யனைத்தும் உதவுவாயே

என்று ஒரு செய்யுளிற் குறிப்பிடுகின்றார்.

இங்கே காட்டிய இயல்புகளே யன்றி, இவரது தமிழில் ஆற்றலும் நிரம்பியிருக்கிறது. இவரது ஆத்ம சக்தியே இங்ஙனம் ஆற்றலாகச் சொற்களிற் புலப் படுவது. 'வெடிபடும் அண்டத் திடிபல தாளம் போட' என்று தொடங்கும் ஊழிக் கூத்துப் பாடல் இந்த ஆற்றலுக்குச் சிறந்த உதாரணமாம். வேறொரு பொருளிலும் ஆற்றல் என்ற சொல்லை வழங்குவது உண்டு. சாபாநுக்கிரக சக்தியையும் சொல்லாற்றல் என்பதனால் குறித்தல் மரபு. இப்பொருள் அன்று. நான் இங்கே கருதியது.

எல்லாவற்றிற்கும் மேலாக, பாரதியாரின் தமிழில் ஓர் ஒளி எங்கும் பரந்து விளங்கக் காண் கின்றோம். இவ் ஒளி தூய்மையின் புறத்தோற்றம் ; மயக்கம், அறியாமை முதலியவற்றைப் போக்குவது; அழகு வாய்ந்திருப்பது; இன்ப மயமாயிருப்பது. ஆத்ம சிற்சக்தியின் ஓர் அரிய இயல்பு. எதிர்காலத்தையும் இறந்த காலத்தையும் நிகழ்விற் காண்பது; அரிய, நுண்மையான உண்மைகளைக் கணப் பொழுதில் திடீரெனத் தெரிவது. தெய்விக சக்தி யொன்று திடீ ரென்று கவிஞரது ஆத்மாவிற்புகுந்து,முழுதும் இடங் கொண்டு, பரவசப்படுத்தி, ஒளிப்பிழம்பு ஆக்குகிறது; இந்த ஒளியிலே ஆனந்தக் கனவுகள் நனவுகளாக முன்னிலைப் படுகின்றன. கனவுகள் தாமாகவே ஒளி மிகுந்த சொல்லுருப் பெற்று, கற்பவரது ஆத்மாவி லும் ஒளியைப் பரப்பி உண்மைகாணச் செய்கின்றன.

பாரதியார்,

உள்ளத்தே உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளி உண்டாகும்

என்று கூறியிருப்பது இவ்வகை ஒளியென்றே கொள்ளத் தக்கது. ஆரிய தரிசனம் என்ற பாடற் பகுதி இவ்வொளிக்கு மிகச் சிறந்த உதாரணமாகும்.

மேல் விவரித்தவாறு கவித்வ நலன்கள் பலவும் பெற்றுள்ள பாரதியார் பெருங்கவிஞராய் விளங்கியது சிறிதும் வியப்பாகுமா ?

சுதந்திரம் தேசத்தின் உயிர்நிலையா யுள்ளது. இதுபோல, உண்மைக் கவிதையின் உயிர் நிலையும் சுதந்திரமேயாம். சுதந்திரத் தமிழ் - நாட்டின் தெய்விகக் கவிஞராய்க் கடைசியில் விளங்கியவர் உலக மகா கவிகளுள் ஒருவராகிய கம்பர். இவர் காலத்திற்குப் பின் நமது நாடு அடிமை வாழ்விற் புகுந்து விட்டது. அடிமை யென்பது புறவுலக நிகழ்ச்சி மட்டுமன்று. அகவுலகிலும் நாம் அடிமைகளாய் விட்டோம். அறியாமையே அறிவெனக் கொண்டு வாழ்ந்தோம். பல நூற்றாண்டுகள் கழிந்துவிட்டன. விழித்துக் கொண்டோம் ; அடிமைத்தன்மையை உணர்ந்தோம். சுதந்திர - இயக்கம் தொடங்கிற்று. பாரதியார் தமிழ் நாட்டில் நிகழ்ந்த இவ் இயக்கத்தில் ஒத்துழைத்து வந்தனர். இதில் என்ன வியப்பு ? ஷெல்லி, பைரன் என்ற ஆங்கிலக் கவிஞர்கள் கிரீஸ் தேசத்து விடுதலைப் போரில் பங்கு கொள்ளவில்லையா ? நமது நாடு மீண்டும் சுதந்திரம் அடையும் பருவத்தில் பாரதியார் தோன்றினர். கம்பருக்கு அடுத்த படியிலுள்ள பெருங் கவிஞராக இவர் விளங்கினர்.

பாரதியின் பாடல்கள் பாரததேவிக்கு ஸமர்ப்பிக்கப் பட்டது. ஆகவே இப்பாடல்கள் நமது பொதுவுடைமையாக வேண்டும். இங்ஙனம் ஆதற்குரிய முயற்சியை நமது சுதந்திர அரசாங்கம் மேற்கொள்ளுதல் அவசியம்.

பாரதி நம் தேசத்து மக்களுக்கு உயர்ந்த லட்சியங்களைக் காட்டி நிற்கும் உத்தமக் கவிஞர். தமிழ் மக்கள் முன்னேற்றமடைந்து தமக்குரிய பதவியைப் பெற வேண்டுமாயின், இவரது உபதேசங்களைப் பின்பற்றுதல் வேண்டும். தமிழ் மொழி செழிப்புற்று வளர்ந்தோங்க வேண்டுமாயின், இவரது பாடல்களால் தமிழ்மக்களது உள்ளம் ரஸம் ஊறிக் கனிதல் வேண்டும். இத்தகைய பெருங் கவிஞருக்கு உருவச் சிலை அமைத்துப் போற்றுதல் நமது முதற் கடமையாகும்.

பாரதி வாழ்க! பாரதியின் கவிதை வாழ்க! பாரதியின் தமிழ் வாழ்க!

## கவிமணி

## தேசிகவிநாயகம் பிள்ளை

1947 - ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ம் தேதியில் நிகழ்ந்த தேச விடுதலையாகிய அற்புத விளைவுக்கு இந்நூற்றாண்டின் தொடக்கத்திலே விதை விதைக் கப்பட்டது என்று சொல்லலாம். சரித்திரகாலத்தில் இன்றுவரையும் பிரிட்டிஷார் ஏகாதிபத்தியத்தைப் போல அத்தனை வலிமையும் பெருமையு முடையது வேறொன்று தோன்றியதில்லை அதன் ஆட்சியில் நமது இந்தியா கீழடங்கி நின்றது. ஸாம்ராஜ்ய நன்மையை யும் தங்கள் சுய நன்மையையுமே மிகவும் கருத்துடன் பேணி, நமது இந்தியாவைப் பிரிட்டிஷார் அடக்கி யாண்டு வந்தார்கள். இதில் சிறிதும் வியப்பிற்கு இட மில்லை. லங்காஷயர் முதலிய பிரதேசங்களிலுள்ள மில் துணி வியாபாரிகளின் நன்மையைக் கருதி நமது இந்தியர்களுக்குப் பல கெடுதல்களைச் செய்யத் துணிந் தனர். தம் தேசத்திலுள்ள கப்பல் வியாபாரிகளின் நன்மையைக் கருதி, நமது நாட்டில் கப்பல் முதலிய சாதனங்களை இயற்றுவதற்கு இவர்கள் இடங் கொடுக்கவில்லை. ஆண்டுதோறும் நமது தேசத்தி லிருந்து கோடிக் கணக்கான ரூபாய்களைத் தங்கள் நாட்டிற்குக் கொண்டு செல்வதில் மிகுதியும் ஊக்க முடையவர்களாயிருந்தார்கள் இந்தியர்களுடைய வருமானம் மிகக் குறைந்தது. பட்டினியும் பஞ்ச மும் தலைவிரித்தாடத் தொடங்கியது. என்றாலும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்குப் பிரதிகூலமான கருத்துக்களை எவரேனும் வெளியிட்டால் அவர்களுக்கு

வாய்ப்பூட்டு இடப்பட்டது. அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள். எங்கேனும் பகிரங்கமாக இச் செயல்களைக் கண்டித்தால், நம்மவர்களுக்குக் கிடைத்த வெகுமானம் குண்டுகள் தான். இவ்வாறாக அடக்குமுறை பலமாகவும் உறுதியுடனும் கையாளப்பட்டது.

ஆனால், இக்கொடுங்கோன்மையின் விளைவாக நாட்டிற்குச் சுதந்திரம் வேண்டும் என்ற உணர்ச்சி நமது இந்திய மக்களிடையே தீவிரமாய்ப் பரவத் தொடங்கி விட்டது. எத்தனை கடினமான அடக்கு முறையைக் கையாண்ட போதிலும் இந்தச் சுதந்திர உணர்ச்சியை ஆங்கில அரசினரால் தடுக்க முடியவில்லை. நமது பாரத தேசமெங்கும் இவ்வுணர்ச்சி பெருக்கெடுத்துப் பரந்தது. இவ்வுணர்ச்சியை ஒரு வாறாக நெறிப்படுத்தி நாட்டிற்கு நன்மைபுரிய வேண்டும் என்ற கருத்துடன் உழைத்து வந்தவர்கள் காங்கிரஸ் கட்சியினர். இவர்களும் மிதவாதிகள் என்றும் தீவிரவாதிகள் என்றும் இரண்டு வகையாகப் பிரிந்தனர். மிதவாதிகள் அன்னிய அரசாங்கத்தோடு ஒத்துழைத்து சட்டத்தின் அமுல்களுக்கு உட்பட்டு, நமக்கு வேண்டும் காரியங்களைச் சாதித்துக் கொள்ள வேண்டும் என்று கருத்துக் கொண்டிருந்தார்கள். தீவிரவாதிகள் அன்னிய அரசாங்கத்தோடு எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும், நமதுநாடு முற்றும் விடுதலைஅடைவதே முக்கிய நோக்கம் என்றும், அதற்காகச் சட்டங்களை மீறிய வழிகளையும் கைப்பற்றலாம் என்றும் கருத்துக் கொண்டிருந்தார்கள் தீவிரவாதிகளின் கட்சியைச் சார்ந்தவர் கவி பாரதியார்.

பாரதியாரின் பாடல்களிலே தீவிர தேசபக்தி எங்கும் நிரம்பிப் பரிமளிக்கிறது. அடக்குமுறை

கள் இவரையும் வருத்தின. ஆனால், இம்முறைகளி னால் இவரது தேசபக்தியானது மேன்மேலும் வளர்ந் ததே யன்றிக் குறைவு படவில்லை. சுதந்திரம் என்ற பயிரைக் கண்ணீர் விட்டு வளர்த்ததாகப் பாரதி யார் கூறுகிறார். தெய்வத்தைப் பற்றிப் பாடியபோதி லும், பழைய பாரதக் கதைகளை எடுத்துக் கவிதை புனைந்த போதிலும், வேறு எதை எடுத்துப் பாரதி யார் பாடல் இயற்றியபோதிலும், அவற்றில் எல்லாம் தேசபக்தி என்னும் கனல் சொலித்துக் கொண்டிருக் கிறது. ஆகவே, நாட்டுப் பாட்டு முதலியவற்றில் மட்டும்தான் இவரது சுதந்திர உணர்ச்சியும் தேச பக்தியும் விளங்குகின்றன என்று நினைத்தல் தவறு. இவர் எழுதியுள்ள ஒவ்வொரு சொல்லும், ஒவ் வொரு தொடரும், ஒவ்வொரு செய்யுளும், ஒவ் வொரு செய்யுள் - தொகுதியும், ஒவ்வொரு நூலும் தேசபக்தியை உயிர்த்துக் கொண்டிருக்கின்றன. சுருங்கக் கூறின், இவரது பாடல்களுக்கு உயிர் நாடி யாய் இருப்பது தேசபக்தியே யாம். இவர் தமி ழுக்கும் தேசத்திற்கும் செய்துள்ள தொண்டின் பெருமையை முந்திய பகுதியில் விளக்கினோம்.

தேச பக்தியை வளர்த்துவந்த அரசியற் கிளர்ச்சி சுதேச ராஜ்யங்களில் பெரும்பாலும் அக்காலத்து இல்லை. அங்குள்ள மன்னர்கள் பரம்பரையாக நீண்ட காலம் ஆட்சி புரிந்தவர்க ளாதலின் அவர் களுடைய குடி ஜனங்கள் அவர்கள்மீது தான் பெரும் பக்தி கொண்டிருந்தார்கள். தற்காலத்திற் போல ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இச் சுதேச ராஜ்யங் களில் காங்கிரஸ் முயற்சிகள் தோன்றுவதற்கும் இட மில்லாதிருந்தது. எவ்விதமான அரசியற் கிளர்ச்சி களுமின்றி அமைதியாய் நெறிப்பட்டு இவ் அரசாட்சி கள் நடைபெற்று வந்தன. ஆனால் ஆங்கில - ஆட்சி

இந்த ஸம்ஸ்தானங்களில் முற்றிலும் இல்லை என்று சொல்ல முடியாது. சுதேச மன்னர்கள் ஆங்கில அரசாட்சிக்குக் கீழடங்கி ஆட்சி புரிந்து வந்தவர்களே. ஒவ்வொரு சுதேச ராஜ்யத்திலும் ஆங்கிலப் பிரதிநிதிகள் வசித்து வந்தனர். இப் பிரதிநிதிகளின் மூலமாய் அரசியல் விஷயங்கள் நன்ருகக் கண்காணிக்கப்பட்டு வந்தன. இவர்களை அறியாது அரசியற் கிளர்ச்சி தோன்ற முடியாது. சுதேச மன்னர்கள் ஆங்கில அதிகாரத்திற்கு மிகவும் அஞ்சியவர்களுமாவர். எனவே, ஆங்கில அதிகாரி களின் கருத்தை நன்ருகத் தெரிந்துகொண்டு இவர்கள் தங்கள் நாட்டில் உண்டாகும் சிறு குழப்பங்களை உடனுடன் அடக்கி வந்தனர். ஒரு சில சமயங்களில் ஆங்கிலேயரால் நேரே ஆளப்பட்ட இந்தியப் பகுதியி னின்றும் தீவிர வாதிகள் சிலர் சுதேச ஸம்ஸ் தானங்களில் அடைக்கலம் புகுந்ததுண்டு. ஆனல் இவ் வாறு அடைக்கலம் புகுந்தவர்களை மிக நன்ருகக் காவல் செய்து, அவர்களால் யாதொரு அரசியற் குழப் பமும் உண்டாகாதபடி சுதேச மன்னர்கள் கவனித் துக்கொண்டனர். அடைக்கலம் புகுவதும் எளிதான காரியமாய் இருக்கவில்லை.

இத்தகைய சூழ்நிலையில் தோன்றியவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. இவருடைய கவிகள் பெரும்பாலனவற்றில் தேசபக்தியின் இனிய நன் மணம் கமழ்ந்து வீசவில்லை. இதற்கு மாருக, எப் பொழுதும் நிலைபேருயுள்ளதும், நமது மக்களால் பெரிதும் போற்றப்படுவதுமாகிய இந்தியப் பண் பாட்டின் பெருநலமே (Cultural interest) இவைகளில் நிரம்பித் ததும்புகிறது. பண்பாட்டின் உணர்ச்சி யொன்றே கவிமணியின் பாடலுக்கு உயிர் நாடியாக உள்ளது. இவ்வாறு கூறிய அளவில் தேச

பக்திக்குரிய விஷயங்களைப் பற்றி இவர் பாடவே இல்லை என்பது எனது கருத்தல்ல. இவரும் கதரைப் பற்றிப் பாடியிருக்கிறார்; தேசீயக்கொடியைப் பற்றிப் பாடியிருக்கிறார். இவைகளெல்லாம் இவரது வாழ்வின் பிற்காலத்தில், தமிழ்நாட்டினரோடு நெருங்கிய கூட்டுறவின் பயனாக, பிறர் நடைய வேண்டுகோளால் பாடப்பட்டவை. தேசபக்தி இவரது பாடல்களை இயக்கி வந்தது என்று கருதுவது பொருந்தமன்று.

கவிமணியின் வாழ்க்கையே கல்வியையும் நமது பண்பாட்டையும் முக்கியமாகக் கொண்டு தொடங்கியதாகும். இவர் சுசீந்திரத்தை அடுத்துள்ள தேரூரில் 1876 - ல் பிறந்தவர். இளமையிலேயே தாய்மொழியான தமிழின்மீது அளவற்ற பற்றுக் கொண்டவர். அக்கால முதற்கொண்டே தமிழ்க் கவிகள் இயற்றுவதில் பெருநோக்கு உடையவரா யிருந்தார். தமிழ் நூல்களை முறையாகக் கற்க வேண்டும் என்ற பேரவா இவரது மனத்தில் தோன்றியது. இது இவரது ஊரின் பக்கத்திலுள்ள வாணன் திட்டு மடத்தில் வாழ்ந்த ஸ்ரீ சாந்தலிங்கத் தம்பிரானால் ஒருவாறு நிறைவேறியது. தமிழிலக்கண இலக்கியங்களை ஐந்தாறு வருஷ காலம் இவர் பாடங் கேட்டனர். இங்ஙனமாகத் தமிழையும் பின்னர் மலையாள மொழியையும் கற்றுக்கொண்டார். கோட்டாற்றிலுள்ள அரசாங்க ஆங்கிலக் கலாசாலையில் மெட்றிக்குலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற்றார். எப். ஏ. வகுப்பிலும் சில்காலம் வாசித்தார். பல இடையூறுகளால் ஆங்கிலக் கல்வியை நிறுத்தி விடவேண்டியதாயிற்று. இங்ஙனம் கலாசாலைக் கல்வியை நிறுத்திய போதிலும், ஆங்கில நூல்களையும் ஆங்கிலச் செய்யுட்களையும் எப்பொழுதும் இவர் படித்து வந்தனர். கல்வித்துறை வாழ்க்கையே தமக்குரியது என்று இவர்

மேற்கொண்டனர். கோட்டாற்றில் மத்தியதரப் பாடசாலையின் உதவி ஆசிரியராகவும், பின்னர், நாகர்கோவில் போதனுமுறைப் பாடசாலையிலும், திருவனந்தைப் பெண்கள் போதனுமுறைப் பாடசாலையிலும் உதவியாசிரியராகவும் இவர் அமர்ந்தார். விஞ்ஞானப் பகுதியில் தக்க அறிவு பெற்றிருந்தமையால், அப்பொருள் பற்றியே போதனு முறைப் பாடசாலைகளில் ஆசிரியராக விளங்கினுர். ஆனுல், இலக்கியக் கல்வியை இவர் ஒருபொழுதும் மறந்தவரல்லர். மேலும் மேலும் கற்பதும், தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்வதும், செய்யுட்கள் புதியனவாக இயற்றுதலும் இவருடைய தினசரி வாழ்க்கையில் நடைபெற்று வந்தன. கலாசாலையில் இவரது கவித்வம் வெளியாவதற்குரிய சந்தர்ப்பங்களும் அடிக்கடி நேர்ந்தன. இவர் இயற்றிய கவிகள் தலைமை ஆசிரியை முதலிய கல்வித்துறை அதிகாரிகளாலும், பல அறிஞர்களாலும், தமிழ் விற்பன்னர்களாலும் பெரிதும் பாராட்டப்பெற்று வந்தன. இவரை அறிந்தோரெல்லாம் இவரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தனர். இவருடைய கல்வியையும் கற்பிக்கும் ஆற்றலையும் கவித்துவத்தையும் நேர்மையையும் இனிய குணங்கள் பிறவற்றையும் திருவிதாங்கூர்ப் பெருமக்கள் பலரும் உணர்ந்து இவரைப் போற்றி வரலாயினர். தாம் உதவியாசிரியராயிருந்த பெண்கள் போதனுமுறைக் கலாசாலையில் தமிழாசிரியர் வேண்டுவதாயிருந்தது. அதற்கு வேறு பலரும் பெருமுயற்சி எடுத்துக் கொண்ட போதிலும், இவரே தக்கவர் எனக் கருதி இவரை அப்பதவியில் அமர்த்தினுர்கள். தமது உயிரானசைக்குரிய தமிழையே தாம் கற்பிக்கும்படியாக நேர்ந்ததுபற்றிக் கவிமணி தாமும் பெரிதும் மகிழ்ச்சி கொண்டனர்.

தமிழ்க் கல்வியும் ஆங்கிலக் கல்வியும் இவரது பண்பாட்டுணர்ச்சியை மிகவும் வளர்த்தன. ஆனால், இவ்விருவகைக் கல்வியோடு இவர் அமைந்து விடவில்லை; நமது நாட்டுப் புராதனச் சரித்திரத்தை அறிந்து கொள்ளவேண்டுமென்ற அவா இவருக்கு இயற்கையாய் உண்டாயிற்று. ஆகவே, அவ் அறிவையும் இவர் அரிதில் முயன்று பெற்றுக் கொண்டார். புராதனச் சரித்திர உணர்ச்சிக்குச் சிலாசாஸனப் பரிசோதனை அவசியம் என்பதை இவர் எளிதில் கண்டு கொண்டார். பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களுக்குச் சிலாசாஸன இலாகாவில் உதவிபுரிந்து வந்த பண்டித கணேச பிள்ளையின் கூட்டுறவு நமது கவிமணி இத்துறையில் தக்க பாண்டித்தியம் அடைவதற்குப் பெரிதும் உதவிற்று என்று கூறலாம். இப்பாண்டித்தியமும் இவருடைய பண்பாட்டுணர்ச்சியை மேலும் மேலும் வளர்த்து வந்தது.

விஞ்ஞான நூற்பாடத்தைப் பெண்கள் போதனா முறைக் கல்லூரியில் இவர் கற்பித்து வந்தார் என்று முன்னர்க் குறிப்பிட்டேன். பாடம் கற்பிக்கும் அளவில் மாத்திரம் அந்நூலின் அறிவை இவர் பெற்று அமைந்தனர் என்று எண்ணுவது தவறு. தாவரநூல் முதலியவற்றில் நல்ல பயிற்சி பெற்றிருந்தார். இப்பயிற்சியினால் எவ்விஷயத்தையும் விஞ்ஞான முறையில் நோக்குதல் வேண்டும் என்ற மனப்பான்மையும் இவரிடத்தே விளைந்தது. இந்த விஞ்ஞான மனப்பான்மையும் இவருடைய பண்பாட்டுணர்ச்சிக்கு உரமளித்தது. நமது பண்டைத் தமிழ் நூல்களிலுள்ள தாவரங்கள் முதலியனபற்றிய குறிப்புக்களைஎல்லாம் தொகுத்து, படம் முதலிய உபகரணங்களுடன் ஒரு நூல் வெளியிட வேண்டுமென்று இவர் என்னிடமும்

பலமுறை கூறியுள்ளார். இதுவும் இவருடைய மனப் பான்மையை நமக்கு நன்ருகத் தெரிவிக்கின்றது.

இளமைப் பருவந் தொட்டே இவர் மிக்க தெய்வ பக்தியுடையவரா யிருந்தனர். திருநெல்வேலியில் வாழ்ந்துவந்த உமையொருபாக தேசிகர் என்பவரிடம் இவர் சிவதீக்ஷையும் பெற்றனர் தமது ஊரில் கோயில் கொண்டிருந்த அழகம்மையின் மீதும், அடுத்துள்ள சுசீந்திரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி யுள்ள தாணுமாலயப் பெருமாள்மீதும் பல தோத்திரங்களையும் துதிப் பாடல்களையும் இவர் இயற்றி யுள்ளார். இவ்வாருகப் பல நெறிகளிலும் விளங்கி வந்த இவருடைய சமயப்பற்றும் இவரது பண்பாட்டுணர்ச்சியை மிகமிக ஆழ்ந்ததாகச் செய்தது.

இங்ஙனமாகப்பலவழிகளினுலும் உரம் பெற்றுப் பண்பாட்டுணர்ச்சி இவர் உள்ளத்திலே செழித்து வளர்ந்தது. இதனுல் ஒரு முக்கியமான விளைவு ஒன்றும் உண்டாயிற்று. நமது மூதாதையர்களின் பண்டை லட்சியங்கள் இவர் மனத்தைக் கவர்ந்தன. அவற்றின் பெருமையை எண்ணி எண்ணி இவர் மனம் கனிந்தனர். உயர்ந்த லட்சியங்களெல்லாம் திரண்டு ஓர் உருப்பெற்று விளங்குவது போல் தோன்றிய புத்த பிரான் சரித்திரத்தில் இவர் பெரிதும் ஈடுபட்டார். ஆங்கிலத்தில் எட்வின் ஆர்னால்ட் என்பவர் எழுதிய ஆசிய ஜோதி (Light of Asia) என்ற நூலைப் பல முறையும் கற்று அந்நூலின் அழகையும் புத்த பிரானது குணதிசயங்களையும் நன்கு அனுபவித்தனர். இவ் அனுபவத்தின் பயனுகத் தோன்றியனவே 'புத்தர் அவதாரம்,' 'புத்தரும் ஏழைச் சிறுவனும்,' 'கருணைக் கடல்,' 'புத்தரும் மகனை இழந்த தாயும்,' 'காதல் பிறந்த கதை' முதலியன. இவற்றிற் பல 'ஆசியஜோதி' என்ற ஒரு நூலில் தொகுத்து வெளியிடப் பட்டுள்

ளன. இப்பாடல்களில் சில பகுதிகள் தமிழிலக்கியத்தில் ஈடும் எடுப்புமின்றித் தலைசிறந்து விளங்குகின்றன.

உண்மையான பண்பாடு கால, தேச நியதிகளுக்குள் அடங்குவதன்று. பிற தேசங்களிலும் பிற மதங்களிலுமுள்ள பெரியோர்களையும் பாராட்டிப் போற்றும் இயல்பு வாய்ந்தது. கவிமணியின் பண்பாட்டுணர்ச்சியும் இத்தகையதே. இயேசு கிறிஸ்துவைக் குறித்து 'ரக்ஷகர்' என்ற தலைப்பில் இவர் பாடிய செய்யுட்கள் மேற்கூறிய உண்மைக்குத் தக்க சான்றாகும். மிகப்பரந்து செல்லும் இப்பண்பாட்டுணர்ச்சி காரணமாக, நமது தமிழ் நாட்டுப் பெரியோர்களை இவர் மறந்தவரல்லர். வள்ளுவர், ஔவை, கம்பர், பாரதியார்: இவர்களைப்பற்றிக்கவிமணி இயற்றியுள்ள பாடல்கள் தமிழ்மக்கள் பண்பாட்டை இவர் எவ்வாறு அனுபவித்துள்ளார் என்பதை விளக்கவல்லன. வள்ளுவர் தந்த திருமறையை, 'தமிழ் மாதின் உயிர்நிலை' என்கிறார். சிலப்பதிகாரத்தைக் குறித்து,

தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை
தேரும் சிலப்பதிகாரம்

என்கிறார். இராமாயணத்தைக் குறித்து,

பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து கம்பன்
பாரில் பொழிந்த தீம் பாற்கடல்

என்கிறார். ஔவையைக் குறித்து,

ஔவைக் கிழவி நம்கிழவி
அமுதின் இனிய சொற்கிழவி
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி

என்று கட்டுரைக்கின்றார். பாரதியின் பாடல்களைக் குறித்து,

உள்ளம் தெளியுமொரு பாட்டிலேயடா—மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா
கள்ளின் வெறிகொளுமோர்பாட்டிலேயடா - ஊற்றாய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா.

என்று பாராட்டினர்.

இவைகளை நோக்கும்போது ஷேக்ஸ்பியர், மில்டன் முதலானோரது பெருமைகளை வால்ட் உவிட்மென் சிற்சில அடைமொழி கொடுத்துப் பாடியுள்ள பாடல்கள் நமக்கு நினைவுக்கு வருகின்றன. பண்பாட்டின்மீது தமக்குள்ள ஆர்வத்தைப் புத்தர் முதலிய மதாச்சாரியர்கள் மூலமாயும், வள்ளுவர் முதலிய இலக்கியப் பேராசிரியர்கள் மூலமாயும் வெளியிட்டுள்ள கவிமணி பக்தியில்மேம்பட்டு விளங்கியவர்களையும் உளங்கனிந்து போற்றியுள்ளார் 'அன்பின் வெற்றி' என்ற பகுதியில் வடநாட்டுப் பக்தசிரோமணியாகிய மீராபாயின் சரித்திரப் பகுதிகள் மிக்க கனிவுடன் இவரால் பாடப்பட்டுள்ளன

கண்ணுமுனைக் காணுமல் கலக்கங் கொள்ளும் ;
கணமேனும் உள்ளத்தில் அமைதி இல்லை ;
உண்ணுதற்கும் பசியில்லை , உறக்க மில்லை ;
ஓரிரா ஓர்யுகமாய்க் கழியு மையா !
நண்ணியெலா வாள்போல அறுக்கு மிந்த
நலிவையெல்லாம் யாவரிடம் சொல்லி நிற்பேன்?
எண்ணி யெண்ணி நைந்துருகும் என்னை யாள
எந்நாளிங் கெழுந்தருள்வாய் ? எம்பிரானே !

என்று மீராபாய் புலம்புவது நம் உள்ளத்தை உருக்கி விடுகிறது.

சராசரங்கள் அனைத்திலும் இறைவன் தங்கியிருக்கிறான் என்பது இந்தியப் பண்பாட்டின் அடிநிலைக் கொள்கைகளுள் ஒன்று.

வானின் றிழிந்து வரம்பிகந்த
மாபூதத்தின் வைப் பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல்
உள்ளும் புறமும் உளன் என்ப

என்றார் கம்பர். இவ் அடிநிலைக் கொள்கைக்கு ஏற்கக் கவி மணியும் கிளி முதலிய பறவைகளைக் குறித்தும், ரோஜா முதலிய செடிகளைக்குறித்தும், குழந்தைகளைக் குறித்தும் அருமையாகப் பாடியிருக்கிறார். இவரது பண்பாட்டுணர்ச்சியின் பெருமை இவற்றாலும் நன்கு புலப்படுகிறது. கிளியைக் குறித்து,

செம்பவழ வாயைத் - திறந்து நீ
செப்பும் மொழி கேட்கில்
உம்பர் அமுத மெல்லாம் - செவியகத்து
ஓடி யொழுகு தடி.

கொம்பிற் கொலுவிருந்து - களித்து நீ
கூவுங் குரல் வருமேல்
பம்பி யெழுஞ் சோலை - எனக்குப்
பரம பத மடியோ !

என்று பாடியிருப்பது இயற்கையைக் கடந்தும் அதற்கு ஆதாரமாய் நின்றும் விளங்கும் தெய்விக சக்தியை இவர் அனுபவிக்கும் திறத்தை உணர்த்துகிறது. குழந்தையைக் குறித்து இவர் பாடியுள்ள பாடல்களும் இவ்வகை அனுபவத்தின் பெருமையையே நமக்குப் புலப்படுத்துகிறது.

பூவின் அழகுனது முகத்தில் - என்றும்
பொலிந்திடும் காரணம்என் ? குழந்தாய் !
தேவரும் கண்டறியாக் காட்சி - யானும்
தெளிவுறக் கண்ட பலன், அம்மா

ஆசைக் குழந்தாய் ! இச்செவிகள் - உன்னை
அடைந்த வரலா றேது ? உரையாய்
ஈசனும் பேசிட வாய்திறந்தான் - கேட்க
இவையும் எழுந்தன, என் அம்மா !

இன்பச் சிறுகரங்கள் இவைதாம் - உனக்கு
எவ்வா றமைந்தன ? என் குழந்தாய் !
அன்பு வளர்ந்திவ் வுருவாகி - என்னை
அண்டி அணைந்திருக்குது, அம்மா !

இவைகள் மேற்கூறியதற்குச் சான்றாகும்.

இந்தியப் பண்பாட்டின் அடிநிலைக் கொள்கைகளுள் மற்றொன்று நிலையாமையை வற்புறுத்துதலாகும். வள்ளுவரும்,

நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை

(திருக்குறள், 331)

என்றனர். இளமை, யாக்கை, செல்வம் முதலியவற்றின் நிலையாமையை உணர்த்தி, நிலைத்த இன்பத்தைத் தருவதாகிய வீடுபேற்றை வற்புறுத்தி, அதற்கு உபாயமாய்த் துறவைக் கூறுதல் வள்ளுவர் முதலியோரது கருத்தாகும். வேறுசில ஆசிரியர்கள் யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை என்ற இரண்டினையும் கூறி, இல்லற இன்பத்தைக் காலந் தாழ்க்காது நுகரவேண்டு மென்று வற்புறுத்துவர். கலித்தொகை,

இளமையும் காமமும் நின்பாணி நில்லா

(பாலை, 11)

எனவும்,

இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்
* * *
ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை

ஒன்றன்கூ றுடை உடுப்பவரே யாயினும்
ஒன்றினுர் வாழ்க்கையே வாழ்க்கை அரிதரோ
சென்ற இளமை தரற்கு (பாலை, 17)

எனவும் கூறுகின்றது. இவ் இரண்டாவது வகை ஆசிரியர்களின் கருத்தைப் பெரும்பாலும் உட்கொண்டதே உமர்க்கய்யாம் பாடல். இதற்கு,

பலநூல் கற்ற பண்டிதர்கள்
பலரும் சபைகள் பலகூடிக்
கலகம் வாதம் செய்திடுக,
கண்டங் கிழிய முழங்கிடுக ;
மலரும் மலர்கள் வாடலுமிவ்
வாழ்வு நிலையா தோடலுமே
உலகம் கண்ட உண்மைகளாம்,
உண்டோ மற்றென் றுரைத்திடவே ?

வெய்யிற் கேற்ற நிழலுண்டு ;
வீசுந் தென்றற் காற்றுண்டு ;
கையிற் கம்பன் கவியுண்டு ;
கலசம் நிறைய மதுவுண்டு ;
தெய்வ கீதம் பலவுண்டு ;
தெரிந்து பாட நீயுண்டு ,
வையந் தருமிவ் வனமன்றி
வாழும் சொர்க்கம் வேறுண்டோ ?

என்ற செய்யுட்கள் சான்ருகும். நிலையாமையைக் கவிமணி முன் பாடல் முதலியவற்றில் விளக்கியிருப்பது போல் வேறு எங்கும் தமிழிலக்கியங்களில் காணமுடியாது. இப்பாடல்களும் இவர் இந்தியப் பண்பாட்டைத் தலைநோக்கமாகக் கொண்டுள்ளார் என்பதை விளக்குகின்றன.

இங்கே ஒரு கேள்வி இயல்பாக எழக்கூடும். உமர்க்கய்யாம் இயற்றிய ருபாய்யாத் பாடல்களை எட்வர்ட் பிட்ஜிரால்ட் செய்துள்ள மொழிபெயர்ப்

பின்னைத் தமிழ்மொழியில் மொழிபெயர்த்துச் செய்த கவிதைகள் தானே இவைகள்? இவற்றில் இந்தியப் பண்பாடு விளங்குகிறது என்றல் எடபடிப் பொருந்தும்? இப்பாடற் கருத்துக்கள் கவிமணியின் கருத்துக்கள் என்று கூற முடியாதல்லவா? இவ்வாறு சிலர் கேட்கலாம். கவிமணி இயற்றியது பெயரளவில் மொழிபெயர்ப்பே யன்றி உண்மையில் அங்ஙனம் அமைந்தவை அல்ல. உதாரணமாக 'வெய்யிற் கேற்ற நிழலுண்டு' என்று மேலே காட்டியதனைக் கூறலாம். அச்செய்யுள் ஆங்கில மூலத்தின் நேரான மொழிபெயர்ப்பு அன்று ஆனால் அதன் கருத்துத் தமிழ்மக்களுக்கு ஏற்ற முறையில் மாற்றப் பட்டுள்ளது. தமிழ்ச் செய்யுளுக்கு ஏற்ற படியாகவும் அக்கருத்தோடு ஒத்த பிற கருத்துக் களும் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே, இச்செய்யுள் ஆங்கில மூலத்தின் கருத்தினைப் பொதுவே எடுத்துக் கொண்டு தமிழ்ச் சூழலுக்கு ஏற்ற முறையில், தமிழ் மக்கள் அனுபவிக்கும் முறையில், வேண்டும் மாற்றங்கள் செய்து அழகுற அமைக்கப் பெற்றதாம். இங்ஙனமே பிட்ஜிரால்டும் தாம் எடுத்துக் கொண்ட பாரஸீகச் செய்யுளை ஆங்கில மக்கள் அனுபவத்திற்குத் தக்கபடி வேறுபாடுகள் செய்து ஒரு நூதன சிருஷ்டியாக அமைத்திருக்கிறார். மொழிபெயர்க்க எடுத்துக் கொண்ட ஒவ்வொரு செய்யுளிலும் கவிமணியின் ஆன்மா பிரவேசித்து நின்று செய்யுட் கருத்தின் வடிவினைத் தானே மேற்கொண்டு புதிய சிருஷ்டியாகத் தோன்றியுள்ளது என்பதே உண்மை உமர்க்கய்யாம் பாடல்களேயன்றி இவர் மொழி பெயர்த்துள்ள பிற செய்யுட்களும் இங்ஙனமே அமைந்தனவாகும். இச்செய்யுட்களில் மொழிபெயர்ப்பு என்ற உணர்ச்சியே உண்டாவதில்லை.

நமது நாட்டிலே நமது தாய் மொழி விருட்சத்திலே இயற்கையாய்க் காய்த்துவிளைந்து சுவைபடக் கனிந்த கனிகள் என்று சொல்லத் தக்கனவாகவே உள்ளன. ஆகவே பிட்ஜிரால்ட் செய்தது ஆங்கில மக்களுக்கு ஒரு நூதன சிருஷ்டியா யிருப்பது போலவே, கவிமணி அதனைத் தழுவி இயற்றியதும் ஒருநூதன சிருஷ்டியேயாம். பிட்ஜிரால்டின் பாடலை ராஸற்றி (Rossetti) என்ற கவிஞரும் அவர் நண்பர்களும் மதிப்பரிய புதையிலைக் கண்டெடுத்தது போல் கண்டெடுத்தனர். இவ் அரிய செய்யுள்-நூலை சுவையும் அழகும் பூரணமாய் நிரம்பியவற்றுள் ஒன்று என்று இலக்கியமதிப்பாளர் கூறுவர். கவிமணியின் தழுவற்பாடல்களும் இவ்வாறே மதிப்பிடத்தக்கன.

உமர்க்கய்யாம் ஒரு சிறந்த கணித விற்பன்னர்; ஒரு சிறந்த கவிஞர். இவர் பாரஸீகத்தில் நைஷாப்பூர் என்ற இடத்தில் பிறந்தவர். ருபாய்யாத் என்ற நூலில் இவர் வெளியிட்டுள்ள கருத்துக்கள் கீழைத் தேசங்கள் அனைத்திற்கும் பொதுவாக உள்ளனவேயாம். ஆனால், நமது இந்திய தேசத்தில் இக்கொள்கைகள் விசேஷமாக வற்புறுத்தப்பட்டன. வேதாந்த சூத்திரத்திற்குப் பாஷ்யம் எழுதிய ஸ்ரீமத் சங்கராச்சாரியரும் நிலையாமையை ஒருபுறம் உணர்த்தி, வியாவகாரிக தசையில் உலக வாழ்வை வற்புறுத்திக் கூறியுள்ளார். பண்டைத் தமிழ் இலக்கியங்களும் இவ்வாறே கருதுகின்றன என்பது கலித்தொகை பற்றி மேலே எழுதியவற்றால் விளங்கும். ஆகவே இந்தியப் பண்பாட்டின் அடிநிலைக் கொள்கைகளுள் ஒன்று இப்பாரஸீகக் கவியின் தமிழ்மொழி பெயர்ப்பிலே கவிமணியால் அமைக்கப்பட்டது என்பது தெளிவாம்.

இத்துணிபிற்கு வேறொரு சான்றும் உள்ளது. கவிமணியின் பாடல்களிலே மக்கட் பண்பு பேணும் (Humanism) தன்மை பல இடங்களில் காணப்படுகின்றது. சமய நூல்களும் சமயச் சார்பான நூல்களும் மறுமையில் வீட்டுலகு அடைவதற்கு உதவுபவை. கிரேக்க இலக்கியங்களோடொப்ப, மக்களது இகவாழ்விற்கு உதவி அவர்களுடைய நலத்தைப் பேணும் நூல்கள் நமது பண்டை இலக்கியங்களாம். இவற்றை நன்கு கற்பதனால் மக்கட் பண்பு சிறந்து விளங்கும் என்பது அறிஞர் கொள்கை. தமிழின் மறுமலர்ச்சியில் இக்கொள்கையும் ஓர் அம்சமாகும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, ஐம்பெருங் காப்பியங்களுட் சில, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் முதலியன அச்சில் வெளிவந்து சில்லாண்டுகளே ஆயின. இவற்றுள் கலித்தொகை, சிலப்பதிகாரம், திருக்குறள் முதலிய சில பண்டைப் பெருநூல்களைக் குறித்துப் புகழ்ந்துபாடி அவற்றை நம்மக்கள் கற்றல் அவசியம் என்பதை வற்புறுத்தியுள்ளமை மேலே காட்டப்பட்டது. இலக்கியக் கல்வியாலன்றியே பிற உபாயங்களாலும் நம்மக்கள் இகவாழ்க்கையில் மேம்பட்டு விளங்க வேண்டும் என்று கருதி, வேறு பல பாடல்களும் கவிமணி பாடியுள்ளார். 'வையமும் வாழ்வும்' என்ற பகுதியிலுள்ள பாடல்கள் பலவும் இத் தகையனவே.

பறந்து பறந்தெங்கும் - திரியும்
பறவை வாழ்வினைப் போல்
சிறந்த வாழ்வேதும் - இந்தச்
செகத்தில் கண்ட துண்டோ?

* * * *

ஆதலால் எந்நாளும் அழியாத பொருளாம்
ஆன்மாவை மேம்படுத்தி அறநெறியின் நின்று

நீதெலாம் அறஒதுக்கித் திருவருளும் பெற்று
சிவஞானச் செல்வரெனத் திளம்வாழ வோமே

என்ற பாடல்கள் மேற்கூறியதனை விளக்கும்.

இந்தியப் பண்பாட்டினையும் மக்கட் பண்புமேம்பாட்டினையும் நோக்கமாகக் கொண்டுள்ள கவிமணி அவற்றிற்குப் பகையாய் நின்று இடையூறு விளைத்து வரும் சமுதாய ஒழுக்கங்களைப் பெரிதும் இகழ்ந்து வெறுப்பது முற்றும் பொருத்தமே. இவர் இயற்றிய 'நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம்' இதற்கொரு சிறந்த சான்று. இந்நூல் சமுதாயச் சீர்திருத்தமாகிய நன்னோக்கத்தை மேற்கொண்டு நகைச்சுவைபடப் பிரகசன முறையில் அமைந்துள்ளது. தமிழிலே ஒரு நூதன இலக்கிய வகையை இது தொடங்கியுள்ளது என்று கூறலாம். இந்நூலுள் மருமக்கள் வழியைக் குறித்து,

நீரா வழக்கும் சென்மப் பகையும்
உற்றார் ருக்குள் உண்டாக்கும் வழி ;
அப்பனைப் பிள்ளை அண்ட வொட்டாவழி ;
பிள்ளையை அப்பன் பேண வொட்டா வழி ;
புருஷனை மனைவி போற்ற வொட்டாவழி ;
மனைவியைப் புருஷன் மதிக்க வொட்டாவழி ;
அண்ணனைத் தம்பி அடுக்க வொட்டாவழி ;
தம்பியை அண்ணன் தரிக்க வொட்டாவழி.

* * *

குடியை முடிக்கும் கொடிய தீவழி ;
அடிபிடி சண்டை அகலாப் பெருவழி ;
மனிதரைப் பேயாய் மாற்றும் பாழ்வழி

* * * *

இருவழிகட்கும் இடைவழியாய் வரும்
வழியிது போலிவ் வையகத் தெங்கும்
உண்டோ அம்மா ! உண்டோ அம்மா !

* * * *

அழுபவர் கண்ணீர் ஆருய்ப் போம்வழி
ஐயோ ! இவ்வழி ஆகா தாகாது

என்று இவர் பாடியுள்ளது மேற்கூறியதனைத் தெளிவுறுத்தும்.

இங்ஙனமாக, நமது பண்பாட்டினையே உயிர் நாடியாகக் கொண்டுள்ளன கவிமணியின் பாடல்கள். இந்நெறியைப் பின்பற்றியே தமது வாழ்வின் பெரும் பகுதியிலும் பாடி வந்திருக்கிருர். இவர் முற்போக்கான கருத்துடையவர் ; தூய உள்ளமும் சீரிய நோக்கமும் படைத்தவர் ; நமது சமுதாயம் பலவகை இன்னல்களும் நீங்கி அதற்குரிய உயரிய நிலையை அடைய வேண்டும் என்ற ஆழ்ந்த உணர்ச்சியைக் கொண்டவர் ; இது இவருடைய சம்பாஷணையிலும் எழுத்திலும் பிரதிபலிக்கிறது. இவர் தமிழிலக்கியங்களில் ஊறியவர் ; தமிழ் மக்களுடைய சரித்தை நன்கு உணர்ந்தவர் ; தமிழர்களுடைய உயர்ந்த லட்சியங்களிலும் ஒழுக்க நியதிகளிலும் ஈடுபட்டவர் ; ஆங்கிலக் கவிஞர்களின் பாடல்களில் திளைத்தவர் ; பிற சமுதாய சரித்திரங்களை ஊன்றி நோக்கி உணர்ந்தவர். ஆடம்பரம் சிறிதும் இல்லாதவர்; ஆதலால், பிரசங்க மேடைகளிலும் பிரசாரக் கூட்டங்களிலும் இவரைக் காண்பது அரிது. ஆனுல், அமைதியோடும் உள்ளுணர்ச்சியோடும் தமிழ்மக்களது நன்மையையே இடைவிடாது சிந்தித்து உழைத்து வருபவர். இவருடைய உழைப்பில் சுயநலம் என்பது சிறிதும் இல்லை; தூய வாழ்க்கையுடையவர் ; சந்தானம் அற்றவர் ; எனவே, அதுபற்றிய பாசபந்தங்களும் அற்றவர் ; ஆனுல், குழந்தைகளிடத்தில் பேரன்பு பூண்டவர். இவர் எழுதியுள்ள குழந்தைப் பாடல்கள் இதற்குச்

சான்று பகரும். 'மலரும் மாலையும்' என்ற கவிதைத் தொகுதியை,

> செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்கு
> இந்தநூல் உரியதாய் என்றும் வாழ்கவே

என உரிமை செய்துள்ளார்.

கவிமணியின் பிற்கால வாழ்வில் தேசியப் பற்றும் இவர் மனத்தில் இடம் பெற்றது. இந்தியா முழுவதும் பரந்து பெருக்கெடுத்துச் செல்லும் இப் பற்றுக்கு இவர் விலக்காய் ஒதுங்கி நிற்க முடியுமா? தேசியப் பற்றில் தம்மை இழந்து நின்ற அன்பர்கள் பலர் இவருடைய கவித்வ சக்தி அதற்கும் பயன்பட வேண்டும் என்று வற்புறுத்தி வந்தனர். கவிமணியின் உள்ளமும் இப்பற்றில் ஈடுபடத் தொடங்கியது. 'தேசக்கொடி', 'காங்கிரஸ்', 'கதர்', 'ஒற்றுமையின் உயிர்நிலை', 'நாட்டுக்கே உழைப்போம்' முதலிய பாடல்கள் இத்தேசியப் பற்றின் விளைவுகளாகும். தேசிய முன்னேற்றத்திற்கு இடையூறாய் அமைந்த 'தீண்டாமை' குறித்து உணர்ச்சி ததும்பப் பாடியுள்ளார். தொழிலின் பெருமையைக் கூறுமிடத்து,

> வாழ வேண்டுமெனில்—தொழில்கள்
> வளர வேண்டு மையா
> ஏழை யென்றொருவன்—உலகில்
> இருக்க லாகா தையா

என்றனர். பெண்களின் உரிமையைக் குறித்தும் பல அழகிய பாடல்கள் இவர் பாடியுள்ளார். அவர்களுக்குரிய பெருமைகளை,

> அல்லும் பகலும் உழைப்பவ ரார்? - உள்ளத்து
> அன்பு ததும்பி எழுபவ ரார்?
> கல்லும் கனியக் கசிந்துருகித் - தெய்வ
> கற்பனை வேண்டித் தொழுபவ ரார்?

உள்ளந் தளர்வுறும் நேரத்திலே - உயிர்
ஊட்டும் உரைகள் உரைப்பவ ரார் ?
அள்ளி யெடுத்து மடியிருத்தி - மக்கள்
அன்பைப் பெருக்கி வளர்ப்பவ ரார் ?

மண்ணக வாழ்வினை விட்டெழுந்தே - மனம்
மாசிலா மாணிக்க மாயொளிர்ந்து
விண்ணக வாழ்வை விரும்பிடவே - நிதம்
வேண்டிய போதனை செய்பவ ரார் ?

அன்பினுக் காகவே வாழ்பவ ரார் ? - அன்பின்
ஆவியும் போக்கத் துணிபவ ரார் ?
இன்ப உரைகள் தருபவ ரார் ? - வீட்டை
இன்னகை யாலொளி செய்பவ ரார் ?

என்ற செய்யுட்கள் விளக்கமாக நயம்பெற எடுத்து மொழிகின்றன.

பண்பாட்டினை உணர்த்தும் கவிமணியின் அரிய செய்யுட்களில் தமிழ்மக்கள் பெரிதும் ஈடுபட்டனர். தமிழ்நாடெங்கும் இவர் புகழ் பரந்து கமழ்ந்தது. செட்டி நாட்டரசர் ஸர். அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் கவிமணியை வரவழைத்து அன்போடு உபசரணை செய்து பாராட்டியது மேலதற்கோர் அறிகுறியே யாகும். கவித்துவத்தைப் போலவே, அருங் குணங்களாலும் இவர் சிறந்து விளங்குகிருர் என்பதைத் தமிழுலகம் உணர்ந்தது. இவரிடமிருந்து வாழ்த்துச் செய்யுட்கள் முதலிய பெறுதற்குப் பலரும் விரும்பினர் இதன் பயனுக, பல சமயோசிதச் செய்யுட்கள் வெளிவந்தன. பல சந்தர்ப்பங்களை முன்னிட்டும் அரிய செய்யுட்களை இயற்றித் தமிழ்மக்களை மகிழ்வித்துள்ளார். இவ்வகைப் பாடல்களில் ஒரு சிலவே அச்சிடப் பெற்றுள்ளன. எட்டய புரத்தில் பாரதி மண்டபம் திறக்கப்பட்ட பொழுது இவர் பாடிய செய்யுட்கள் இங்கே குறிப்பிடத்தக்கன.

1943-ல் தமிழ் நாட்டில் பொங்கியெழுந்த தமிழிசை இயக்கத்தின் அலைகள் கவிமணியின் உள்ளத்திலும் மோதின. அக்காலந்தொட்டுப் பற்பல கீர்த்தனங்களும் இவர் பாடி வருகின்றனர். இவைகள் பெரும்பாலும் தெய்வம் பற்றியனவாக உள்ளன. முத்துத்தாண்டவர் பதங்கள் முதலியவற்றிலே நாம் காணும் நயமும் அபிநயத் தகுதியும் இவற்றிலும் காணப்படுகின்றன.

பல்லவி

சொன்ன தெல்லாம் மறந்தாரோ? - என்னைச்
சோதனை செய்யத் துணிந்தாரோ?

அநுபல்லவி

செந்நெற் கழனி சூழும் தில்லைப் பதியாரன்று
கன்னம் குழிய முத்தம் கனிந்து கனிந்தளித்துச்
(சொன்ன)

சரணம்

வருவார் வருவாரென்று நித்தம் - வரும்
வழிமேல் விழியாய் நின்றேன் தோழி
ஒருவாரம் ஒருமாதம் ஒருவருஷமும் போச்சே
ஒருத்தி இருக்கி என்றிவ் வூரும் சிரிக்கலாச்சே
(சொன்ன)

இது போன்று கவிதைச் சுவை அமைந்த கீர்த்தனங்களும் பல உள்ளன. பாரதி மண்டபம் நிறுவப்பெற்ற பொழுது பாடிய கீர்த்தனம் வருமாறு:

பல்லவி

மண்டபம் வாழ்கவே - பாரதி
மண்டபம் வாழ்கவே.

அநுபல்லவி

தண்டமிழ் போல அவன்
தந்த கவிகள் போல
எண்டிசை யும் போற்றும்
இமய மலையே போல (மண்டபம்)

சரணம்

பாரத சக்திவளர் பீடமாய்
பைந்தமிழ்க் காலயமாய்
வீர சுதந்தி ரத்தின்
வெற்றி நிலைக்களமாய்
சூரிய சந்திரர் இத்
தொல்லுல குள்ளளவும் (மண்டபம்)

இதுபோன்று அழகுபெற வாய்ந்த கீர்த்தனங்களும் பல. தமிழ்நாட்டில் இசையும் அபிநயமும் தனிப்பட்ட சிறப்புடன் விளங்கி நமது பண்பாட்டின் மேன்மையை நமக்கு உணர்த்துகின்றன. கவிமணியின் கீர்த்தனங்கள் இந்நெறியிலும் நமது பண்பாட்டைப் போற்றியிருப்பது கண்டு மகிழத் தக்கது.

இவர் பல கீர்த்தனங்களையும் பதங்களையும் படித்துள்ளார்; ஆனால் இசைப் பயிற்சி பெற்றுக் கொண்டதில்லை. இங்ஙனமாகவும், இவர் கீர்த்தனம் முதலியவற்றைப் பாடுதல் பொருத்தமாகுமா என்று சிலர் கேட்கலாம். சாகித்தியம் இயற்றுபவர்க்குச் சங்கீதப் பயிற்சி நிரம்பி யிருப்பது அருமை; இவ்வண்ணமே சங்கீதம் பயின்றவர்களுக்குச் சாகித்தியத்திற்கு வேண்டும் மொழிப் பயிற்சி பெரும்பாலும் இருக்க மாட்டாது. இப்பொழுது தமிழ் நாட்டில் வழங்கி வரும் பதங்களும் கீர்த்தனங்களும், மொழி பற்றிய அளவில், பிழைமயமா யிருப்பதன் காரணம் இதுவே. வடமொழியிலுள்ள பதங்களும் கீர்த்தனங்களும் இவ்வாறே பிழை பொதிந்துள்ளன என்று தெரிகிறேன். இக்குறை நீங்க வேண்டுமாயின் சாகித்தியத்தின் ஆசிரியரும் இசை அமைப்பவரும் வேறுவேறாக இருக்க வேண்டும். நமது தமிழ்நாட்டில் பெரும்பாலும் பாட்டு இயற்றுபவர் வேறு; பண் அமைப்பவர் வேறு.

இது தொன்று தொட்டுவரும் வழக்கம். உதாரணமாக, பரிபாடலைக் கூறலாம். தேவாரப் பாடல்களுக்கு அவை தோன்றிச் சில நூற்றாண்டுகளுக்குப் பின் பண் அமைக்கப்பட்டது என்பது பிரசித்தம். மேலை நாடுகளிலும் சாகித்தியம் இயற்றுவோரும் இசையூட்டுவோரும் வேறாக இருப்பதுவே வழக்கம். இவ் வழக்கத்திற்கியையவும், தமிழின் நயம், கவித்துவத்தின் நயம்: இவற்றைப் பேணியும் கவிமணி இக்கீர்த்தனம் முதலியவற்றைப் பாடியுள்ளார். இசையூட்டுவோர் கீர்த்தனங்களைப் பலமுறை கற்று, அவற்றின் ரஸபாவங்களில் ஊறி, பின் தக்கதாய இசையை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

கவிமணியின் தமிழைக்குறித்துச் சில வார்த்தைகள்: இவருடைய தமிழ் என்றும் மனத்தில் போற்றி வைக்கத்தகும் பொற்களஞ்சியமாக உள்ளது. நல்ல தமிழ்; நமது மூதாதையரின் பண்பாட்டிலும் மரபிலும் ஊறித்தோய்ந்து இனிமை முற்றிய தமிழ்; உண்மை நிரம்பிய தமிழ்; கற்றார்க்கும் கல்லார்க்கும், நகரத்தினர்க்கும் நாட்டுப் புறத்தினருக்கும் ஒன்று போலவே இனிக்கும் தமிழ். இவ் இயல்புடைய தமிழ் இப்பொழுது நமது நாட்டில் அரிதாய்ப் போய் விட்டது. இழக்கமுடியாத இவ்வரிய செல்வத்தைப் பல ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் நமக்குப் போற்றி அளித்தவர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையே.

உண்மையான தமிழ் மரபு உணர்ச்சி வேண்டுமாயின், இவரது பாடல்களையே கற்கவேண்டும். மிகப் பூர்வகாலத்துள்ள இயற்கைத் தமிழின் இனிமை காண வேண்டுமாயின், இப்பாடல்களையே மீண்டும் மீண்டும் கற்கவேண்டும். அமர்ந்த இனிய மனோரம்மியமான தமிழ் மணம் வேண்டுமாயின், கவிமணியின் இப்பாடற் பகுதிகளிலே இனிது நுகரலாம். வருங்

காலத்துக்குரிய தமிழ் வேண்டுமாயின், இவற்றையே பலமுறை கற்கவேண்டும்.

மேலே குறித்துள்ள பண்பாட்டுணர்ச்சிகளின் காரணமாகத் தோன்றிய கவிதைகளைக் குறித்து இனி நோக்குவோம். கவிதையின் இயல்பை வரையறை செய்வதற்குச் சில நூற்றாண்டுகளாக நூற்றுக்கணக் கான இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் முயன்று வந் திருக்கிறார்கள். ஆனால், ஒருவரதுமுயற்சியேனும் இன்று வரை முற்றும் திருப்திகரமாய் முடிந்துள்ளது என்று சொல்வதற்கு இல்லை. சிவபெருமான் தன்மையைத் தான் கவிதையும் கொண்டிருக்கிறது. அவரது அடி யையும் முடியையும் மாலும் அயனும் காணமுடிய வில்லை என்பர். அதுபோலவே கவிதையின் இயல்பை யும் ஆராய்ச்சியாளர் கண்டு பிடிக்க முடியவில்லை. எனினும் இம் முயற்சிகள் பயனற்றன அல்ல.

கவிதையின் இயல்புகள் காலந்தோறும் இடந் தோறும் சூழ் நிலைகளுக்குத் தக்கபடி வேறுபடுகின் றன. அவற்றுள் ஒருசில அம்சங்களையே ஒவ்வோர் ஆராய்ச்சியாளரும் அறிய முயல்வது. ஆனால், தாம் கூறுவதே எல்லா வகையாலும் முற்றமுடிந்த உண்மை யெனத் தாமும் நம்பி வாசகர்களையும் மயங்கச் செய்து விடுகிறார்கள். இக்குறையினால் இன்னோரது நூல்கள் பயனற்றுப் போய் விடவில்லை. கவிதை இயல்புகள் ஒரு சிலவற்றின் முக்கியத்துவம் நன்றாக நம்மனத்தில் ஆழ்ந்து பதிந்து விடுவதற்கு இவ்வகை நூல்கள் உதவு கின்றன. அன்றியும் இந்நூல்களை நாம் கற்குந் தோறும் நமது அறிவு விசாலமடைகிறது. கவிதை அனுபவம் மேலும் மேலும் முதிர்வதற்கு இடமேற் படுகிறது.

ஆராய்ச்சியாளர்கள் எல்லோரும் உண்மைக் கவிதை பற்றிய ஒரு விஷயத்தில் ஒற்றுமை மன

முடையவராய் இருக்கிறார்கள். சிறந்த உண்மையான கவிதையைப் படித்த அளவிலே நம்மனத்திலே விவரிக்க முடியாத ஓர் இன்பம் உண்டாய் விடுகிறது. 'காதல் பிறந்த கதை', 'கருணைக் கடல்' முதலியன இத்தகுதி வாய்ந்த உண்மைக் கவிதைகளாம். இவை போன்ற கவிதைகளை ஒருமுறை கற்று இன்புறுவதோடு நமது மனம் முற்றும் திருப்தி அடைந்துவிடுவதில்லை. மீண்டும் மீண்டும் இவைகளை நுகரவேண்டும் என்னும் அவா நம்மனத்தில் சுரக்கின்றது. நுகர நுகரத் தெவிட்டுவதில்லை. என்றும் மாறாத இளமைத் தன்மையோடு நின்று நம்மனத்தைத் இப்பாடல்கள் கவர்கின்றன.

கவிமணியின் பாடல்களிற் சில சிறு குழந்தைகளின் சிவப்பூறிய மலர்வாயினின்றும் தேனினும் இனியவாய் மதுரித்துச் சுரக்கின்றன; சில நமது பெண்களின் இனிய குரலுக்கு இனிமை அளித்து அவர்களை மாசற்ற இன்ப உலகில் செலுத்துகின்றன; சில இளைஞர்களின் உள்ளத்தைக் கவர்ந்து இடங்கொண்டு அதனை அன்புத் தேனூற மலர்விக்கின்றன; சில அறிவில் முதிர்ந்து, தமிழில் முதிர்ந்து, கவித்துவ உணர்ச்சியிலும் முதிர்ந்து விளங்கும் நல்லறிஞர்களது ஆன்மாவைக் குழைவித்து, இனிமை கனிந்து ரஸம் ஊறிக் களிப்புறச் செய்கின்றன. பல பாடல்கள் பல தலைமுறைகளாகத் தமிழ் மக்களை இன்பூட்டி நிலவுமென்று உறுதி கூறலாம். 'கருணைக்கடல்' முதலிய சில பாடல்கள் என்றும் வாடாமலர்களாய் நித்திய மணங் கமழ்ந்து தமிழன்னையின் திருவடிகளில் ஒளிரும் என்று கருதலாம்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை தற்காலத்து வாழும் கவிஞர்களில் தலைசிறந்தவர்.